

# 'கல்கி' பொருளடக்கம்

சௌமிய, சித்திரை 15உ  1969 ஏப்ரல் 27உ


| | | | |
|---|---|---|---|
| பக்தி வளர்ப்போம்! | தலையங்கம் | — | 3 |
| பிரியாவிடை | ... | — | 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | ... | — | 6 |
| வைதேகி என்ற வைணவ வைபவம் | ரா. கணபதி | — | 7 |
| இதயத்தை நனைத்த இலக்கிய மழை! | கோமதி சுவாமிநாதன் | — | 12 |
| பொன்னியின் செல்வன் | அமரர் கல்கி | — | 18 |
| காண வேண்டிய கப்பல் | ரா. வீ. | — | 28 |
| ராமாயணம் | ராஜாஜி | — | 30 |
| செல்லாயும் சேரமும் | குண்டுமணி | — | 34 |
| ஞான ஒளி | கே. சுந்தரம் | — | 37 |
| அம்புலிக்கு அப்பால் | புஷ்பா – விஜயா | — | 42 |
| தீராத விளையாட்டு | கு. அழகிரிசாமி | — | 45 |
| சேதி தெரியுமா? | கே. பாலசுப்ரமணியன் | — | 56 |
| ஏழு சகோதரர்கள் | விக்டர் வாந்தயேல் | — | 61 |
| நாங்கள் நடிகைகள் | ஸ்ரீவேணுகோபாலன் | — | 63 |
| அம்மா அம்மாதான்.. | தாமரை புஷ்பம் | — | 76 |
| மகாபாரதம் | ராஜாஜி | — | 80 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

காங்கிரஸ் அரசாங்கங்கள்

ஐக்கிய முன்னணி அரசாங்கங்கள்

இந்தச்
சாய்ந்த
தூண்கள்
என்ன
அற்புதம்!

"ஆகா,
நமக்கு
ஆபத்தில்லை"

அந்நியக்
கடன்

PK

பொருளாதார நெருக்கடி



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 ★ இதழ் 39



# பக்தி வளர்ப்போம்!

**ச**மீப காலமாக இந்திய மக்கள் பகவானை விட்டு விலகிப் போகுமாறு செய்யப்பட்டுள்ளனர். நம் நாட்டின் அறிஞர்கள் இம்மக்களை மீண்டும் பகவான்பால் திருப்பினாலே எதிர்காலத்தைக் குறித்து நன்னம்பிக்கை கொள்ளலாம். சமய உணர்வைப் பொருளாசை வெற்றி கொண்டு விட்டது. சமயத்துக்கு மீண்டும் வெற்றி பெற்றுத் தந்தாக வேண்டும்.

ஹிந்து மதத்தின் புலமை மிகுந்த சித்தாந்தங்கள் தத்துவ உலக முழுதும் புகழெடுத்துள்ளன. எனினும், இந்தப் பாண்டித்தியம் மிகுந்த தத்துவ வாதங்கள் இன்று நம்மைக் காப்பாற்ற மாட்டா. புத்திபூர்வமான ஆராய்ச்சியால் ஈசுவரன் உண்டு என்று ஏற்றால் மட்டும் இன்று போதாது. பகவானது சாந்நித்தியம் எப்போதும் நம்முடன் இருப்பதாக உணர வேண்டியதே இன்று தேவை. தனி வாழ்விலும், பொது வாழ்விலும், நமது எல்லாக் காரியங்களிலும், நாம் பிறரிடம் நடந்துகொள்ளும் விதத்திலும் பகவான் நம்முடன் இருப்பதாக உணர்வு பெற வேண்டும். கஷ்ட காலத்தில் கடவுளைப் பிரார்த்தித்தால் மட்டும் போதாது. எப்போதுமே ஈசுவரனை வழிகாட்டியாகக் கொண்டு தெய்வத்துக்குப் பயந்து நடப்பவர்களாக நம் மக்கள் ஆக வேண்டும். தெய்வ உணர்வு அற்ற நிலை தொலைய வேண்டும்.

வானத்தில் பிரகாசிக்கும் பிதாவான சூரியனே நம் தேகத்தை வளர்க்கிறான். வாழ்வுக்கு வேண்டிய அனைத்தையும் அவனிடமிருந்தே பெறுகிறோம். நமது சதையிலும் ரத்தத்திலும் எலும்பிலும் உள்ள ஒவ்வோர் அணுவும் சூரியனைச் சார்ந்தே உள்ளன. அவன் தருகிற வெப்பமும் ஒளியும் இல்லாவிடில் நமக்கு வாழ்வே இல்லை. உடலுக்கு ஆதாரமாகிய சூரியனைப் போல், கண்ணுக்குத் தெரியாமல், மனித மனத்துக்கும் ஆதாரமாக ஒன்று உண்டு. அதனைச் சார்ந்தே மனித மனம் வளர்ந்திருக்கிறது. இவ்வாறு ஆதியிலிருந்து மனித மனத்தை வளர்த்திருப்பதே மதம். அது சூரியனைப்போல் திருஷ்டிக்குப் பிரகாசமாகத் தெரியாவிடினும், சூரியனைப் போலவே உண்மையானது; சூரியனைப் போலவே சக்தி நிறைந்தது. கண்ணுக்குத் தெரியாத ஒரு பேரறிவு இப்பிரபஞ்சம் முழுவதையும் நிர்வகிக்கிறது என்ற உணர்வைப் பெறுவதுதான் மதம். மனிதன் சிந்திக்கத் தொடங்கிய நாளாக, அவனது சிந்தனைக்கு இவ்வுணர்வே ஆதாரமாக இருந்து வளர்த்து வந்திருக்கிறது. சூரிய ஒளியினால் மனித உடல் தோன்றி வாழ்வது போல், மத உணர்வாலேயே மனித மனம் தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது. அனவரதமும் மதத்தின் சக்தியினாலேயே மனம் வாழ்கிறது. மதம் போனால், மனத்தின் ஒளியும் போய் விடும்; அடக்கப்படாத ஒரு பசித்த மிருகத்தின் நிலைக்கு மனிதன் திரும்பி விடுவான்.

சித்தாந்த வாதத்தில் பகவானை அங்கீகரிப்பது மட்டும் நமக்குப் போதாது. வாழ்க்கையில் வழிகாட்டும் ஜீவ சக்தியாக பகவானைக் கொள்ள வேண்டியதே நமது தேவை. இந்த உணர்வு இல்லாவிடில் நம் மனத்தைக் கொன்று கொண்டதாக—தற்கொலை புரிந்து கொண்டதாகவே—ஆகும். ஆன்மஹத்தி செய்து கொண்டவர்கள் இருள் உலகிலேயே அலைய வேண்டியதாகும் என்கிறது ஈச உபநிஷதம். சூரிய ஒளி இன்றி உடல் வளர முடியாதது போலவே, ஆன்மப் பொருளில் நம்பிக்கையும், சமய நம்பிக்கையும் இல்லாமல் மனம் வாழ முடியாது. மதத்திலிருந்து மனித மனத்தைப் பிரித்தால் அது மரணமே ஆகும். நீரில் தோன்றி, நீரில் வளருவதற்கே பழக்கப்படுத்திக் கொண்டுவிட்ட மீனை நீரிலிருந்து எடுத்தால் அது சாகிறது. இப்படியே மனிதனை மதத்திலிருந்து

விலக்கினால் அவனது அற்புதமான அறிவுச் சக்தி அழிந்து போகும்.

உலகாயத வாழ்வுக்கு மேலான ஒன்றை நினைக்க மறுக்கிற, சமய நம்பிக்கை தேவையில்லை என நினைக்கிற சித்தாந்தமே நாஸ்திகம். சித்தாந்தமாக மட்டும் இன்றி, இன்று நமது பாபமாகப் பரவி வரும் தெய்வ உணர்வற்ற நிலை நாஸ்திகத்தினும் மோசமானது. இது பகவானுக்கும், அவனது ஆளுகைக்கும் சவால் விடுவதாகும். முன்பெல்லாம் நம் மக்கள் பக்தியுடனேயே இருந்தனர். ஆனால் நவீன அறிவு வளர்ச்சியினால் படைக்கப்பட்ட அறிவாளிகள் சித்தாந்த ரீதியில் நாஸ்திகர்களானதோடு மட்டுமின்றி, தெய்வ உணர்வு இல்லாத நிலையில் வாழ்வதற்குத் தங்களைத் துணிச்சலுடன் பழக்கிக்கொண்டு விட்டனர். இதுவே தேச வாழ்வின் எல்லாத் துறைகளிலும் புகுந்து நாசம் விளைவித்து வருகிறது. நமது வியாதிகள் அனைத்துக்கும் மூலமான இதற்குப் பரிகாரம் காண வேண்டும். நாஸ்திகம் என்பது கடவுள் என்ற கருத்தை ஏற்காத ஒத்துழையாமைக் கொள்கையே. இன்று காணும் பக்தியின்மையோ மதம் தருகிற மனித தரும நெறிகளையும் எதிர்க்கின்ற வாழ்முறையாகி விட்டது.

நோயின் மூலத்துக்குப் போகாமல வெளி அடையாளங்களை மட்டும் குணம் செய்தால் பயனில்லை. வெளி அடையாளங்களை மட்டும் குணப்படுத்தும்போது எதிரிடையான தீய விளைவுகளும் ஏற்படும். எனவே, நோயின் மூலத்துக்கே சென்று குணப்படுத்த வேண்டும். மூலகாரணத்தைக் கண்டபின் தயங்காமல், தீவிரமாகச் சிகிச்சை தர வேண்டும். இன்று நாம் செய்ய வேண்டிய பணி இதுவே.

உயிரினம் மேலும் மேலும் பரிணமம் பெற்று வருகிறது என்று கூறிய பெரியவர் டார்வின் பகவானையோ, அவனது தரும ஆட்சியையோ மறுக்கவில்லை. நாமும் பரிணமவாதிகளாக இருக்கப் பிரியப்பட்டால், டார்வினைப் பின்பற்றுவோம். ஒவ்வொரு கணமும் பகவான் உடன் இருப்பதை நினைவு கொள்வோம்; உணர்வோம். நம் சிந்தனைக்கு அவனையே துணை கொள்வோம். இந்த உணர்வின் தனிச் சிறப்புதான் மனிதனுக்குச் சூழ்நிலையை எதிர்த்து நிற்கச் சக்தி தந்து, உயிரினங்களுக்கு அவனை அரசனாக்கியது. பௌதிகமான அதிகார சக்தியில் மனித இனம் அரசு பெற்றது மட்டுமின்றி, ஆன்மிகமாகவும் சிறப்புப் பெற்றது.

சமூகத்தின் மேல் மட்டத்தில் உள்ளவர்கள் மக்களின் மதத்தை அழித்து, தங்களையும் அழித்துக் கொள்ளாமல் இருப்பாராக! ஆன்மஹத்தி செய்து கொண்டால் ஏற்படும் இருள் வாழ்வு பற்றி உபநிஷத ரிஷி கூறும் சத்தியத்தை அவர்கள் மீண்டும் கற்றுணர்வாராக!

நடைமுறை உலக வாழ்வுக்குப் பணம் வேண்டியதுதான். ஆனால் உண்மையான உழைப்பின் மூலமே அதைச் சம்பாதிக்க வேண்டும். பிறரைக் கெடுக்காமலே சம்பாதிக்க வேண்டும். உண்மையான உழைப்பை மதிப்பீடு செய்யவும், அந்த மதிப்பீட்டைச் சட்டபூர்வமாக ஜாக்கிரதை செய்யவுமே ஏற்பட்டது பணம். அதன் பயனை மிகையாக எண்ணுதிருப்போம். காலம் கடக்குமுன் நம் பொருளாசை எவ்வளவு மடமையானது என்று உணர்வோம்.

தெய்வத்திடம் பயந்து, எல்லா விவகாரங்களிலும் நேர்மையாக நடந்து, நம் மதிப்பை உயர்த்திக் கொண்டு, உலக நாடுகளிடை நம் தேசத்தின் மதிப்பையும் உயர்த்துவதற்கு உதவுகிற மதமே நமது உண்மையான செல்வம். பக்தியின்மை என்பது சமீப காலமாக நம் தேச வாழ்வை இழிவுபடுத்தி வரும் விஷம் என்று வெறுத்து ஒதுக்கி, மீண்டும் பகவான்பால் திரும்பினால் அதன்பின் காலக்கிரமத்தில் அச்சடித்த பணமும், உத்தியோகமும், அந்தஸ்தும், சுயமரியாதையும் தாமே வரும்.

ஈசுவரனை அடையவும், உத்தமமான வாழ்க்கை நடத்தவும் பக்தி மார்க்கம் ஒன்றே வழி. பற்றின்மையுடனும், சமபாவத்துடனும் நமக்கும் சமூகத்துக்கும் உரிய கடமைகளைச் செய்து, நிரந்தர சுகம் பெற பக்தி என்ற நம்பிக்கையே அடிப்படை. பக்தியிலிருந்து தருமம் வெளிப்படுகிறது. பக்தி போனால், தருமமும் போலியாகிவிடும்; வெறும் லௌகிக முன்னேற்றத்துடன் பிணைக்கப்பட்டதாகும். தருமம் என்பது பயனுக்காக மட்டும் மனிதர்களால் சிருஷ்டி செய்யப்பட்டதல்ல. பயன் தருவதோடு, நன்மையாகவும் விளங்கும் தருமத்தைப் பக்தியும் நம்பிக்கையுமே பெற்றெடுத்தன.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)



## ஆசாரியர் அருள்வாக்கு

மோட்சம் என்ற உப்பரிகைக்குச் செல்ல ஜீவனாகிற பட்சி கிளம்புகிறது. ஞானம், வைராக்கியம் என்ற இரு இறக்கைகளும் பலமாக இருந்தாலே பட்சி உச்சி மாடத்தை அடைய முடியும்.

# பிரியா விடை

இம்மாதம் இருபத்தியோராம் தேதி நமது ஆப்த நண்பர் ஒருவர் விடைபெற்றுச் செல்கிறார். அவர் தாம் அமெரிக்க தூதர் செஸ்டர் பௌல்ஸ். அவருக்கு இந்தியா தாய் நாடு போன்றே விளங்கியது. அந்த அளவுக்கு இந்தத் தேசத்தின் பால், இங்குள்ள மக்களின் பால் அவருக்கு அன்பு. இந்த அன்பு காரணமாகவே அவர் இரண்டாவது தடவையாகவும் அமெரிக்கத் தூதராக இங்கு வரச் சம்மதித்தார். இதில் கென்னடிக்கு ரொம்பவும் மகிழ்ச்சி ஏற்பட்டது. ''இந்தியாவையும் ஆசியாவையும் இவரைவிட நன்றாக உணர்ந்த வேறு ஓர் அமெரிக்கர் கிடையாது'' என்றார் கென்னடி அப்போது. முதல்முறை அமெரிக்கத் தூதராக வந்தபோது செஸ்டர் பௌல்ஸ் இங்கு அனுப்பப்பட்டு வரவில்லை. தாமாகவே இங்கு வர விருப்பம் தெரிவித்தார். ஜனாதிபதி ட்ருமன் இவரை அழைத்து, 'என்ன வேலை வேண்டும்?' என்று கேட்டபோது, ''இந்தியாவில் எனக்கு வேலை கொடுத்தால் அந்த நியமனத்தை நான் மறுக்கவே மாட்டேன்'' என்றார் செஸ்டர் பௌல்ஸ்.

இந்தியாவின் மூலை முடுக்குகளிலெல்லாம் சுற்றுப் பயணம் செய்து அதன் இதயத் துடிப்பை அறிந்தவர் அவர். உழவையும் தொழிலையும் தட்டிக் கொடுத்து, உற்சாகப் படுத்துவதில் நம்பிக்கை கொண்டவர். விவசாயத்தில் மகத்தான முன்னேற்றம் கண்டிருக்கிறது இந்தியா; இங்கு இத்துறையில் பெரும் புரட்சி நிகழ்கிறது என்று பத்திரிகையாளரைச் சந்திக்கும் போதெல்லாம் குறிப்பிடுவார்.

செஸ்டர் பௌல்ஸின் மனைவியும் மக்களும் அவரைப் போலவே இந்நாட்டின்பால் மிகுந்த பரிவும் பிரியமும் கொண்டிருந்தார்கள். அவர் மகள் ஸிந்தியா டில்லி பொதுப் பள்ளிக் கூடத்திலும், பின்னர் சாந்திநிகேதன் பல்கலைக் கழகத்திலும் படித்தார். ஸிந்தியா எழுதிய ஒரு புத்தகத்தின் பெயர் 'இந்தியா என் வீடு.' செஸ்டர் பௌல்ஸின் மனைவியார் மனத்தால் மட்டுமின்றித் தோற்றத்தாலும் இந்தியராக விளங்க முற்பட்டவர். இங்கு இருக்கும்போது மட்டுமின்றி அமெரிக்காவிலும் கூடப் புடவை தான் அணிந்து கொண்டிருப்பார்!

இந்த அளவுக்குப் பாரதத்தின் நலனிலும் முன்னேற்றத்திலும் ஈடுபாடு கொண்டு பாரத மாதாவின் புதல்வராகவே திகழ்ந்த செஸ்டர் பௌல்ஸ் அமெரிக்கா திரும்பும் போது ஒரு சகோதரனைப் பிரியும் உணர்ச்சியே நமக்கு ஏற்படும். செஸ்டர் பௌல்ஸ் குடும்பத்தினருக்குப் பிரியாவிடை கொடுத்து அனுப்புகிறோம்.

# என்ன சேதி?

## இந்தியாவின் நேசக் கரம்

கிழக்குப் பாகிஸ்தானில் சமீபத்தில் பெரும் புயல் வீசிச் சுமார் ஐந்நூறு பேர்கள் உயிர் இழந்திருக்கின்றனர். ஆயிரக்கணக்கான பேர் வீடு வாசல் துணிமணிகள் இழந்து பரிதவிக்கின்றனர். இந்திய அரசாங்கம் அவர்களுக்கு மருந்துகளும் துணிகளும் அனுப்பி உதவத் தீர்மானித்துள்ளது.

இந்திய வெளிவிவகார அதிகாரி ஸ்ரீ கேவல் சிங், தில்லியிலுள்ள பாகிஸ்தானின் தூதுவரை அணுகி, மேற்கண்ட பொருள்களைக் கிழக்குப் பாகிஸ்தானில் யாருக்கு அனுப்பி வைக்க வேண்டும் என்று தமது அரசாங்கத்துக்குத் தெரிவிக்குமாறு கோரியிருக்கிறார்.

பாகிஸ்தானுக்கும் நமக்கும் பல விஷயங்களில் கருத்து வேறுபாடு இருப்பினும், இடுக்கண் உற்ற காலத்தில் பாகிஸ்தான் கேட்பதற்கு முன்பே இந்திய அரசாங்கம் உதவ முன்வந்தது பாராட்டப்பட வேண்டிய விஷயம்.

அன்பும் நேசமும் காட்டக்கூடிய வாய்ப்பு ஏற்படும் சந்தர்ப்பங்களை நழுவ விடாமல் செயல்படுவதே பெரிய ராஜதந்திரம்.

## ஒரு முஸ்லிமின் பக்தி

ஜனாப் வி. ஹாஸம்பாய் காஸாபாய் என்ற ஒரு முஸ்லிம் குஜராத் மாநிலத்தில், வட்ரா என்ற கிராமத்தில் உள்ள ஒரு கோயிலுக்கும் ஓர் ஆரம்பப் பள்ளிக்கும் மூன்று லட்ச ரூபாய் நன்கொடை வழங்கியிருக்கிறார்.

இவருடைய இந்த அரிய பணியை குஜராத் மாநில கலாசார மந்திரி சிமன்பாய் பட்டேல் பாராட்டியிருக்கிறார்.

இந்த அரிய பண்பைப் பார்க்கும்போது, திப்புசுல்தான் ஸ்ரீ ரங்கநாதர் ஆலயத்துக்கு மான்யங்கள் கொடுத்தது நினைவு வருகிறது.

அதே போல் ஹிந்துக்கள் நூற்றுக்கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் நாகூர் தர்க்காவுக்கு ஆண்டுதோறும் சென்று வருவதும் நினைவுகூர வேண்டும்.

இப்படி இரு சமூகங்களும் அன்னியோன்னியமாக வாழ்ந்து வருவது நம் நாட்டில் இயல்பான பண்பு என்பது காந்தி மகானின் உறுதியான நம்பிக்கையாக இருந்து வந்தது.

காந்தி நூற்றாண்டு ஆண்டில் அவர் மனத்துக்குகந்த ஒரு செயலைக் குஜராத் முஸ்லிம் அன்பர் செய்திருப்பதை மன நிறைவோடு எல்லோரும் வரவேற்பார்கள்!

# ராஜாஜியின் கருத்துக்கள்

மேற்கு வங்காள சர்க்கார் விடுக்கிற சவாலை ஏற்பது தவிர தில்லி அரசாங்கத்துக்கு வேறு வழி இல்லை. அதாவது தில்லி சர்க்கார் உடனேயே மேற்கு வங்க ஆட்சி அதிகாரம் முழுவதையும் தானே எடுத்துக் கொள்ள வேண்டும். சாஸனப்படி இப்போதே இவ்வாறு செய்யாமல், நீதி விசாரணை ஆராய்ச்சிக்கும் தீர்ப்புக்கும் காத்துக் கொண்டிருந்தால் அது வெறும் பயங்காளித்தனமேயாகும். நீதி விசாரணையின் அடிப்படைத் தேவையில்லாத — யூனியன் நிருவாகத்தின் முடிவுக்குட்பட்ட விஷயம் இது. தும்பை விட்டு வாலைப் பிடிக்க முடியாது.!

குடும்பக் கட்டுப்பாட்டு உபாயங்களை உயர் வர்க்கத்தினருக்குத் தந்து, அவர்கள் பசு வேகத்தில் மனம் கொண்டபடி ஈடுபடுவதற்கு வசதி தருவதைக் காட்டிலும், அவர்களைப் பிரம்மசரிய வாழ்க்கைக்கு ஊக்குவது மிகவும் யுக்தம். பிரம்மசரியத்துக்குப் பிரதிக்ஞை பூண்ட இளைஞர்களையும், யுவதிகளையும் கொண்டு சமூக சேவையும், தேச சேவையும் பெறலாம். வழக்கமான இல்லற வாழ்வில் ஆணையும் பெண்ணையும் பிணைத்துவிட்டு அவர்களுக்குக் கருத்தடைச் சாதனம் தருவதைக் காட்டிலும், அவர்களைப் பிரம்மசாரிகளாக இருப்பதற்கு ஊக்கி, போதனை, நர்ஸிங் முதலிய பணிகளில் பயிலுவிப்பது சிலாக்கியம். கலியாணமானபின் இயற்கை உந்தலை ஒருவர் அடக்குவார் என எதிர்பார்ப்பதற்கில்லை. கலியாணமாகாதவர்களைப் பிரம்மசரியப் பிரதிக்ஞை பூணச் செய்தால் அவர்கள் பிரதிக்ஞையைக் காப்பாற்றுவது அவ்வளவு கஷ்டமல்ல. இல்லறத்தாரும் உடலின்பத்தை விடுக்க வேண்டும் என்றார் காந்திஜி. ஆயினும் அதைவிடத் திருமணம் ஆகாதவரிடமே பிரம்மசரியத்தை அதிகம் எதிர்பார்க்க முடியும். இதனைப் பலர் அறியாதிருக்கலாம்.

மேற்சொன்னது போன்ற ஒரு திட்டம் நூறு சதமும் நிறைவேறும் என்று சொல்ல முடியாது. சிறு தோல்விகளை அநுமதித்தே ஆக வேண்டும். மொத்தத்தில் நாம் எதிர்பார்ப்பதைவிட நற்பயன் விளையும். இயேசு சங்கத்தின் (Society of Jesus) பயிற்சி விதிகளை இவ்விஷயத்தில் நாம் பின்பற்றவேண்டும்.

இன்று அவசியமான சமூக சேவைகளுக்கும் பெரும் செலவு செய்ய வேண்டியுள்ளது. இதையே பிரம்மசரியத்துக்கும், தேச சேவைக்கும் பிரதிக்ஞை பூண்டவர்களிடமிருந்து குறைந்த செலவில் பெறலாம். இப்படிப்பட்ட பணிக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளக்கூடிய தேச பக்த இளைஞரும், யுவதியரும் நம் நாட்டில் நிறைய உள்ளனர்.

நமது நகரங்களைப் பாழ்படுத்தும் பல அம்சங்களில் ஒன்று மத்திய — மாகாண நிதி இலாகாக்களின் அருமையைக் கண்ணுறும். நகரங்களில் வீட்டைச் சுற்றி உள்ள காலி இடங்களைக் கண்டவுடன், பணத்துக்குப் பசித்த சர்க்கார் அந்த இடங்களுக்கும் சந்தை மதிப்புப் போட்டு, வரி விதிக்க எண்ணுகிறது. பணக்காரர்களின் மீது பளுவை ஏற்றினால் ஏழைகள் சந்தோஷப்படுவார்கள் என்பது 'ஜனநாயக' மந்திரிகளின் கருத்து. இப்படியாக, ராஜ்ய சர்க்காரால் மனையின் காலி இடத்தைக் காட்டி, சொத்து வரி விதிக்கப்பட்டு, இதற்கு 'நகரப்புற நில வரி' என்று பெயரும் இட்டு, இந்த வரி அரசியல் சாஸனப்படி செல்லத்தக்கது என ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பும் தந்துவிட்டது. இது மிகவும் துரதிருஷ்டவசமானது.

வீடுகளுக்கு உரியவர்கள் புது வரியைச் செலுத்தவே செய்வர். அந்தச் செலவுக்கு ஈடு கட்டுவதற்காக, காலி மனையில் தரக்குறைவான கடைகளோ, வேறு வாடகைக்குரிய கட்டுமானங்களையோ அமைப்பார்கள். மரங்கள் தழைத்த தோப்பு நகரங்கள் பூர்வகால நினைவாக மட்டுமே ஆகும்.

போக்குவரத்தை வசதியாக்குவதற்காக, பழைய பெரிய விருட்சங்களை வெட்டுவதற்கு ஜப்பானில் ஒரு நீதிபதி தடை விதித்திருக்கிறார். டோக்கியோ போக்குவரத்துத் துறையினர் கோரிய உரிமையை அவர் ஏற்கவில்லை. 'சாலைகளுக்குப் பதில் வேறு புதுச் சாலை போடலாம்; ஆனால் பல்லாண்டுகளாக வளர்ந்துள்ள அழகிய மரங்களின் இடத்தில் புது மரங்களை உண்டாக்க முடியாது' என்று அறிவுசார்ந்த வார்த்தைகளைக் கூறியிருக்கிறார் நீதிபதி.

ஹரிஜனங்களுக்கு மேலும் பத்தாண்டுகள் தனித் தேர்தல் தொகுதிகள் ஒதுக்க வேண்டும் என்று இந்திய சர்க்கார் முடிவு செய்திருப்பதை நான் வரவேற்கவில்லை. தனியாக ஸ்தானம் ஒதுக்கும் வரையில் ஜாதி ஹிந்துக்களுக்கும், ஹரிஜனங்களுக்கும் இடையே உள்ள பிரிவு மறையாது; புத்துயிரே பெறும். மற்றோருடன் ஹரிஜனங்கள் சமமாகக் கருதப்பட்டு, அவர்களுடன் சக்தியுடன் போட்டியிடுவதற்கே துணிச்சலுடன் திட்டம் வகுக்க வேண்டும். ஹரிஜனங்களின் தேவை இப்படிப்பட்ட திட்டமேயாகும். ஸ்தானங்கள் ஒதுக்குவதால், உண்மையில் ஹரிஜன சமுதாயத்துக்குச் சமூக முன்னேற்றம் ஏற்படுவதில்லை; ஒவ்வொரிடத்திலும் உள்ள ஆள்கிற கூட்டத்தினரின் கட்சி நலனுக்கு இவ்வித ஒதுக்கல் உதவி புரிவதோடு சரி. இப்போது தனித் தொகுதிகளை நீடித்திருப்பதும், அடுத்த தேர்தலில் காங்கிரஸுக்கு ஒட்டு மொத்தமாக வோட்டுப் பெறுவதற்குத் தருகிற லஞ்சமேயாகும்.

ஏப்ரில் 14ந் தேதி இரவு ஸ்ரீ ராம்தாஸ் காந்தி பம்பாய் ஆஸ்பத்திரி ஒன்றில் காலமானார். இவரோடு காந்திஜியின் புதல்வர்கள் அனைவரும் மறைந்து விட்டனர். இப்போது அவரது பேரன் பேத்திகளே உள்ளனர். இறுதி வரை ராம்தாஸ் காந்தி தமது பிதாவான மகானை மனப்பூர்வமாகப் பின்பற்றி வந்தார்.

காந்திஜி விரும்பிய கீதம்

# வைதேகி என்ற வைணவ வைபவம்

ரா. கணபதி



உண்மையான பக்தனின் சிறப்பியல்புகள் பலவற்றை 'வைஷ்ணவ ஜனதோ' பாடலில் அடுக்கிக் கொண்டு போகிறார் நரஸிமேதா. 'மனத்தாலும் மொழியாலும், மெய்யாலும் தூய்மையில் நிலைத்து நிற்பவனே உண்மையான பக்தன்' என்று சொல்ல எண்ணிய நரஸிமேதா, 'இவ்வாறு திரிகரணசுத்தம் பெற்றவனை ஈன்றவளே மகா பாக்கியசாலி' என்று முடிக்கிறார். (தன தன ஜனனீ தேனீரே)

வைஷ்ணவ லட்சணங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் அடியாரை உருவகமாகத் தீட்டிய ஓவியர் கனுதேசாய் 'உண்மை வைஷ்ணவனின் அன்னையே பாக்கியசாலி' என்ற சொற்றொடருக்கும் ஒரு தாயின் சித்திரத்தைத் தீட்டியிருக்கிறார்.

'வைஷ்ணவனைப் பெற்றெடுப்பதுகூட ஒரு வைஷ்ணவ லட்சணமா என்ன?' என்று முதலில் தோன்றியது.

ஆனால் ஓவியத்தில் காட்சி தரும் தாய் சாட்சாத் சீதாதேவி என்பதை மனத்தில் வாங்கிக் கொண்டபின் கேள்வி மறைந்து விட்டது.

உண்மையான வைஷ்ணவர்களின் வரிசையை வகுக்கும்போது அதில் பிராட்டி இடம் பெறாமல் இருக்க முடியுமா? வைஷ்ணவ லட்சணங்களில் சகலமும் அவளிடமிருந்தே பிறந்தவை அல்லவா?

'வைஷ்ணவம்' என்றால் 'விஷ்ணுவைக் குறித்தது' என்று பொருள். விஷ்ணுவின் இதயத்தில் வாழ்பவள் அன்னை. எனவே,

மாணவர் இலக்கியத் திறனாய்வுப் போட்டியில் மூன்றாவது பரிசு பெற்றவராக அறிவிக்கப்பட்ட திரு சாசகான் கனி அவர்கள், போட்டி விதி முறைப்படி கட்டுரை எழுதியபொழுது மாணவராக இல்லை என்று தெரிய வருகிறது. எனவே, 'அவனும் அவளும்' கதைக்குத் திறனாய்வுக் கட்டுரை எழுதிய திரு நா. ரா. மோகன், (விலங்கியல் இரண்டாம் ஆண்டு, தியாகராசர் கல்லூரி, மதுரை - 9) மூன்றாவது பரிசைப் பெறுகிறார். அவரது திறனாய்வுக் கட்டுரை வரும் 'கல்கி' இதழில் இடம் பெறும்.

விஷ்ணுவைக் குறித்தவை மட்டுமின்றி, விஷ்ணுவின் ஜீவ ஆதாரமே அவள்தான்.

அன்னையைச் செல்வத்தின் கடவுளாகச் சொல்கிறோம். சாதாரணச் செல்வம் மட்டும் அல்ல. திருமாலின் இதய கமலத்தில் சுரக்கும் கருணைத் தேனாகிய செல்வத்துக்கும் அவளே மூர்த்தியாவாள். அவன் இயங்கி அருள்பாலிப்பது அவளால்தான். இதைத்தான் வைஷ்ணவர்கள் 'புருஷகாரம்' என்பார்கள். ஐயனின் அருளுக்கு ஒரு வடிவமாகவே அமைந்தவள் தேவி.

அரக்கர்களிடம்கூட அருள் கொண்டவள் அன்னை. தண்டகவனத்தில் ஸ்ரீ ராமனிடம் ஒரு முறை, ''இந்த அரக்கர்கள் நம்மை என்ன செய்தார்கள்? ஏன் இவர்களைக் கொல்வதாக ரிஷிகளுக்கு வாக்குத் தந்தீர்கள்?'' என வினவினாள்.

பிறகு அவளே ராவணனிடமும், அரக்கிகளிடமும் சொல்லொணாத் துன்பம் அடைந்தாள். ராவண வதத்துக்குப்பின் அவளது துன்பத்திலிருந்து விமோசனம் பிறந்த பிறகும் அன்னை அரக்கிகளைத் தண்டிக்க எண்ணவில்லை. 'குற்றம் செய்யாதார் யார்?' (நகச்சித் நாபராத்யதி?') என்று கூறி அவர்களை மன்னித்த தயாமூர்த்தி அவள். அதாவது வைஷ்ணவத்தின் வைபவமே அவள்தான்.

எனவே, நரஸிமேதாவின் பாடலைச் சொற்கள் மட்டும் கொண்டு பார்க்கும்போது பிராட்டியை வைஷ்ணவ வரிசையில் சேர்ப்பது பொருந்துமா என்ற கேள்வி எழுந்தாலும், அந்தப் பாட்டின் பொருளைக் கொண்டு பார்த்தால், வைஷ்ணவத்தையே வாழ்விக்கும் அன்னையின் திரு உருவத்தைச் சேர்த்திருப்பது மிக மிகப் பொருத்தமாகவே தெரியும்.

வைஷ்ணவர் என்றால் 'திருமாலின் அடியார்'. எப்போதும் திருமாலின் அடிகளில் ஆர்ந்த திருக்கரம் உடையவள் தேவி. எனவே, அனந்த பதுமநாபனின் பதுமபாதங்களை அனவரதமும் அழுந்தப் பிடித்துக் கொண்டிருக்கும் பிராட்டியைக் காட்டிலும் பெரிய வைஷ்ணவர் இல்லை.

'சகல உலகச் சக்கரவர்த்தியின் இல்லாள்' (அசேஷ லோகாதி நாத க்ருஹிணி) என்று திருமகளைச் சொல்கிறார் ஸ்ரீ ஆதிசங்கரர்.

ஆனால் இங்கு ஓவியத்தில் நாம் காண்பது சகல உலகச் சக்கரவர்த்தியின் இல்லாளையா? இல்லை. அயோத்திச் சக்கரவர்த்திப் பதவியையும் இழந்து காடு புகுந்த ராமசந்திரனின் துணைவியையே இங்கு காண்கிறோம். அதுவும் அந்த ராமசந்திரனுடைய துணையும் இல்லாத அவல நிலையில் காண்கிறோம்.

மங்கள நிலையமான லட்சுமி, சோகத்தின் உருவமாக ராவணனின் அசோக வனத்தில் வாழ்ந்த நிலையை இங்கு காண்கிறோம்.

'பாக்கியசாலியான அன்னை'யைப் பற்றி நரஸிமேதா கூறுகிறார். இங்கு நாம் காண்பதோ பரம அபாக்கியவதியான நிலையிலுள்ள வைதேகியை அல்லவா? ஆகா அது தான் எப்படிப்பட்ட துர்ப்பாக்கிய நிலை? இந்நிலையில் அவளுக்கு அழுகை தவிர வேறெதுவும் தெரியவில்லை என்றல்லவா கம்பர் கூறுகிறார்?

**விழுதல், விம்முதல், மெய்யுற**
**வெதும்புதல், வெருவா**
**எழுதல், ஏங்குதல், இரங்குதல, ஸ்ரீராமனை**
**[எண்ணித்**
**தொழுதல், சோருதல, துளங்குதல்,**
**துயர் உழந்து (உ)யிர்த்தல்**
**அழுதல் அன்றி மற்(று) அயல் ஒன்றும்**
**செய்குவதறியாள்**

என்று அவலங்கள் அனைத்தையும் கவி அடுக்கிக் கொண்டே போகிற நிலையில் இங்கு தேவியைக் காண்கிறோம். இவளை எப்படிப் பாக்கியசாலி (தனதன ஜனனி) என்று கூறுவது ?

சிறிது சிந்தித்துப் பார்த்தால், சீதாதேவியின் அசோக வனக் கோலத்தை, 'மன மொழி மெய்களால் தூய்மையில் நிலைத்தவளின் அன்னையே பாக்கியசாலி' என்ற சொற்களுடன் இணைத்துப் பார்ப்பதில் தனியானதொரு பொருத்தம் தெரிகிறது.

அசோக வனத்தில் சோக மூட்டத்தில் வாட்டமுற்ற தேவியிடமே மன, மொழி, மெய்களின் பூரணத் தூய்மையைக் காண்கிறோம். அவளது மனத்தில் ராமனையன்றி வேறு நினைவில்லை. அவளது வாக்கில் ராம நாமத்தையன்றி வேறு பேச்சு இல்லை. அவளது உடலின் தூய்மையைப் பற்றிச் சொல்லக்கூட வேண்டுமா என்ன? ராக்ஷஸேந்திரனும், அரக்கிகளும் படாத பாடுபடுத்தியும் இந்தத் திரிகரணங்களின் கற்புத் தூய்மையை இம்மியும் தளர விடாதிருந்தவள் அசோகவனத்து ஜானகி.

சீதை என்ற வியக்தியைவிட இந்த மனோ-வாக்கு-காயத் தூய்மையே பிரம்மசரியத்தின் திருஉருவான பாவன ஆஞ்சநேயனுக்குப் பளிச்சென்று தெரிந்தது. இதனால்

தான் பிராட்டிக்குப் பிரானின் மோதிரத்தைத் தந்து, பிராட்டியின் சூடாமணியைப் பிரானுக்குப் பெற்றுத் திரும்பிய மாருதி, ஸ்ரீ ராமனிடம் 'கண்டேன் சீதா தேவியை' என்று கூருமல்,

''கண்டனென் கற்பினுக் கணியைக்
கண்களால்''

என்ருன்.

சீதை சாம்பியும் மங்கியும்தான் இருந்தாள் அசோகவனத்தில். ஆயினும் அப்போதும் அவளது பாதிவிரத்தியப் பொலிவு கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

கற்பு என்ற தத்துவத்தின் பேரொளிப் போர்வையில் சீதையின் இயல்பான சரீரப் பொலிவு மங்கிப் போயிருந்தது — வெயிலில் ஏற்றி வைத்த விளக்குப் போல்.

'வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யாள்' என்பது கம்பன் வாக்கு. அவள் மேனி தீபமாகத்தான் இருந்தது. ஆனால் அதனினும் ஒளி பொருந்திய வெயில் வெள்ளமான கற்பு நெறியில் அந்தத் தீபத்தின் பொலிவு எடுபடவில்லை.

பெண்களின் மன மொழி மெய்த் தூய்மைக்கு உறைவிடமான கற்பினால் ஸ்ரீமந் நாராயணனுகிய ராமனே அன்பு செய்த வைதேகியைவிடப் பெரிய வைஷ்ணவரும் உண்டா ?

அசோக வனத்து அபலேயாக அவள் இந்தக் கற்பைக் காட்டியது மட்டுமின்றி, இதற்குமுன்பு அயோத்தியில் ஐயனுடனேயே யுத்தம் புரியுமளவுக்கு ஆவேசத்துடன் எழுந்தும் பாதிவிரத்தியத்தை நிலேநாட்டிக் கொண்டிருந்தாள். ராமன் சீதையை அரணியம் அழைத்துச் செல்லத் தயங்கிய போது, ''என் தந்தை தகுந்த மாப்பிள்ளேக்காக வில் பரீட்சை வைத்துக் கடைசியில் உங்களே அடைந்தார். நீங்களோ ஆண் வேஷத்திலுள்ள பெண் பிள்ளேயாக இருக்கிறீர்கள்'' என்று வெகுண்டு கூறியவள் வைதேகி. 'ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்' (ஆண் வேஷத்திலுள்ள பெண் பிள்ளே) என்று கணவனே ஒருத்தி சொல்லலாமா என்ருல், அதுவும் கற்பு தந்த உரிமைதான். இதனுல் தான் கைகேயியால் குலத்துக்கே இழிவு ஏற்பட்டிருந்த அச்சமயத்தில் ராமன் பிராட்டியிடம், 'உன்னுல் என் குலத்துக்கும் பெருமை; உன் குலத்துக்கும் பெருமை' என்று கூறி அவளே வனத்துக்கு அழைத்துச் செல்ல உடன்பட்டான்.

வைகுண்ட நாயகி என்னும் பெருமையைத் துறந்து அவள் வையத்தில் வந்து வாழ்ந்து வழி காட்டினுள். இந்த மண்ணே இழிவதாக அவள் கருதவில்லே. அவள் மண்ணிலேயே தோன்றியவள். விதேகனின் யாகக் கலப்பை கிளறிய புழுதியில் புரண்ட பூதேவியின் குழந்தை அவள். பிற்பாடு ஸ்ரீ ராமன் வனம் செல்லப் புறப்படுகையில், 'எனக்கு வனவாசமே ராஜபோகம். காட்டில் வீசும் புழுதியே எனக்குச் சந்தனப் பூச்சு' என்ருள். பிறக்கும்போதே அவளுக்குப் புழுதிதான் சந்தனப் பூச்சாக இருந்தது. பிறகு மக்கள் எழுப்பிய அபவாதப் புழுதியும் அந்தப் பதிவிரதா மாணிக்கத்துக்குச் சந்தனப் பூச்சாகவே இருந்தது. பூதேவியின் மகளாகப் பிறந்ததால், ''பொறுமைக்குப் பூமாதேவி'' என்பது போல், அத்தனே கஷ்டத்தையும் அபவாதத்தையும் பொறுத்தாள்.

ஸ்ரீதேவி பூதேவி சமேதன் பரமபத நாதன். ஸ்ரீதேவியே சீதாதேவி. அவள் பூதேவியின் இலட்சணங்களேப் பொதிந்து கொண்டு அவதரித்தாள். தத்துவ மயமான தெய்வ ரூபங்களுக்கு மானுட உறவு முறைகளே அப்படியே பொருத்திப் பார்ப்பது பயன் தராது. எனவே, ஸ்ரீதேவி பூதேவியின் புதல்வியானுள். சீதையைப் பெற்றதால் பூமிக்கே பாக்கியம். எனவே, 'தன தன ஜனனி' என்ற வாக்குக்கு ஜானகியை ஒவியமாகத் தீட்டியிருப்பது, சீதையின் ஜனனியாகிய மண் செய்த பாக்கியத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

வனவாசம், ராவணனுல் அபகரணம், ஐயனது பிரிவு, அரக்கனின் காமத் தீ, அரக்கிகளின் அச்சுறுத்தல் என்றிப்படி எண்ணற்ற கொடுமைகளேப் பொறுமையோடு தாங்கிய ஜனகன் மாதாவை உலக அபவாதமும் தாக்கியது. அவள் பட்ட துயர் யாரே படமுடியும்? உலகின் பாபம் தீரவே மகாலக்ஷ்மி சீதையாகி, மக்களின் துயரை ஏற்றுப் பிராயச்சித்தம் செய்தாள். இவ்வாறு விகல வேதனேயைத் தாங்குவதே வைஷ்ணவ லட்சணங்களில் தலேமையானது.

இந்த வேதனேயின் பெருமைக்காகவே வால்மீகி முனிவர் ஸ்ரீமத் ராமாயணத்தை 'சீதையின் மகத்தான சரிதம்' என்ருர்.

## குணசீலம் திருப்பணி

அகண்ட காவேரி முக்கொம்பாகப் பிரியும் ஸ்தலத்துக்கருகில் — திருச்சியிலிருந்து பதினாலாவது மைலில் குணசீலம் என்னும் திவ்விய திருப்பதி அமைந்திருக்கிறது. திருப்பதி வேங்கடேசப் பெருமானே அடியாரின் துயர் தீர்க்கக்குணசீலத்தில் அமர்ந்திருக்கிருர் என ஐதிக்யம். தீராத வல்வினேகளே நீக்கி, சித்தப் பிரமை பிடித்தவர்களேயும் குணமாக்கும் எம்பெருமான் குணசீலம் ஸ்ரீ பிரசன்ன வேங்கடாசலபதி ஸ்வாமி என்பது நாடு அறிந்த உண்மை. இத்தகைய புனிதமான திருக்கோயிலுக்குத் திருப்பணி நடந்து கொண்டிருக்கிறது. திருப்பணியைச் செய்து முடிக்க இன்னும் ஒரு லட்ச ரூபாய் தேவைப்படுகிறது. குணசீலப் பெருமான் திருப்பணிக்குத் தாராளமாக வழங்குமாறு கேட்டுக் கொள்கிருேம். இந்த நன்கொடைக்கு மத்திய அரசாங்கத்தார் வருமான வரிச் சலுகை அளித்திருப்பது குறிப்பிடத் தக்கது.

தொகை அனுப்ப வேண்டிய முகவரி: திரு எல். வேங்கடராமன், பி. ஏ., பி. எல்., பொருளாளர், குணசீலப் பெருமான் திருப்பணிக் குழு, இரட்டைமால் தெரு, திருச்சிராப்பள்ளி.

# பஞ்சப் பகுதியில் பிரதமர்



○ கடந்த 17ம் தேதி யன்று பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி தமிழகத்தின் சில வறட்சிப் பிரதேசங்களைப் பார்த்து விட்டு அப்பகுதி மக்களுக்கு ஆறுதல் கூறிவிட்டுச் சென்றிருக்கிறார். அன்று காலை 10 மணிக்குச் சென்னை விமான நிலையத்துக்கு வந்த பிரதமர் இந்திரா, தமிழக கவர்னர் உஜ்ஜல் சிங், முதல்வர் மு. கருணாநிதி, மற்ற சில மந்திரிகள் சகிதம் செங்கற்பட்டு, வட ஆர்க் காடு, தென் ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களில் மிகுந்த வறட்சி நிலையிலுள்ள பகுதிகளைப் பார்வை யிட்டு விட்டுச் சென்றார். மதுராந் தகம் ஏரி, செம்பரம்பாக்கம் ஏரி முதலியன வறண்டு கிடக்கும் பரி தாபத்தையும் பார்த்தார். ஆயி னும் ஒருசிலர் மின்சார பம்புசெட் வைத்து, பூமிக்கடியிலிருந்து தண்ணீர் இழுத்து இறைத்துச் சாகுபடி செய்து பசுமையாக ஆங் காங்கே வைத்திருந்த நிலங்களையும் கண்டார்.



தமிழ்நாட்டில் இப்பொழுது ஏற்பட்டுள்ள பஞ்சநிலை காரண மாகத் தேவைப்படக்கூடிய மத்திய உதவியைக் கவனிக்க நியமிக்கப் பட்டிருந்த நிபுணர் கமிட்டி தனது யாதாஸ்தைச் சமர்ப்பித்துள்ள தென்றும், அது தவிர இந்தச் சுற்றுப் பிரயாணத்தின்போது விவ சாயிகள் சமர்ப்பித்த வேண்டு கோள்களையும் பரிசீலித்து ஆவன செய்வதாகவும் சொல்லி விடை பெற்றுத் திரும்பி யிருக்கிறார் பாரதப் பிரதமர்.







# இதயத்தை நனைத்த இலக்கிய மழை!

**மழை இல்லையே என்று ஏங்கிய உள்ளங்களுக்குத் தன் மழை பொழிந்தது, தமிழ் மழையாக. ஆனால் வெயிலும் 'சுள்'ளென்று அடிக்கத்தானே செய்தது! □**

## 1. மேகம்

மதுரமான நாதஸ்வர ஓசை. மதுரை என்பவரின் குழல் ஓசை. சில கீர்த்தனைகளை வாசித்துவிட்டுத் 'தாமரை பூத்த தடாகமடி' என்னும் பாடலைத் தொடங்குகிறார்.

''இன்னும் அமைச்சர்கள் வருகை பூக்கவில்லையே'' என்று விழாவுக்கு வந்திருப்போர் கடிகாரங்களைப் பார்க்கிறார்கள்.

''அதோ, முதல் அமைச்சர்! கல்வி அமைச்சரும் கூடவே வந்துவிட்டார்!''

அவ்வளவுதான்! தமிழ் வட்டம் இரண்டாவது ஆண்டு விழா ஜாம் ஜாம் என்று ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் தொடங்குகிறது.

தமிழ் வட்டத் தலைவர் டி. எஸ். ராமலிங்கம் அவர்கள் சுருக்கமாக வரவேற்புரை நிகழ்த்துகிறார். இந்தத் தமிழ் வட்டத்தின் ஸ்தாபகரான காலம் சென்ற வி. கே. சி. நடராஜனுக்கு நினைவு அஞ்சலியும் அளிக்கின்றார்.

விழாவுக்குத் தலைமை தாங்குபவர் நீதிபதி திரு வீராசாமி. தமிழ் மாவட்டம் என்றே மதிப்பை உயர்த்தி ஆரம்பிக்கிறார் பேச்சை. உடனேயே அந்த 'மா'வைச் சலித்துவிட்டு வட்டத்துக்குள் வருகிறார். வட்டத்துக்கு எப்படி ஆதி அந்தம் இல்லையோ அப்படித்தான் தமிழுக்கும் என்கிறார். இன்றையத் தேவைகளுக்கு ஏற்பப் பிற மொழிச் சொற்களை ஏற்றுக் கொண்டு தமிழ்ப் பாணியில் உபயோகிக்கலாம் என்றும் சொல்கிறார்.

அடுத்தாற்போல் அமைச்சர் மாதவன் ஆண்டு மலரை வெளியிட்டு வைத்துப் பேச்சுத் தொடர்பில் நீதிபதியைப் பின்பற்றுகிறார். தமிழில் இருக்கும் சொற்களை ஒதுக்கிவிட்டுப் பிற மொழிச் சொற்களைப் புகுத்துவது ஏற்றுக் கொள்ளத் தகாத கருத்து என்று சொல்லிவிட்டு இல்லாத சொற்களுக்கு இடம் கொடுத்து வரவேற்கத் தயங்க மாட்டோம் என்று முடிக்கிறார். இதமான இனிமையான பேச்சு.

தமிழாசிரியர் ந. சஞ்சீவி 'மைக்' முன் வந்து நிற்கிறார். மைக் தணிகிறது. அவர் குரலும் தணிகிறது. அடைமொழிகளும் புகழ்மொழிகளும் பீறிடுகின்றன. தாராளமாகச் சில யோசனைகளை அரசுக்கு அள்ளி வழங்குகிறார். வட்டத்துக்கு அப்பால் வந்து

மேலே: தமிழ் வட்டம் இரண்டாவது ஆண்டு விழாவில் நீதிபதி வீராசாமி உரையாற்றுகிறார். வலக்கோடியில் தமிழ்வட்டத் தலைவர் திரு டி. எஸ். ராமலிங்கம்.

கீழே: விழாவில் கலந்துகொண்ட திரு நெடுஞ்செழியன் அவர்களும், விழா நிர்வாகிகளான திரு கண ராமநாதன், திரு ராமச்சந்திரன், திரு நல்லபெருமாள் ஆகியோரும்.



பல வேண்டுகோள்களை விடுத்த சஞ்சீவி 'மைக்'கை விட்டு விலகுகிறார்.

அடுத்து ஐந்து தமிழறிஞர்களுக்குப் பதக்கங்கள் வழங்கும் கட்டம். திரு வி. எஸ். சுப்பையா அறிமுகம் செய்து வைக்க முதல் அமைச்சர் கருணாநிதி அவர்களுக்குப் பதக்கங்கள் மாட்டுகிறார். ஆறாவது முகமாக நண்பர் கு. அழகிரிசாமியும் மேடைக்கு வருகிறார். அவருக்கு ஒரு பட்டாடை! அற்புதமாகத் தமிழ் வட்ட ஆண்டு மலரைத் தயாரிக்க உதவியவரல்லவா?

முதல் அமைச்சர் பேசுகிறார். வட்டத்தை இவரும் தொடுகிறார். வட்டம் தனி வட்டமாக நின்றால் பூஜ்யம்தான்; மதிப்பில்லை. அதன்முன் தமிழர் 'ஒன்றாக' நின்று அதன் மதிப்பை உயர்த்த வேண்டும் என்கிறார்.

இரண்டு அமைச்சர்களும் கலந்து கொண்டும் நிகழ்ச்சி தொண்ணூறே நிமிடங்களில் இனிமையாக முடிகிறது. வந்திருப்போர் திருப்தி நிலவும் முகத்துடன் தேசிய கீதத்துக்கு எழுந்திருக்கிறார்கள்.

இன்னும் இரண்டு நாட்கள் இங்கு நல்ல இலக்கிய மழை பொழியும் என்பதற்கு அறிகுறியாக மேகங்கள் சூழ்ந்துவிட்டன.

## 2. காற்று

இரண்டாவது நாள் காலை. கம்பனை வரவேற்க ரசிகர்கள் காத்திருக்கிறார்கள். ஆம்! இன்று முழுதுமே கம்பன் திருநாள்! ஐந்து பேர்கள் கம்பனை வெவ்வேறு கோணங்களில் பார்க்க மேடையில் வந்து அமருகிறார்கள். அரங்கத்துக்குத் தலைவர் பி. ஸ்ரீ. ஆச்சார்யா. அயராத கம்ப உபாசகர். 'மனிதன் பார்க்கிறான். விஞ்ஞானி உற்றுப் பார்க்கிறான். கவிஞன் ஊடுருவிப் பார்க்கிறான்' என்று சொல்லிக் கம்பனை ஐவர் போற்றுதலுக்கு ஆளாக்கிவிட்டு ஒதுங்குகிறார்.

பொறியியல் நிபுணர் நல்லபெருமாள், வி. எஸ். சுப்பையா, சமயப் பிரசாரத்தில் சாமர்த்தியம் பெற்ற திருமதி ஜெயகுமாரி பாஸ்கரன் ஆகியோர் பேசுகிறார்கள்.

அ. ச. ஞானசம்பந்தம் இலக்கியச் சொற் பொழிவுகளிலே அநாயாசமாகச் சங்கதிகள் போட்டுக் கேட்போரை அயர வைப்பவர். கம்பனின் காவியத்தில் கட்டுக்கோப்பு என்பது பற்றிக் கனிவுடன் பேசுகிறார். தாரையின் கதையைத் தாரைபோல் பேச்சில் விரிய வைக்கிறார்.

கு. ராஜவேலு கரனையும் திரிசரனையும் எழுப்பி வந்து வீராவேசத்துடன் யுத்த களத்தில் சண்டையிடச் செய்து கம்பனின் பாத்திரப் படைப்பை விளக்குகிறார்.

விழாவில் மந்திரி மாதவன் சொற்பெருக்காற்றுகிறார்.



விழாவுக்கு வந்திருந்த ரசிகப் பெருமக்களில் ஒரு பகுதி.



## 3. மழை

இரண்டாவது நாள் மாலை. எதிர்பார்த்திருந்த பட்டி மன்றம். அனுமன், சுக்ரீவன் விபீடணன் மூவரும் மண்டபத்தின் மூலையில் ஒரு பக்கமாக அமர்ந்திருக்கிறார்கள். அவர்கள் அமர்ந்திருப்பதையோ, பேசிக் கொண்டிருப்பதையோ பொருட்படுத்தாது சாரி சாரியாக ரசிகர்கள் உள்ளே வந்து இருக்கைகளில் அமருகிறார்கள். ராமனுக்குத் துணை நின்றவர்களில் சிறந்தவன் அனுமனே, சுக்ரீவனே, விபீடணனே என்று பட்டி மன்றத்தில் வாதாடி நிரூபிக்கப் பல பேச்சாளர்கள் காத்திருக்கிறார்கள். பட்டிமன்றம் தொடங்குகிறது.

**அனுமன்:** நடுவர் பதவியில் அமர்ந்திருப்பவர் நமது காரைக்குடி அன்பர் இல்லை போலிருக்கிறதே! இவர் சட்டையல்லவா போட்டிருக்கிறார்?

**சுக்ரீவன்:** ஆமாம்! ஆமாம்! சா. கணேசனைத்தான் போட்டிருந்தார்கள். அவர் வர இயலாத நிலையில் டாக்டர் பி. நடராஜன் நடுவராக வந்திருக்கிறார்.

**அனுமன்:** ராமச்சந்திரப் பிரபோ! உன்னை அடைக்கலம் அடைந்தார்கள் என்பதற்காக விபீடணனும் சுக்ரீவனும் தாழ்ந்தவர்களாமே! ஓங்கிச் சொல்கிறாரே, இந்தப் பேச்சாளர்! அபசாரம்! அபசாரம்! என்னை உன்னுடன் பிணைக்க, அவர்களைத் தாழ்த்தவா வேண்டும்?

**விபீடணன்:** இது மனித வர்க்கத்தின் இயல்பு. தான் உயர வேண்டும் என்பதை விடப் பிறரைத் தாழ்த்தி அந்த உயர வித்தியாசத்தை நிலைநிறுத்துவது கலியுக தர்மம்.

**சுக்ரீவன்:** 'உன் பகை உனக்கே தந்தேன்' என்ற கட்டத்தை ஏன் இப்படித் திரித்துக் காண்பிக்கிறார்கள்? அந்த லங்கேசுவரனைக் கொல்லத்தான் ராமாவதாரம் எடுத்திருக்கிறார் என்று எனக்குத் தெரியாதா? நானே கொன்று விட்டால் அவதாரத் தத்துவம் என்ன ஆவது?

**விபீடணன்:** அஞ்சனேயரே! நமக்குத் தெரியாத பல விஷயங்களை இவர்கள்கூட இருந்து பார்த்ததுபோல் பேசுவார்கள். ஆச்சரியப்படாதீர்கள். இதோ, அ. ச. ஞானசம்பந்தம் சுக்ரீவரை உயர்த்த நம்மையெல்லாம் இறக்கப் போகிறார் பாரும்!

**அனுமன்:** ராமப் பிரபோ! நான் உன் அடிமைதான்! அதை ஏதோ தகுதியின்மை போல் இவர் பேசுகிறாரே?

**சுக்ரீவன்:** நான் ராவணனால் காயம் அடைந்து வந்த போது ராமபிரான் என்னைக் கட்டித் தழுவிக் கண்ணீரால் மஞ்சனம் செய்ததை மாத்திரம் சொல்லி என்னை உயர்த்தப் பார்க்கிறார். கருணாமூர்த்தியான அவர் யாரையுமே அப்படித்தான் வரவேற்றிருப்பார்!

**அனுமன்:** விபீடணரே! இப்போது உமக்கு வாய்ப்பு! கு. அழகிரிசாமி உம்மைத் தூக்கி வைத்து ஆடப் போகிறார்.

**சுக்ரீவன்:** சரி சரி! அன்று நமக்கு ராம ராவண யுத்தத்தில் பக்க சைன்யங்கள் இருந்ததுபோல இங்கும் பிரதான பேச்சாளர்களுக்குத் தனித் தனியே பக்க பலம் இருக்கிறது. மீண்டும் ஒரு சுற்று நாம் தாக்கப்படவிருக்கிறோம்.

**விபீடணன்:** ஆஞ்சனேயரே! உம்மை அடிமை என்று சுக்ரீவன் கட்சித் தலைவர் குறிப்பிட்டது அவையில் உள்ள உம் பக்தர் ஒருவருக்கு ரசிக்கவில்லை. ஆட்சேபக் குறிப்பு அனுப்புகிறார், பாரும்!

**அனுமன்:** ராம! ராம! நான் ராமபிரானின் அடிமைதான்! இவர் யார் ஆட்சேபிக்க? நான் மேடைக்குப் போய் மறுக்கட்டுமா?

**சுக்ரீவன்:** உமக்கும் இந்த மானுடர் போல் 'மைக்' மோகம் பிடித்து விட்டதா? சும்மா இரும்! கம்பரே சும்மா இருக்கும் போது நமக்கு எதற்கு வம்பு?

**அனுமன்:** கட்சிப் பிரதிவாதங்கள் எல்லாம் முடிந்துவிட்டன. நடுவர் என்ன சொல்லப் போகிறார், பார்ப்போம்!

**சுக்ரீவன்:** ஆகா! நடுவர் அழகாகச் சொல்லி விட்டாரே! நம் ஒவ்வொருவருக்கும் ஒரு லட்சியம். நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் ராமபிரானை அண்டி நிற்கிறோம். ஆகையால் ஒப்பிட்டுப் பார்ப்பது தவறு என்று சொல்லி முடிவு காணாமலிருப்பதே சாலச் சிறந்த முடிவு என்று சொல்லி விட்டாரே!

**விபீடணன்:** நன்று! நன்று! நல்ல முடிவு!

பலத்த கரகோஷத்துடன் பட்டிமன்றம் இனிமையாகவும் சுவையாகவும் முடிகிறது. சொற்போர் மழை ஓய்கிறது.

## 4. குளுமை

மூன்றாம் நாள் காலை. இன்று வள்ளுவர் விழா. தலைவர் டாக்டர் மு. வ. பேச்சில் இன்று ஆரம்பத்திலேயே களை கட்டிவிடுகிறது. அறம், பொருள், இன்பம் பற்றிப் பேச மூவர் காத்திருக்கிறார்கள். அறத்தைப் பற்றிப் பேச எழும் க. த. திருநாவுக்கரசு கல்லூரி வகுப்புகளில் பாடம் நடத்துவது போலவே தம் பணியை முடிக்கிறார். பொருள் பற்றிப் பேசுபவர் பேராசிரியர் லெ. ப. அரு. ராமநாதன் செட்டியார். அவர் புள்ளி இயல் நிபுணராக மாறிக் கையிலிருக்கும் காகிதத்தைப் பார்த்து ஏதோ ஏற்றுமதி இறக்குமதி விவரங்கள்போல் வள்ளுவ அதிகாரக் கணக்குகள் கொடுக்கிறார்.

இரண்டு ஆசிரியபிரான்களைத் தொடர்ந்து ஓர் எழுத்தாள விமர்சகர் பேச வருகிறார்: 'இன்பத்'தைப் பற்றிப் பேசுபவர் தொ.மு. சிதம்பர ரகுநாதன். ஐந்தாவது நிமிடத்திலேயே அவர் பேச்சில் சூடு பிடித்து விடுகிறது. அந்தச் சூடு ஐம்பதாவது நிமிடம் வரை ஆறாமல் நிற்கிறது.

அற்புதமான மேற்கோள்கள். ஆழமான கருத்துக்கள். 'இன்பம்' என்ற பகுதி குறளில் தனியாக இல்லை. அது அறத்திலும் பொருளிலும் ஊடுருவி நிற்கிறது' என்று



"போதும் போதும்! நிலாவைக் கேட்டது போல் வாழ்க்கையில் இனிமேல் இன்னெரு பெண்ணைப் பார்த்து 'என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா?' என்று நான் கேட்க மாட்டேன்!"

"ஏன்டா! நீ அப்படிக் கேட்டதற்கு நிலா கோபித்துக் கொண்டு விட்டாளா?"

"கோபித்துக் கொண்டால் தேவலையே..."

"பின்னே? அடித்துவிட்டாளா?"

"அடித்தால் தேவலையே...! என்னைக் கலியாணம் செய்து கொண்டு விட்டாள்!"

சொல்லி வள்ளுவரை முழுதாகவே நம் முன் கொண்டு வந்து நிறுத்துகிறார். "வள்ளுவர் நம்மைவிட வயதில் இரண்டாயிரம் ஆண்டு பெரியவராக இருக்கலாம். ஆனால் நாம் அறிவில் அவரைவிட இரண்டாயிரம் ஆண்டு முதிர்ந்தவர்கள்! அவருக்குக் கிடைக்காத எத்தனையோ இலக்கியங்கள் பிற்காலத்தில் நமக்குக் கிடைத்திருக்கின்றன" என்று ஒரு போடு போடுகிறார்.

பேச்சு ஒரு கலை. ஆனால் கேட்பது அதை விட ஒரு சிறந்த கலை என்று முதல் நாள் பி. ஸ்ரீ. அவர்கள் குறிப்பிட்டார். பிற்பகல் ஒன்றரை மணி ஆனபோதிலும், ரசிகர்களிடம் அந்தக் கலை நிரம்ப இருந்தது.

பசியை மறக்கச் செய்யும் குணமை குறளுக்கு உண்டு. கருத்து மாறுபட்டாலும் தலைவர் மு. வ. கனிவுடன் பாராட்டுகிறார்.

பேச்சுக்களைச் சுருக்கெழுத்தில் எடுப்பது உண்டு. தட்டெழுத்தில் அடிப்பது உண்டு. டேப்பிலும் பதிப்பது உண்டு. ஆனால் ஒரே ஒரு அம்மையார் அத்தனை பேச்சுக்களையும் ஒன்று விடாமல் ஊசி நூலாலேயே வரைந்தார்! ஆம்! ஆரவாரத்தையும் கரகோஷத்தையும் பொருட்படுத்தாமல் அவர் மூன்று நாட்களும் மண்டபத்தில் அமர்ந்து 'எம்ராய்டரி' போட்டுக் கொண்டே இருந்தார்! அதுவும் சுவையாகத்தான் இருந்தது.

## 5. வெயில்

மூன்றும் நாள் பிற்பகல். 'எது கவிதை?' என்னும் பொருள் பற்றிக் கவியரங்கம். தலைவர் கவிஞர் எஸ். டி. சுந்தரம்.

நேரம் கடந்த ஆரம்பம்
நேசம் குறைந்த அவையோர்கள்
நினைத்துப் பார்க்கா அவைத் தலைவர்
நீட்டிவிட்டார் முன்னுரையை.

அச்சில் வந்த கவிஞர் சிலர்
அஞ்ஞாத வாசம் புகுந்து விட்டார்
சொச்சத்தை இட்டு நிரப்பிவிடச்
சொல்லழகர் சிலர் வந்திட்டார்.

ஒருவர்பின் ஒருவர் பாடிவர
ஒப்பவில்லை அவைத் தலைவர்
உள்ளே புகுந்து விளையாடி
ஒருங்கே நேரத்தைப் பிடித்து விட்டார்:

பாதிக் கவிதை இனிக்கவில்லை.
பாராட்ட யாரும் துணியவில்லை
பக்கம் பக்கமாய்ப் படித்திட்டும்
பலத்த கைதட்டு விழவில்லை!

கவியரங்கம் காயும் வெயிலாகவே இருந்தது. நேரக் கட்டுப்பாடும் நல்ல ஒத்திகையும் பூர்வாங்கப் பரிசீலனையும் இருந்திருந்தால் இந்த நிகழ்ச்சி சுவைபட இருந்திருக்கலாம்! அப்படி இல்லையே!

## 6. தென்றல்

விழாவின் கடைசி நிகழ்ச்சி. சங்க இலக்கிய விழா. நாவலர் நெடுஞ்செழியன் தலைமை. அவருக்கே உரித்தான ஏற்ற இறக்க வன்மை மென்மை குரல் துணையுடன் ஆரம்பிக்கின்றார். இவரும் வட்டத்தைத் தொடுகிறார். வட்டம் அப்படியே இருக்கக் கூடாது. ஒவ்வோர் ஆண்டிலும் அது பலப் பல புது ரசிகர்களை உள்ளடக்கிய பெரிய வட்டமாக வளர்ந்துகொண்டே இருக்க வேண்டும் என்று வாழ்த்துகிறார்.

தொடர்ந்து ஐந்து தமிழ் அறிஞர்கள், 'குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை' பற்றி இனிமையான சொற்பொழிவுகள் நிகழ்த்துகிறார்கள். தமிழ் தென்றலாக வீசுகிறது.

தமிழ் வட்டத்தின் இரண்டாவது ஆண்டு விழா கோலாகலமாக முடிவடைகிறது. நிகழ்ச்சி நிரலில் பெயர் கண்ட பலர் வராமல் இருந்த போதிலும், தயங்காமல், தாமதிக்காமல், எப்படியோ இட்டு நிரப்பி விழாவை நடத்தி முடித்த நிர்வாகிகளான டி. எஸ். ராமலிங்கம், ராமச்சந்திரன், நல்ல பெருமாள், கண. ராமநாதன், இவர்களுடைய உற்ற நண்பர்கள் எல்லோர் முகத்திலும் அலுப்பு மறைந்து மகிழ்ச்சி ஒளி வீசுகிறது.

இவர்கள் இலக்கிய விருந்துக்கு மாத்திரமா ஏற்பாடு செய்திருந்தார்கள்? இல்லை! வந்திருந்தோர் அனைவருக்கும் இரண்டு வேளையும் இனிய உணவு விருந்துமல்லவா ஏற்பாடு செய்திருந்தார்கள்! தமிழ் வட்டத்தின் அடுத்த ஆண்டு விழா எப்போது?

—கோமதி சுவாமிநாதன்

# லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ




பருகியவர் மீண்டும் மீண்டும் விரும்பிக்
கேட்கும் பானம்! கோப்பைக்குக்
கோப்பை திருப்தி தரும் சிறந்த மணம்!
தரம் நிறைந்த கெட்டியான பானம்!
பருகுவதில் இன்பம்! விலையிலும் சிக்கனம்!

ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தூள்வகை
தேயிலைகளில் ஏற்றமிக்கது.




லிப்டன் என்றாலே
நல்ல டீ

LHGC-8 TAM

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பதினெட்டாம் அத்தியாயம்

## துரோகத்தில் எது கொடியது?

**ப**ழந் தமிழ் நாட்டின் சரித்திரத்தைப் படித்தவர்கள் அந்நாளில் பெண்மணிகள் பலர் சமூக வாழ்வின் முன்னணியில் இருந்திருப்பதை அறிவார்கள். மன்னர் குலத்தில் பிறந்த மாதரசிகள் மிகவும் கௌரவிக்கப்பட்டார்கள். சோழ குலத்தில் பிறந்த பெண்மணிகளும் வாழ்க்கைப்பட்ட பெண்மணிகளும் சொந்தமாகச் சொத்துரிமை பெற்றிருந்தார்கள். ஒவ்வொருவருக்கும் தரவாரியாகக் கிராமங்களும் நன்செய் புன்செய் நிலங்களும் கால்நடைச் செல்வமும் இருந்தன. இந்த உடைமைகளை அவர்கள் எவ்வாறு உபயோகித்தார்கள் என்பதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். பலர் ஆலயங்களில் தங்கள் பெயரால் பலவித திருப்பணிகள் நடைபெறுவதற்குச் சொத்துக்களை உபயோகப்படுத்தினார்கள். திருவிளக்கு ஏற்றுதல், திருமாலை புனைந்து சாற்றுதல், தேசாந்திரிகளுக்கும் சிவனடியார்களுக்கும் திருஅமுது செய்வித்தல் — ஆகியவற்றுக்குப் பல அரசகுல மாதர்கள் நிவந்தங்கள் ஏற்படுத்திச் சிலாசாஸனம் அல்லது செப்புப் பட்டயத்தில் அவற்றைப் பொறிக்கும்படி செய்தார்கள்.

அரண்மனைப் பெண்டிர் ஆலயத் திருப்பணி செய்தல் அந்த நாளில் பொது வழக்காயிருந்திருக்க, சுந்தர சோழரின் அருமைப் புதல்வி குந்தவைப் பிராட்டி மட்டும் வேறொரு வகை அறத்துக்குத் தம் உடைமைகளைப் பயன்படுத்தினர். நோய்ப்பட்டிருந்த தம் தந்தையின் நிலையைக் கண்டு



இரங்கியதனால்தானே, என்னமோ, அவருக்கு நாடெங்கும் தர்ம வைத்திய சாலைகளை நிறுவ வேண்டும் என்னும் ஆர்வம் உண்டாயிற்று. பழையாறையில் பராந்தக சக்கரவர்த்தியின் பெயரால் ஓர் ஆதுரசாலை ஏற்படுத்தியிருந்ததை முன்னமே பார்த்தோம். அதுபோலவே தஞ்சையில் தன் தந்தையின் பெயரால் ஆதுரசாலை அமைப்பதற்குக் குந்தவை தேவி ஏற்பாடு செய்திருந்தார். இந்த விஜயதசமி தினத்தில் அந்த ஆதுரசாலையை ஆரம்பிக்கவும் அதற்குரிய தான சாஸனங்களை எழுதிக் கொடுக்கவும் ஏற்பாடாகியிருந்தது.

* * *

**த**ஞ்சைக் கோட்டைக்கு வெளியேயுள்ள புறம்பாடியில், பெருமாள் கோயிலுக்கு எதிர்ப்பட்ட கருட மண்டபத்தில், 'சுந்தரசோழ ஆதுர சாலை'யின் ஆரம்ப வைபவம் நடந்தது. திருமால் காக்கும் தெய்வமாதலாலும், கருடாழ்வார் அமுதம் கொண்டு வந்தவராதலாலும், விஷ்ணு கோயிலையொட்டிய கருட மண்டபத்தில் குந்தவைப் பிராட்டி ஆதுர சாலையை ஏற்படுத்தி வந்தார். இந்த வைபவத்துக்காக, தஞ்சை நகர மாந்தரும் அக்கம் பக்கத்துக் கிராமவாசிகளும் **கணக்கற்ற**வர்கள் கூடியிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் அலங்கார ஆடை ஆபரணங்கள் பூண்டு கோலாகலமாகத் திரண்டு வந்திருந்தார்கள். சக்கரவர்த்தியின்



உடன் கூட்டத்து அமைச்சர்களும் பெருந்தர சிறுதர அதிகாரிகளும் சிலா சாஸனம் பொறிக்கும் கல் தச்சர்களும் செப்புப் பட்டயம் எழுதும் விசுவ கர்மர்களும் அரண்மனைப் பணியாளர் களும் ஏராளமாக வந்து கூடியிருந் தார்கள். தாரை, தப்பட்டை முதலிய வாத்தியங்களை எட்டுத் திசையும் நடுங் கும்படி முழங்கிக் கொண்டு வேளக் காரப் படையினர் வந்தார்கள். தஞ்சைக் கோட்டையின் காவல் படை வீரர்கள் வாள்களையும் வேல்களையும் சுழற்றி 'டணார்' டணார்' என்று சத்தப் படுத்திக் கொண்டு வந்தார்கள். பழுவேட்டரையர்கள் இருவரும் யானை மீதேறிக் கம்பீரமாக வந் தார்கள். இளவரசர் மதுராந்தக தேவர் வெள்ளைப் புரவியின் மேல் ஏறி உட்காரத் தெரியாமல் உட் கார்ந்து தவித்துக் கொண்டு வந்து சேர்ந்தார். இளவரசி குந்தவைப் பிராட்டியும் அவருடைய தோழிகளும் முதிய அரண்மனை மாதர் சிலரும் பல்லக்கில் ஏறிப் பவனி வந்தார்கள். இன்னொரு பக்கமிருந்து பழுவூர் இளைய ராணி நந்தினியின் பனை இலச்சினை கொண்ட தந்தப் பல்லக்கும் வந்தது.

அரண்மனை மாதர்களுக்கென்று ஏற்படுத்தியிருந்த நீலப் பட்டு விதான மிட்ட இடத்தில் குந்தவை தேவியும் பழுவூர் ராணியும் மற்ற மாதர்களும் வந்து அமர்ந்தார்கள்.

பிறகு, பெரிய பழுவேட்டரையர் சமிக்ஞை செய்ததின் பேரில் வைபவம் ஆரம்பமாயிற்று. முதலில் ஓதுவா மூர்த்திகள் இருவர், ''மந்திரமாவது நீறு'' என்ற தேவாரப் பதிகத்தைப் பாடினார்கள். யாழ், மத்தளம் முதலிய இசைக் கருவிகளின் ஒத்துழைப்புடன் மிக இனிமையாகப் பாடப்பட்ட அந்தப் பாடலைக் கேட்டு மக்கள் மெய் மறந்திருந்தார்கள். அந்தப் பெரிய ஜனக் கூட்டத்தில் அப்போது நிசப்தம் நிலவியது.

ஆனால் அரண்மனைப் பெண்டிர் அமர்ந்திருந்த இடத்தில் மட்டும் மெல் லிய குரலில் இருவர் பேசும் சத்தம் எழுந்தது. பழுவூர் இளையராணி நந்தினி குந்தவையை நெருங்கி உட் கார்ந்து, ''தேவி! முன்னொரு காலத் தில் சம்பந்தப் பெருமான் இந்தப் பாடலைப் பாடித் திருநீறு இட்டுப் பாண்டிய மன்னரின் நோயைத் தீர்த்தா ரல்லவா ? இப்போது ஏன் இந்தப் பாடலுக்கு அந்தச் சக்தி இல்லை? பாட லுக்குச் சக்தியில்லா விட்டாலும் திருநீற்றுக்கும் சக்தி இல்லாமற் போய் விட்டதே? மருந்து, மூலிகை, மருத்து வர், மருத்துவ சாலை இவ்வளவும் இல் லாமல் இக்காலத்தில் முடியவில்லையே?'' என்று கேட்டாள்.

''ஆம், ராணி! அந்த நாளில் உலகில் தர்மம் மேலோங்கி யிருந்தது. அதனால் மந்திரத் திருநீற்றுக்கு அவ்வளவு சக்தி யிருந்தது. இப்போது உலகில் பாவம் மலிந்து விட்டது. அரசருக்கு விரோத மாகச் சதி செய்யும் துரோகிகள் நாட் டில் ஏற்பட்டிருக்கிறார்கள். இப்படி யெல்லாம் முன்னே நாம் கேட்ட துண்டா ? ஆகையால்தான் மந்திரத் தின் சக்தி குறைந்து மருந்து தேவை யாகி விட்டது !'' என்று இளைய பிராட்டி கூறிப் பழுவூர் இளைய ராணி யின் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

நந்தினியின் முகத்தில் எவ்வித மாறுதலையும் காணவில்லை. ''அப் படியா ? அரசருக்கு விரோதமாகச் சதி செய்யும் துரோகிகள் இந்த நாளில் இருக்கிறார்களா ? அவர்கள் யார் ?'' என்று சாவதானமாகக் கேட்டாள்.

''அதுதான் எனக்கும் தெரியவில்லை. சிலர் ஒருவரைச் சொல்கிறார்கள் ; சிலர் இன்னொருவரைச் சொல் கிறார்கள். எது உண்மை என்று கண்டு பிடிப்பதற்காக இன்னும் சில நாட்கள் இங்கேயே இருக்கலாமென்று பார்க் கிறேன். பழையாறையில் இருந்தால் உலக நடப்பு என்ன தெரிகிறது ?'' என்றாள் குந்தவை.

'' நல்ல தீர்மானம் செய்தீர்கள். என்னைக் கேட்டால் இங்கேயே நீங்கள் தங்கி விடுவது நல்லது. இல்லாவிட்டால் இராஜ்யம் குட்டிச் சுவராய்ப் போய்விடும். நானும் உங்க ளுக்கு என்னால் முடிந்த உதவி செய் வேன். எங்கள் வீட்டில் ஒரு விருந் தாளி வந்திருக்கிறான். அவனும் தங்க ளுக்கு உதவி செய்யக்கூடும்!'' என்றாள்.

'' அது யார் விருந்தாளி ?'' என்று குந்தவை கேட்டாள்.

''கடம்பூர் சம்புவரையர் மகன் கந்த மாறன். தாங்கள் அவனைப் பார்த் திருக்கிறீர்களா? தென்னை மர உயர மாய் வாட்டசாட்டமாய் இருக்கிறான். 'ஒற்றன்' என்றும் 'துரோகி' என்றும் ஓயாமல் பிதற்றிக் கொண்டிருக் கிறான். இராஜத் துரோகத்தைப் பற் றிச் சற்று முன் சொன்னீர்களே ? இராஜத் துரோகத்தைக் காட்டிலும் பெரிய துரோகம் இன்னதென்று தங்களால் சொல்ல முடியுமா ?''

''நன்றாய்ச் சொல்ல முடியும். கைப் பிடித்த கணவனுக்குப் பெண்ணாய்ப் பிறந்த ஒருத்தி துரோகம் செய்தால் அது இராஜத் துரோகத்தைக் காட்டி லும் கொடியதுதான் !''

இப்படிச் சொல்லிவிட்டுக் குந்தவை தேவி நந்தினியின் முகத்தை உற்றுப் பார்த்தாள். அவள் எதிர்பார்த்த மாறுதல் ஒன்றும் நிகழவில்லை. நந்தினியின் முகத்தில் முன்போலவே மோகனப் புன்னகை தவழ்ந்தது.

''தாங்கள் சொல்வது ரொம்ப சரி; ஆனால் கந்தமாறன் ஒப்புக் கொள்ள மாட்டான். 'எல்லாவற்றிலும் கொடிய துரோகம் சிநேகிதத் துரோகம்' என்று சொல்வான். அவனுடைய அருமை நண்பன் என்று கருதிய ஒருவன் ஒற்றனாக மாறிப் போனது மல்லாமல் இவனுடைய முதுகில் குத்திப் போட்டுவிட்டு ஓடிப் போய் விட்டானாம். அது முதல் கந்தமாறன் இவ்விதம் பிதற்றிக் கொண்டிருக்கிறான்!''

''அது யார் அவன் அவ்வளவு நீசத்தனமான காரியத்தைச் செய்தவன்?''

''யாரோ வந்தியத் தேவனாம்! தொண்டை நாட்டில் திருவல்லம் என்னும் ஊரில் முன்னம் அரசு புரிந்த வாணர் குலத்தைச் சேர்ந்தவனாம்! தாங்கள் கேள்விப் பட்டதுண்டோ?''

குந்தவை தன் முத்துப் போன்ற பற்களினால் பவழச் செவ்விதழ்களைக் கடித்துக் கொண்டாள்.

''எப்போதோ கேட்ட மாதிரி இருக்கிறது... பிற்பாடு என்ன நடந்தது?''

''பிற்பாடு என்ன? கந்தமாறனை முதுகில் குத்திப் போட்டு அவனுடைய சிநேகிதன் ஓடி விட்டான். அந்த ஒற்றனைப் பிடித்து வருவதற்கு என் மைத்துனர் ஆள்கள் அனுப்பியிருப்பதாகக் கேள்வி!''

''அவன் ஒற்றன் என்பது எப்படி நிச்சயமாய்த் தெரியும்?''

''அவன் ஒற்றனோ, இல்லையோ, எனக்கு என்ன தெரியும்? சம்புவரையர் மகன் சொல்லுவதைத்தான் சொல்கிறேன். தாங்கள் வேண்டுமானால் நேரில் அவனிடமே கேட்டு எல்லா விவரமும் தெரிந்து கொள்ளலாம்.''

''ஆமாம்; சம்புவரையர் மகனை நானும் பார்க்க வேண்டியதுதான். அவன் பிழைத்ததே புனர் ஜன்மம் என்று கேள்விப்பட்டேன். அப்போது முதல் பழுவூர் அரண்மனையிலேதான் அவன் இருக்கிறானா?''

''ஆம்; காயம் பட்ட மறுநாள் காலையில் நம் அரண்மனையில் கொண்டு வந்து போட்டார்கள். காயத்துக்கு வைத்திய சிகிச்சை செய்ய வேண்டிய பொறுப்பும் என் தலையில் விழுந்தது. மெதுவாக உயிர் பிழைத்துக் கொண்டான்; காயம் இன்னும் முழுதும் ஆறியபாடில்லை!''

''நீங்கள் பக்கத்திலிருந்து பராமரித்தும் இன்னும் முழுதும் குணமாகவில்லை என்பது ஆச்சரியமான விஷயந்தான். ஆகட்டும் ராணி! நான் அவசியம் வந்து அவனைப் பார்க்கிறேன். சம்புவரையர் குலம் நேற்று முந்தா நாள் ஏற்பட்டதா? பராந்தக சக்கரவர்த்தியின் காலத்திலிருந்து வீரப் புகழ் பெற்ற குலம் அல்லவா?....''

''அதனாலேயே நானும் சொன்னேன். கந்தமாறனைப் பார்க்கும் வியாஜத்திலாவது எங்கள் ஏழை அரண்மனைக்கு எழுந்தருளுவீர்கள் அல்லவா?'' என்றாள் நந்தினி.

இதற்குள் தேவாரப் பாடல் முடிந்து தான சாஸன வாசிப்பு ஆரம்பமாகிவிட்டது. முதலில் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் திருமுகம் படிக்கப் பட்டது. ''நமது திருமகளார் குந்தவைப் பிராட்டிக்கு நாம் சர்வமானியமாகக் கொடுத்திருந்த நல்லூர் மங்கலம் கிராமத்தின் வருமானம் முழுவதையும் இளையபிராட்டியார் தஞ்சைப் புறம்பாடி ஆதுர சாலைக்கு அளிக்க உவந்திருப்பதால், அந்த ஊர் நன்செய் புன்செய் நிலங்கள் யாவற்றையும் 'இறையிலி' நிலமாகச் செய்திருக்கிறோம்'' என்று அந்த ஓலையில் சக்கரவர்த்தி தெரியப்படுத்தி யிருந்தார். திருமந்திர ஓலை நாயகர் அதைப் படித்தபின் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரிடம் கொடுக்க, பழுவேட்டரையர் அதை இரு கரங்களாலும் பெற்றுக் கண்களில் ஒற்றிக் கொண்டு கணக்காயரிடம் கொடுத்துக் கணக்கில் பதிய வைத்துக் கொள்ளும்படி சொன்னார்.

பிறகு குந்தவைப் பிராட்டியின் தான சிலாசாஸனம் படிக்கப்பட்டது. மேற்கூறிய கிராமத்துச் சர்வமானிய நிலங்களை அந்த ஊர் விவசாயிகளே சகல உரிமைகளுடன் அநுபவித்துக் கொண்டு தஞ்சாவூர் சுந்தர சோழ ஆதுர சாலை வைத்தியருக்கு ஆண்டு ஒன்றுக்கு இருநூறு கலம் நெல்லும் ஆதுர சாலையில் சிகிச்சை பெறும் நோயாளிகளுக்காகத் தினந்தோறும் ஐம்பது படி பசும் பாலும் ஐந்து படி ஆட்டுப் பாலும் நூறு இளநீரும் அனுப்ப வேண்டியது என்று கருங் கல்லில் செதுக்கப்பட்டிருந்ததுடன், எழுதியவன் பெயரும் எழுதியதை மேற்பார்வை செய்த அதிகாரிகளின் பெயர்களும் அதில் விவரமாகப் பொறிக்கப்பட்டிருந்தன.

அந்தச் சிலாசாஸனத்தைப் படித்த பிறகு, அங்கு இந்த வைபவத்துக்காக

வந்திருந்த நல்லூர் மங்கல கிராமத் தலைவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. கிராமத் தலைவர்கள் சாஸனக் கல்லைப் பயபக்தியுடன் வாங்கிக் கொண்டு அருகில் நின்ற யானையின் மீது ஏற்றினார்கள். அப்போது "மதுரை கொண்ட கோ இராஜ கேசரி சுந்தர சோழ சக்கரவர்த்தி வாழ்க வாழ்க!" என்று ஆயிரமாயிரம் குரல்களில் எழுந்த ஒலி எட்டுத் திசையும் பரவியது. அந்தக் குரல் ஒலியுடன் போட்டியிட்டுக் கொண்டு நூறு அறப் பறைகளின் முழக்கம் எழுந்து வானை அளாவியது. பின்னர் வரிசைக்கிரமமாக, "இளைய பிராட்டி குந்தவை தேவி வாழ்க!" "வீர பாண்டியன் தலை கொண்ட வீராதி வீரர் ஆதித்த கரிகாலர் வாழ்க!" "ஈழங் கொண்ட இளவரசர் அருள்மொழிவர்மர் வாழ்க!" "சிவஞான கண்டராதித்தரின் தவப் புதல்வர் மதுராந்தக தேவர் வாழ்க!" என்றெல்லாம் கோஷங்களும் பிரதி கோஷங்களும் எழுந்தன. கடைசியில் "தனாதிகாரி, தானிய பண்டாரத் தலைவர், இறை விதிக்கும் தேவர் பெரிய பழுவேட்டரையர் வாழ்க!" "தஞ்சைக் கோட்டைத் தலைவர் சின்னப் பழுவேட்டரையர் காலாந்தக கண்டர் வாழ்க!" என்ற கோஷங்கள் எழுந்தபோது, ஒலியின் அளவு பெரிதும் குறைந்து விட்டது. பழுவூர் வீரர்கள் மட்டும் அக் கோஷங்களைச் செய்தார்களே தவிரக் கூடியிருந்த பொதுமக்கள் அதிகமாக அதில் சேர்ந்து கொள்ளவில்லை. அப்போது பழுவூர் இளைய ராணியின் முகத்தைப் பார்க்க வேண்டுமென்று குந்தவைப் பிராட்டி முயற்சி செய்தும் பலிக்கவில்லை. முக்கியமாக ஆதித்த கரிகாலரைப் பற்றிய வாழ்த்தொலி எழுந்த சமயத்தில் நந்தினியின் முகத்தைப் பார்த்திருந்தால், இரும்பு நெஞ்சு படைத்த இளைய பிராட்டி கூடப் பெரிதும் திகில் கொண்டிருப்பாள் என்பதில் ஐயம் இல்லை.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# "ஒற்றன் பிடிபட்டான்!"

அன்று நடந்த சம்பவங்கள் பெரிய பழுவேட்டரையருக்கு மிக்க எரிச்சலை உண்டு பண்ணியிருந்தன. சக்கரவர்த்தியிடமும் அவருடைய குடும்பத்தாரிடமும் மக்கள் கொண்டிருந்த விசுவாசத்தை வெளிப்படுத்திக் காட்டுவதற்கல்லவா அது ஒரு சந்தர்ப்பமாகப் போய் விட்டது? "ஜனங்களாம் ஜனங்கள்! அறிவற்ற ஆடுமாடுகள்! நாலு பேர் எந்த வழி போகிறார்களோ அதே வழியில் நாலாயிரம் பேரும் போவார்கள்! சுய அறிவைப் பயன்படுத்திக் கொள்ள எத்தனை பேருக்குத் தெரிகிறது?" என்று தமக்குள் அடிக்கடி சொல்லிக் கொண்டு பொருமினார். "சக்கரவர்த்தி சொர்க்கத்துக்குப் போவதற்குள்ளே சாம்ராஜ்யத்தைப் பாழாக்கி விட்டுத்தான் போவார் போலிருக்கிறது! 'இந்த ஊருக்கு வரியைத் தள்ளி விடு!' 'அந்தக் கிராமத்தை இறையிலிக் கிராமமாகச் செய்து விடு!' என்று கட்டளையிட்டுக் கொண்டே போகிறார்! கொஞ்ச காலத்துக்கெல்லாம் வரி கொடுக்கும் கிராமமே இல்லாமற் போய் விடும். ஆனால் போர்க்களத்துக்கு மட்டும் செலவுக்குப் பணமும் உணவுக்குத் தானியமும் அனுப்பிக் கொண்டேயிருக்க வேண்டும். எங்கிருந்து அனுப்புவது?" என்று அவர் இரைந்து கத்தியதைக் கேட்டு அவருடைய பணியாட்களே சிறிது பயப்பட்டார்கள். "அண்ணா! இப்படியெல்லாம் சத்தம் போடுவதில் என்ன பயன்? காலம் வரும் வரையில் காத்திருந்து காரியத்தில் காட்ட வேண்டும்!" என்று சின்னப் பழுவேட்டரையர் அவருக்குப் பொறுமை போதிக்க வேண்டியிருந்தது.

குந்தவை தம் அரண்மனைக்கு வரப் போகிறாள் என்று தெரிந்ததும் பெரியவரின் எரிச்சல் அளவுகடந்து விட்டது. நந்தினியிடம் சென்று, "இது என்ன நான் கேள்விப்படுவது? அந்த அரக்கி இங்கு எதற்காக வரவேண்டும்? அவளை நீ அழைத்திருக்கிறாயாமே? அவள் உன்னை அவமானப்படுத்தியதை யெல்லாம் மறந்து விட்டாயா?" என்று கேட்டார்.

"ஒருவர் எனக்குச் செய்த நன்மையையும் நான் மறக்க மாட்டேன்; இன்னொருவர் எனக்குச் செய்த தீமையையும் மறக்க மாட்டேன். இன்னமும் இந்த என் சுபாவம் தங்களுக்குத் தெரியவில்லையா?" என்றாள் நந்தினி.

"அப்படியானால் அவள் இங்கு எதற்காக வருகிறாள்?"

"அவள் இஷ்டம், வருகிறாள்! சக்கரவர்த்தியின் குமாரி என்ற இறுமாப்பினால் வருகிறாள்!"

"நீ எதற்காக அழைத்தாயாம்?"

''நான் அழைக்கவில்லை ; அவளே அழைத்துக் கொண்டாள். 'சம்புவரையர் மகன் உங்கள் வீட்டில் இருக்கிறனாமே? அவனைப் பார்க்க வேண்டும்!' என்றாள். 'நீ வராதே!' என்று நான் சொல்ல முடியுமா ? அப்படிச் சொல்லக்கூடிய காலம் வரும். அது வரையில் எல்லா அவமானங்களையும் நான் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்.''

''என்னால் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. அவள் வரும் சமயம் நான் இந்த அரண்மனையில் இருக்க முடியாது. இந்த நகரிலேயே என்னால் இருக்க முடியாது. மழபாடியில் கொஞ்சம் அலுவல் இருக்கிறது. போய் வருகிறேன்.''

''அப்படியே செய்யுங்கள், நாதா ! நானே சொல்லலாம் என்று இருந்தேன். அந்த விஷப் பாம்பை என்னிடமே விட்டுவிடுங்கள். அவனுடைய விஷத்தை இறக்குவது எப்படி என்று எனக்குத் தெரியும். தாங்கள் திரும்பி வரும்போது ஏதேனும் சில அதிசயமான செய்திகளைக் கேள்விப்பட்டால் அதற்காகத் தாங்கள் வியப்படைய வேண்டாம்....''



''என்னமாதிரி அதிசயமான செய்திகள்?''

''குந்தவைப் பிராட்டி கந்தமாறனைத் திருமணம் செய்துகொள்ளப் போவதாகவோ, ஆதித்த கரிகாலன் கந்தமாறனுடைய தங்கையை மணக்கப் போவதாகவோ கேள்விப்படலாம்...''

''ஐயையோ ! இது என்ன சொல்கிறாய் ? அப்படியெல்லாம் நடந்துவிட்டால், நம்முடைய யோசனைகள் என்ன ஆகும் ?''

''பேச்சு நடந்தால், காரியமே நடந்துவிடுமா, என்ன? மதுராந்தக தேவருக்கு அடுத்த பட்டம் என்று உங்கள் நண்பர்களிடமெல்லாம் சொல்லி வருகிறீர்களே ? உண்மையில் அப்படி நடக்கப் போகிறதா ? பெண்ணைப் போல் நாணிக் கோணி நடக்கும் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டுவதற்காகவா நாம் இவ்வளவு பாடுபடுகிறோம்?'' என்று கூறி நந்தினி தன் கரிய கண்களினால் பெரிய பழுவேட்டரையரை உற்று நோக்கினாள். அந்தப் பார்வையின் சக்தியைத் தாங்க முடியாத அக்கிழவர் தலை குனிந்து அவளுடைய கரத்தை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டு, ''என் கண்ணே ! இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் நீ சக்கரவர்த்தினியாக வீற்றிருக்கும் நாள் சீக்கிரத்திலேயே வரும் !'' என்றார்.

* * *

கந்த மாறன் தன்னைப் பார்க்கக் குந்தவை தேவி வரப் போகிறாள் என்று அறிந்தது முதல் பரபரப்பு அடைந்து தத்தளித்துக் கொண்டிருந்தான். குந்தவையின் அறிவும் அழகும் மற்ற உயர்வுகளும் நாடு அறிந்தவை அல்லவா ? அப்படிப்பட்ட இளைய பிராட்டி தன்னைப் பார்ப்பதற்காக வருகிறாள் என்பது எவ்வளவு பெருமையான விஷயம் ? இதற்காக உடம்பில் இன்னும் பல குத்துக்கள் பட்டு நோயாகவும் படுத்திருக்கலாமே? அடாடா! இந்த மாதிரி காயம் போர்க்களத்தில் தன்னுடைய மார்பிலே பட்டுத் தான் படுத்திருக்கக் கூடாதா?

அச்சமயம் குந்தவை தேவி வந்து தன்னைப் பார்த்தால் எவ்வளவு கௌரவமாயிருக்கும்? அப்படிக்கின்றி, இப்போது ஒரு சிநேகிதன் செய்த துரோகத்தைப் பற்றிப் பலரிடம் படித்த பாடத்தை அல்லவா அவனிடமும் படித்தாக வேண்டும்?

இடையிடையே அந்தப் பெண்ணரசியின் குடும்பத்தினருக்கு விரோதமாக அவன் ஈடுபட்டிருக்கும் இரகசிய முயற்சியைக் குறித்து நினைவு வந்து கொஞ்சம் அவனை வருத்தியது.

கந்தமாறன் யோக்கியமான பிள்ளை. தந்திர மந்திரங்களும் சூதுவாதுகளும் அறியாதவன். நந்தினியின் மோகன சௌந்தரியம் அவனைப் போதைக்குள்ளாக்கிய போதிலும் அவள் இன்னொருவரின் மனைவி என்ற நினைவினால் தன் மனத்துக்கு அரண் போட்டு வந்தான். ஆனால் குந்தவைப் பிராட்டியோ கலியாணம் ஆகாதவள். அவளிடம் எப்படி நடந்து கொள்வது ? எவ்வாறு பேசுவது? மனத்தில் வஞ்சம் வைத்துக் கொண்டு வெளியில் இனிமையாகப் பேச முடியுமா ? அல்லது அவளுடைய அழகிலே மயங்கித் தன்னுடைய சபதத்தைக் கைவிடும்படியான மனத் தளர்ச்சி ஏற்பட்டு விடுமோ ? அப்படி நேருவதற்கு ஒரு நாளும் இடங் கொடுக்கக் கூடாது...

## கதை, கட்டுரை அனுப்புவோர் கவனத்துக்கு:

கதை, கட்டுரை, கவிதை, துணுக்கு போன்ற தங்கள் படைப்புக்களை எழுத்தார்வமுள்ள அன்பர்கள் 'கல்கி'யில் வெளியிடப் பரிசீலனைக்குத் தாராளமாக அனுப்பலாம். ஆனால் அவை வேறு எந்தப் பத்திரிகைகளுக்கும் அனுப்பப்படாதவையாக இருக்க வேண்டும்.

பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்பவை பற்றிப் பரிசீலனை முடிந்ததும் தகவல் தெரிவிக்கப்படும்.

பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திரும்பப் பெற விரும்புவோர், கட்டாயம் போதிய தபால் தலையுடன்கூடிய தங்கள் முகவரியிட்ட உறைகளை அவற்றோடு இணைத்து அனுப்ப வேண்டும். அப்படி வராதவற்றை எக்காரணம் கொண்டும் திருப்பியனுப்புவதற்கில்லை. இந்த முக்கிய அறிவிப்பைக் கவனத்தில் கொண்டு, எழுத்தாள அன்பர்கள் செயல்பட்டு ஒத்துழைக்குமாறு கோருகிறோம்.

— ஆசிரியர், 'கல்கி'

ஆ! இளவரசி எதற்காக இங்கே நம்மைப் பார்க்க வரவேண்டும்? வரட்டும்; வரட்டும்! ஏதாவது மூர்க்கத்தனமாகப் பேசி மறுபடியும் வராதபடி அனுப்பி விடலாம்.

இவ்விதம் கந்தமாறன் செய்திருந்த முடிவு குந்தவைப் பிராட்டியைக் கண்டதும் அடியோடு கரைந்து மறைந்து விட்டது. அவளுடைய மோகன வடிவும் முகப் பொலிவும் பெருந்தன்மையும் அடக்கமும் இனிமை ததும்பிய அநுதாப வார்த்தைகளும் கந்தமாறனைத் தன் வயம் இழக்கச் செய்து விட்டன. அவனுடைய கற்பனா சக்தி பொங்கிப் பெருகியது. தன்னுடைய பெருமையைச் சொல்லிக் கொள்ள விரும்பாதவனைப் போல் நடித்து அதே சமயத்தில் அவனுடைய கட்டாயத்துக்காகச் சொல்கிறவனைப் போலத் தான் புரிந்த வீரச் செயல்களைச் சொல்லிக் கொண்டான். தோள்களிலும் மார்பிலும் இன்னும் தன் உடம்பெல்லாம் போர்க்களத்தில் தான் அடைந்த காயங்களைக் காட்ட விரும்பாதவனைப்போல் காட்டினான். "அந்தச் சிநேகிதத் துரோகி வந்தியத் தேவன் என்னை மார்பிலே குத்திக் கொன்றிருந்தால்கூடக் கவலையில்லை. முதுகிலே குத்தி விட்டுப் போய் விட்டானே என்றுதான் வருத்தமாயிருக்கிறது. ஆகையினாலேதான் அவனுடைய துரோகத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. இல்லாவிடில், போரில் புறமுதுகிட்ட அபகீர்த்தி அல்லவா ஏற்பட்டு விடும்? தோளிலோ மார்பிலோ குத்திக் காயப்படுத்தியிருந்தால், அவனை மன்னித்துவிட்டே இருப்பேன்!" என்று கந்தமாறன் உணர்ச்சி பொங்கக் கூறியது குந்தவைக்கு உண்மையாகவே தோன்றியது. வந்தியத்தேவன் இப்படிச் செய்திருப்பானா, அவன் விஷயத்தில் நாம் ஏமாந்து போய் விட்டோமோ என்ற ஐயமும் உண்டாகி விட்டது. நடந்ததை விவரமாகச் சொல்லும்படி கேட்கவே, கந்தமாறன் கூறினான். அவனுடைய கற்பனா சக்தி அன்று உச்சத்தை அடைந்து நந்தினிக்கே வியப்பை உண்டாக்கி விட்டது.

"பாருங்கள், தேவி! கடம்பூரில் தங்கிய அன்றே அவன் என்னை ஏமாற்றி விட்டான். தஞ்சாவூருக்குப் புறப்பட்ட காரியம் இன்னதென்று சொல்லவில்லை. இங்கு வந்து ஏதோ பொய் அடையாளத்தைக் காட்டி உள்ளே நுழைந்திருக்கிறான். சக்கரவர்த்தியையும் போய்ப் பார்த்திருக்கிறான். ஆதித்த கரிகாலரிடமிருந்து ஓலை கொண்டு வந்ததாகப் புளுகியிருக்கிறான். அத்துடன் விட்டானா? தங்கள் பெயரையும் சம்பந்தப்படுத்தி, தங்களுக்கும் ஓலை கொண்டு வந்திருப்பதாகச் சொல்லவே கோட்டைத் தலைவருக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அவன் ஒற்றனாயிருக்கலாம் என்று ஐயுற்று அவனைக் காவலில் வைக்கச் சொல்லியிருக்கிறார். எப்படியோ தப்பித்துப் போய் விட்டான். அது விஷயத்தில் அவனுடைய சமர்த்தை மெச்சத்தான் வேண்டும். நான் இந்தச் செய்திகளைக் கேட்டபோது என் சிநேகிதன் பகையாளியின் ஒற்றன் என்பதை மட்டும் நம்பவே இல்லை. அவனுடைய சுபாவத்திலேயே சில கோளாறுகள் உண்டு. அப்படி ஏதோ அசட்டுத்தனம் செய்திருக்கிறான் என்று உறுதியாக நம்பினேன். 'எப்படியாவது அவனை நான் கண்டுபிடித்துத் திரும்ப அழைத்து வருகிறேன். அவனை மன்னித்து விடவேண்டும்' என்று

கோட்டைத் தலைவரிடம் நிபந்தனை பேசிக் கொண்டு புறப்பட்டேன். கோட்டையைச் சுற்றியுள்ள வடவாற்றங்கரையோடு அந்த நள்ளிரவில் சென்றேன். யாரையும் பின்னோடு அழைத்துப் போய் என் நண்பனை அவமானப் படுத்த விரும்பவில்லை. கோட்டையிலிருந்து தப்பியவன் எப்படியும் மதிள் வழியாகத்தான் வெளியில் வரவேண்டுமல்லவா ? முன்னமே வெளியே வந்திருந்தாலும் பக்கத்துக் காடுகளிலே தான் மறைந்திருக்க வேண்டும். ஆகையால் வடவாற்றங்கரையோடு போனேன். ஒருவன் செங்குத்தான கோட்டை மதிள் சுவர் வழியாக இறங்கி வருவது மங்கிய நிலா வெளிச்சத்தில் தெரிந்தது. உடனே அங்கே போய் நின்றேன். அவன் இறங்கியதும், 'நண்பா! இது என்ன வேலை?' என்றேன். அந்தச் சண்டாளன் உடனே என் மார்பில் ஒரு குத்து விட்டான். யானைகள் இடித்தும் நலுங்காத என் மார்பை இவனுடைய குத்து என்ன செய்யும்? ஆயினும் நல்ல எண்ணத்துடன் அவனைத் தேடிப் போன என்னை அவன் குத்தியது பொறுக்கவில்லை. நானும் குத்து விட்டேன். இருவரும் துவந்த யுத்தம் செய்தோம். அரை நாழிகையில் அவன் சக்தி இழந்து அடங்கிப் போனான். என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். நானும் அவனை மன்னித்து, 'நீ வந்த காரணத்தை உண்மையாகச் சொல்லிவிடு ! நான் உனக்கு வேண்டிய உதவி செய்கிறேன் !' என்றேன். 'களைப்பாயிருக்கிறது, எங்கேயாவது உட்கார்ந்து சொல்கிறேன்' என்றான். 'சரி' என்று சொல்லி அழைத்துச் சென்றேன். முன்னால் வழி காட்டிக் கொண்டு போனேன். திடீரென்று அந்தப் பாவி முதுகில் கத்தியினால் குத்தி விட்டான். அரைச் சாண் நீளம் கத்தி உள்ளே போய்விட்டது. தலை சுற்றியது. கீழே விழுந்து விட்டேன். அந்தச் சிநேகத் துரோகி தப்பி ஓடி விட்டான் ! மறுபடி நான் கண் விழித்து உணர்வு வந்து பார்த்தபோது ஓர் ஊமை ஸ்திரீயின் வீட்டில் இருந்ததைக் கண்டேன்.....''

கந்தமாறனின் கற்பனைக் கதையைக் கேட்டு நந்தினி தன் மனத்துக்குள்ளே சிரித்தாள். குந்தவை தேவிக்கு அதை எவ்வளவு தூரம் நம்புவது என்று தீர்மானிக்க முடியவில்லை.

''ஊமை ஸ்திரீயின் வீட்டுக்கு எப்படி வந்து சேர்ந்தீர்கள்? யார் கொண்டு சேர்த்தது?'' என்றாள்.

''அதுதான் எனக்கும் விளங்காத மர்மமாயிருக்கிறது. அந்த ஊமைக்கு ஒன்றுமே தெரியவில்லை. தெரிந்தாலும் சொல்ல முடியவில்லை. அவளுக்கு ஒரு புதல்வன் உண்டாம். அவனையும் அன்றிருந்து காணவே காணோம். எப்படி மாயமாய் மறைந்தான் என்று தெரியாது. அவன் திரும்பி வந்தால் ஒருவேளை கேட்கலாம். இல்லாவிடில் பழுவூர் வீரர்கள் என் நண்பனைப் பிடிக்கும் வரையில் காத்திருக்க வேண்டியதுதான்!....''

''அவன் அகப்பட்டு விடுவான் என்று நினைக்கிறீர்களா ?''

''அகப்படாமல் எப்படித் தப்ப முடியும் ? சப்பட்டை கட்டிக் கொண்டு பறந்துவிட முடியாதல்லவா ? அதற்காகவே, அவனைப் பார்ப்பதற்காகவே, இங்கே காத்திருக்கிறேன். இல்லாவிடில் ஊர் சென்றிருப்பேன். இன்னமும் அவனுக்காகப் பழுவூர் அரசர்களிடம் மன்னிப்புப் பெறலாம் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.''

''ஐயா ! தங்களுடைய பெருந்தன்மையே பெருந்தன்மை!'' என்றாள் இளையபிராட்டி. அவளுடைய மனம் 'வந்தியத்தேவன் அகப்படக் கூடாது. அவன் துரோகியாயிருந்தாலும் சரிதான்!' என்று எண்ணமிட்டது.

அச்சமயத்தில் அரண்மனைத் தாதி ஒருத்தி ஓடி வந்து, ''அம்மா! ஒற்றன் அகப்பட்டு விட்டான் ! பிடித்து வருகிறார்கள்!'' என்று கத்தினாள்.

நந்தினி குந்தவை இருவருடைய முகத்திலும் துன்ப வேதனை காணப்பட்டது. நந்தினி விரைவில் அதை மாற்றிக் கொண்டாள். குந்தவையினால் அது முடியவில்லை. **(தொடரும்)**

அட்டைப்பட விளக்கம்

பௌர்ணமி இரவில் வானத்தில் நாம் காண்பது ஒரு பூரண சந்திரனைத்தான். ஆனால் இந்த இதழ் அட்டைப் படத்திலோ இரண்டு பூரண சந்திரர்களைக் காண்கிறோம். நந்தினி பொன் வண்ண மேனியாள்; குந்தவை செந்தாமரை நிறத்தினள். நந்தினி காண்பவர்களையெல்லாம் மோக மயக்கத்தில் ஆழ்த்தும் பேரழகு படைத்திருந்தாள். குந்தவையோ காண்பவர்களைச் செயற்கரிய செய்ய வைக்கும் வீர அழகுடன் திகழ்பவள். இந்த இரு அழகிகளும் ஒருவரை ஒருவர் அணுகினாலோ இரண்டு வெண் புலிகளின் சந்திப்பாக அது விளங்கியது. அவர்களுடைய சம்பாஷணை மின்னலை மின்னல் வெட்டும் தோரணையில் அமைந்தது. அற்புதமான இந்தக் கதாபாத்திரங்களின் குண இயல்புகளை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது காலஞ்சென்ற திரு மணியம் தீட்டிய உயிரோவியம்.





**ஐக்கிய**
**அமெரிக்க நாடுகள்**
**தூதராலயம்**

பெர்க்லி — கல்கி சிறுகதைப் போட்டியில் பரிசு பெறும் ஒன்பது பேர்களுக்கும் எனது இதயபூர்வமான பாராட்டுக்கள். மேலும் இந்தப் போட்டிக்குக் காரணகர்த்தர்களான ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கும் அவருடன் கல்கி காரியாலயத்தில் பணியாற்றுவோருக்கும் பெர்க்லி தமிழ்ச் சங்கத்துக்கும் எனது வாழ்த்துக்கள்.

இந்தியாவையும் அமெரிக்காவையும் பிரிக்கும் விஷயங்களை விட இணைக்கும் விஷயங்களே அதிகம் என்ற என் நம்பிக்கையை நான் எவ்வளவு அழுத்தமாகச் சொன்னாலும் போதாது. கருத்துக்கள் பரிமாற்றத்தாலும் ஒருவரை ஒருவர் நன்ருக அறிந்து கொள்வதாலும் பரஸ்பரம் புரிந்து கொள்ளவும் மதிப்புக் கொடுக்கவும் உள்ள அடிப்படையை அதிகரித்துக் கொண்டே போகிறோம். இதுதான் எதிர்காலத்தில் நமது குழந்தைகளுக்கு நாம் எத்தகைய உலகை அளிக்க விரும்புகிறோமோ அதனை உறுதிப்படுத்த உதவும். ஆயிரத்து ஐந்நூறு பேர்கள் கலந்து கொண்ட இந்தப் போட்டி அந்த லட்சியத்தை அடைய ஒரு வழி. அதிகாரபூர்வமாக நோக்குகையில் இதில் வெற்றி பெற்றவர்கள் ஒன்பது பேர்களே. ஆனால் இம்மாதிரியான ஒரு முயற்சியில் தோற்பவர்கள் என்று யாரும் கிடையாது என்பது என் நம்பிக்கை.

*செஸ்டர் பௌல்ஸ்*

**புது டில்லி**
**ஏப்ரல் 10, 1969**

பெர்க்லி-கல்கி இலக்கியப் பரிசுத் திட்டத்தின் கீழ் பரிசுக்குரிய சரித்திரச் சிறுகதைகளைத் தேர்ந்தெடுக்கப் பஞ்சாயத்தார்கள் கூட்டம் கல்கி காரியாலயத்தில் ஏப்ரல் 10ந் தேதி வியாழக்கிழமை யன்று காலை நடைபெற்றது. கீழ்க் கண்ட சிறுகதைகள் பரிசுக் குரியனவாகத் தேர்ந்தெடுக்கப் பட்டன.




முதல் பரிசு : ரூ. 1000

இளங்கோவின் துறவு

— 'அய்க்கண்'

இரண்டாம் பரிசு : ரூ. 500

மன்னிப்பு

— ருக்மிணி பார்த்தசாரதி

மூன்றும் பரிசு : ரூ. 250

சாஸனம்

— டி. சாம்பலிங்கம்

சப்பல் போன்ற கார், கப்பல் பார்க்க இட்டுச் சென்றது.

'போர்க் கப்பல் பார்க்கப் போகிறோம். இயந்திர நுட்ப—திட்பங்கள் தெரியாத நமக்குப் 'போர்' அடிக்கப் போகிறது' என்று போட்ட கணக்குத் தப்பாகி விட்டது.

காப்டன் ஜுரவின் கேப்போன் இனிய முகமும் மனமும் படைத்தவர். 'கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கைவைக்காதே' என்னும் தமிழ் மூதுரையை எப்படி அறிந்தாரோ, தெரியாது; எதையும் எளிதாக எடுத்துக் கொண்டு செயற்படுபவர் என்பது தெரிந்தது.

512 அடி நீளமும், 52 அடி அகலமும் கொண்ட டல்லிரென் 5350 டன்களுக்கும் மேலான பளு வாய்ந்தது. இதில் பொருத்தப்பட்டிருக்கும் நவீன போர் முறைச் சாதனங்களோ அதி நுட்பமானவை. கப்பல் தலைவரின் ஆணையில் 32 அதிகாரிகளும் 330 தொழில் நுணுக்கம் தெரிந்த சிப்பந்திகளும் செயல்படுகின்றனர்.

கப்பல் தளபதி ஜுரவின் கேப்போன் ஸ்லேடுகள் போட்டுக் கப்பலின் கருவிகளையும், பணியையும் விளக்கியபோது,







1. டல்லிரென் கப்பலில் பத்திரிகைப் பிரதிநிதிகள்.

2. ஆழ்கடலில் யுத்தக் கப்பல்!

3. கப்பல் சிப்பந்திகள் இந்தியக் கைவண்ணப் பொருள்களை வாங்கி மகிழ்கின்றனர்.

## காணவேண்டிய கப்பல்

அவர் ஒரு விரிவுரையாளராகவும், கேட்பவர்கள் மாணவர்களாகவும் ஆகிவிட்டனர். அது மட்டுமா? ஐயப்பாடுகளைத் தீர்த்துக்கொள்ள அவரைத் துளைத்தெடுத்து விட்டார்கள். அவ்வளவுக்கும் பொறுமையாகப் பதில் சொன்னவர், கப்பல் இயங்கும் விதத்தையும், கப்பலில் பொருத்தப்பட்டிருக்கும் நவீன ஆயுதங்களையும் இயக்கிக் காட்டச் செய்த பொழுது எல்லோருமே இக் கப்பலை எளிதில் செலுத்தும் அறிவு பெற்று விட்டதாக உணர்ந்தனர்.

நீர்மூழ்கிக் கப்பல்களின் இயக்குதலை இனம் கண்டு தவிடுபொடியாக்கும் டார்பிடோ சாதனங்கள், விமானத் தாக்குதலைச் சமாளிக்க ராக்கெட் சாதனங்கள், தொலை தூரத்துக்குச் சுடும் துப்பாக்கிக் குழல்கள் — இதுபோன்ற பல சாதனங்களைப் பெற்றிருக்கும் இப் போர்க் கப்பல் ஹிரண்ய கசிபுவைப் போல் என்ன என்ன வரங்கள் எல்லாம் வாங்கி வந்திருக்கிறதோ என்று எண்ணத் தோன்றியது;

தளபதி கேப்போன் சமிக்ஞை மொழிகளைக் கூடப் பேச வைத்துப் புரிய வைக்க முயன்றார். ''எல்லாவற்றையும் புரிந்து கொண்டு நீங்கள் இப்பொழுது இந்தக் கப்பலை இயக்கிவிடாதீர்கள். நாங்கள் இன்னும் இரண்டு நாட்கள் இங்கு சென்னையில் தங்கிப் போகத் திட்டமிட்டிருக்கிறோம்'' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டு விடை கொடுத்தார்.

ஞாலம் நடுங்க வைக்கும் கப்பல் என்றாலும் அதில் பணி புரியும் ஊழியர்கள் சமாதானத் தூதுவர்கள்; அமைதியையே விரும்புபவர்கள் என்பது புலனாகியது.

கப்பலிலிருந்து கீழே இறங்கி வந்து பார்த்தால் கீழை நாட்டின் கலைச் செல்வங்களை — மரத்தினால் செய்யப்பட்ட யானை, குதிரை போன்ற அழகு வாய்ந்த பொருள்களை அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு ஒன்றுக்கு இரண்டாக விலை கொடுத்து வாங்குவதில் முனைந்திருந்தனர். அஹிம்சையின் வடிவமான அண்ணல் காந்திஜியின் பொம்மையும் அவர்கள் கண்ணிலிருந்து தப்பவில்லை.

அதோடு, 'இத்தனை அழகான கலைப் பொருள்களை உங்கள் நாட்டவரால் எப்படிச் செய்ய முடிகிறது?' என்று கேட்டு, தங்கள் இயந்திர அறிவுக்கும் மேலாக நமது கலைத் திறனுக்கு மதிப்புக் கொடுத்து மகிழ்ந்தனர்.

அதைக் கண்டவர்களின் மனத்தில் போர்க் கப்பலில் பணிபுரிந்தாலும், யாருமே சமாதானத்தைத்தான் விரும்புவார்கள் என்ற எண்ணமே உறுதிப்பட்டது. வையகமெங்கும் சமாதானம் நிலவி இதுபோன்ற போர்க் கலங்கள் காட்சிப் பொருளாக — கலைப் பொருளாக—நிலவும் நன்னாளை எதிர்பார்ப்போமாக!

—ரா. வீ.

---




ஏது வாது தெரியாது. துணிச்சலையும் தூய்மையையுமே அணிகலன்களாகக் கொண்ட கிராமத்துப் பெண் வாணி. அதே கிராமத்தின் ராணியாக விளங்கும் ஜமீன்தாரிணி கௌரி, படித்துப் பட்டம் பெற்றுப் பட்டினத்து நாகரிகத்திலே வளர்ந்து கிராமத்துக்குத் தன் பண்ணையின் பொறுப்பேற்க வருகிறாள். வாணியின் காதலன் குமார். பட்டதாரி. கவிஞன். விவசாயத்தில் ஆராய்ச்சி நடத்தவும் காதலை வளர்த்துக் கொள்ளவும் கிராமத்திலேயே இருக்கிறான். நாட்டாண்மைக்காரர் தருமலிங்கத்தின் ஒரே செல்ல மகன் அவன். இம் மூவருக்கும் இடையே வளரும் போட்டி, பொறாமை, காதல் பிரச்னைகள் உள்ளடங்கியதுதான் தெய்வீகம். நாடகத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் 'எது தெய்வீகம்' என்பது குறித்து மைக் மூலமாக (அறிவிப்பு பாணியில்) அடுக்கு மொழி அலங்காரச் சொற்களால் விளக்கம் தரப்படுகிறது. இதற்கு அவசியமேயில்லை. நாடகத்தின் போக்கிலேயே தெய்வீகத்தை ரசிகர்கள் உணரச் செய்வதே முக்கியம். அது சாத்தியப் படாவிட்டால் நாடகத்தில்? தெய்வீகம் இல்லை என்று அர்த்தம்.

வாணியின் பாத்திரப் படைப்பு புதுமை. வெகுளியாகவும் அதே சமயத்தில் வீர வனிதையாகவும் உருவாக்கப் பட்டிருக்கிறாள். உருவாக்கப்பட்ட பாத்திரத்துக்கு ஏற்ப வாணியாக நடித்தவர் தம் பாத்திரத்தைத் திறம்படச் செய்து விட்டார். நாகரிக ஜமீன்தாரிணியான கௌரியை விட, குமாரின் மனைவியான கௌரியின் நடிப்பும் தோற்றமும் நன்றாக இருந்தன.

இந்த நாடகத்தில் எல்லாரது கவனத்தையும் ஈர்த்துப் பாராட்டையும் பெற்றவர் நாட்டாண்மைக்கார தருமலிங்கமாக நடித்தவர் தான். அவருக்குத் தொண்டை கட்டி இருந்தாலும் கூட அதுவே - அந்தக் கட்டைக்குரலே ஒரு 'காரெக்டராக' அமைந்து விட்டது. தம் மகனையே மணாளனாக்கிக் கொள்ளத் திட்டமிட்டு நாடகமாடுகிறாள் ஜமீந்தாரிணி கௌரி என்றும் அந்தரங்கம் தெரியாமல் அவளிடம் அன்பு காட்டிப் பரிவோடு ஆதரவோடு பேசும் தருமலிங்கத்தின் நடிப்பு அபாரம். தாம் கொடுத்த வாக்கைக் காப்பாற்றக்கூடிய உறுதியும் தகுதியும் உடையவர் தருமலிங்கம் என்பது நல்ல முறையில் உருவாக்கப்பட்டிருக்கிறது. தம்முடைய அந்தக் குணமே தம்மை ஏமாளியாக்கி விட்டதை அறிந்து அவர் துடிப்பதும் வாணியின் வாதங்களுக்கு முன் தலை நிமிர முடியாமல் அவர் குமுறும் இடமும் உயர்வான கட்டங்கள்.

நிவாஜை நடித்தவர் திருத்தமாகப் பேச வேண்டுமென்று கருத்துக் கொண்டிருந்தாலும் கூட அவர் குரல் மைக்கில் எடுபடவில்லை. பல காட்சிகளில் அவர் வசனம் காற்றோடு போய் விடுகிறது. கதாநாயகன் குமாருக்கு இந்நாடகத்தில் அதிக வேலை இல்லை. வாணியும், தருமலிங்கமும் கௌரியும் நன்கு நடிக்க வகை செய்து கொடுக்கும் ஒரு பாத்திரம் தான் குமார்.

தெய்வீகம் கதைக்கருவும் கருத்தும் சக்தி கிருஷ்ணசாமி அவர்களுடையவை. நாடக ஆக்கம் வசனம் இவற்றின் பொறுப்பு 'வியட்நாம் வீடு' சுந்தரத்தினுடையவை. கிராமியச் சூழ்நிலையில், கிராமங்களின் பண்பாடு, நம்பிக்கை ஆகியவைகளுக்கு முக்கியம் கொடுத்து உருவாக்கப்பட்டது தெய்வீகம். சிற்சில இடங்களில் சுந்தரத்தின் வசன முத்திரையைக் காண முடிகிறது. இந்நாடகம் சுந்தரத்துக்கு மற்றொரு பெரிய வெற்றி என்று சொல்ல முடியாவிட்டாலும் தோல்வியல்ல. தெய்வீகத்துக்கு மக்களிடையே என்றுமே மதிப்பு இருக்கத் தானே செய்கிறது!

# ராமாயணம்

## ராஜாஜி

## 4. பிரம்ம தண்டம்

விசுவாமித்திரருடைய உக்கிர தவத்தைக் கண்டு பரமசிவன் மகிழ்ந்து தரிசனம் தந்தான்.

"அரசே! உனக்கு என்ன வேண்டும்? எதை விரும்பித் தவம் செய்தாய்?" என்று மகாதேவன் கேட்டான்.

விசுவாமித்திரர் கைகூப்பி வணங்கி, "சுவாமி! என் தபசு உமாபதிக்குத் திருப்தி தந்திருந்தால், தனுர் வேதத்தை எனக்குப் பூரணமாக அருள வேண்டும். சகல அஸ்திரங்களையும் எனக்கு வசமாக்கித் தந்தருள வேண்டும்" என்றார்.



"அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், ரிஷிகள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் அனைவரும் அடைந்த எல்லா அஸ்திரங்களையும் விசுவாமித்திரருக்கு மகாதேவன் தந்தான்.

பரமேசுவரன் தந்த வரத்தைப் பெற்றுக் கொண்டு விசுவாமித்திரர் திரும்பினார். தவத்தால் தாம் அடைந்த சக்தியைக் குறித்து, பருவகால சமுத்திரத்தைப் போல் அகங்காரம் பொங்கி,

'வசிஷ்டரைத் தீர்த்து விட்டேன்' என்று தமக்குள் எண்ணிக் கொண்டே திரும்பினார்.

நேரே வசிஷ்டர் ஆசிரமத்துக்குச் சென்றார். விசுவாமித்திரர் கோபத்தோடு யமனைப் போல் வருவதைக் கண்டு வசிஷ்டரின் ஆசிரமத்திலிருந்த சீடர்களும் பிராணிகளும் திகில் கொண்டு மூலைக்கு மூலை ஓடினார்கள்.

விசுவாமித்திரர் விட்ட ஆக்னேயாஸ்திரத்தின் வேகத்தால் ஆசிரமம் எரிந்து சாம்பலாயிற்று. ''பயப்பட வேண்டாம்'' என்று வசிஷ்டர் எவ்வளவு சொன்னாலும் சிதறி ஓடுகிறவர்கள் பயம் தாங்காமல் ஓடிக் கொண்டேயிருந்தார்கள்.

வசிஷ்டர் இதைக் கண்டு வருத்தப்பட்டு, 'இந்தக் கௌசிகருடைய கர்வத்தை அடக்க வேண்டும்' என்று காலாக்கினிபோல் ஜொலிக்கும் தம் பிரம்ம தண்டத்தைக் கையில் எடுத்து, ''மூடனே!'' என்றார்.

விசுவாமித்திரர் ஆக்ரோஷங் கொண்டு, ''ஏய், வசிஷ்டரே! நில்லும், நில்லும்!'' என்று அதட்டி, தாம் புதிதாகக் கற்ற ஆக்னேயாஸ்திரத்தை அவர் மேல் விட்டார்.

வசிஷ்ட மாமுனிவர், ''இதோ நிற்கிறேன், நான் ஓடவில்லை'' என்று கூறிப் பிரம்ம தண்டத்தைத் தமக்கு முன்னே நிறுத்தினார். விசுவாமித்திரருடைய அஸ்திரமெல்லாம் தண்ணீரைக் கண்ட நெருப்பைப் போல் அணைந்து நின்றன.

பிறகு விசுவாமித்திரர் தாம் அடைந்த அஸ்திரங்கள் அவ்வளவையும் பிரயோகித்தார். அவை அனைத்தையும் வசிஷ்டருடைய பிரம்மதண்டம் விழுங்கிற்று. முனிவர் சுகமாக நின்றார். இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்டு விசுவாமித்திரர் பிரம்மாஸ்திரத்தை விடுத்தார்.

'பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்து விட்டாரே, என்ன கதியாகுமோ?' என்று ரிஷிகளும் தேவர்களும் கவலையுற்றார்கள். முனிவருடைய பிரம்ம தண்டம் அரசனுடைய பிரம்மாஸ்திரத்தையும் விழுங்கி விட்டது. அஸ்திரத்தை உட்கொண்ட வசிஷ்டரின் பிரம்ம தண்டத்தினின்று நெருப்புப் பொறிகள் சுற்றிலும் பறந்தன. தண்டத்தைப் பிடித்து நின்ற வசிஷ்டருடைய உடலும் நெருப்பாக ஜொலித்தது.

விசுவாமித்திரர் பிரமித்துப் போனார். பெருமூச்செறிந்து, ''நான் தோற்றேன். க்ஷத்திரிய பலம் என்னத்துக்காகும்! இந்த ரிஷி ஒரு கோலை வைத்து நான் விடுத்த அஸ்திரங்களையெல்லாம் விழுங்கித் தீர்த்தார். பரமசிவன் என்னை ஏமாற்றி விட்டான். இவரைப் போல் நானும் பிரம்ம ரிஷியாக வேண்டுமேயொழிய வேறு வழியில்லை'' என்று யுத்தத்தை நிறுத்தி மறுபடியும் கடுந்தவம் செய்வதற்காகத் தென்புறம் சென்றார்.

பிரம்மாவை உபாசித்து அநேக ஆண்டுகள் தவம் செய்தார். முடிவில் நான்முகன் பிரசன்னமானான். ''குசிக புத்திரனே! உன் தவத்தால் ராஜரிஷிப் பதவியை அடைந்தாய்'' என்று விசுவாமித்திரரை ஆசீர்வதித்துவிட்டு மறைந்தான்.

தாம் செய்த கோரமான தவமெல்லாம் ராஜரிஷிப் பதவியைத்தானே தந்தது என்று துக்கமடைந்து இன்னும் மிகக் கோரமான தவங்களைச் செய்யலானார்.

## 5. திரிசங்கு

**வி**சுவாமித்திரர் இவ்வாறு தவம் செய்து கொண்டிருந்த காலத்தில் சூரிய குல அரசன் திரிசங்கு என்பவன் பெரும் புகழுடன் அநேக ஆண்டுகள் அரசு புரிந்து தேகத்துடன் சுவர்க்கம் போக வேண்டும் என்று ஆசை கொண்டான். அதற்காக





வசிஷ்டரிடம் சென்றான். வசிஷ்டர் அவனுடைய குல குரு.

அவர், "உம்மால் இது இயலாது. வேண்டாம், இந்த யோசனையை விட்டு விடுவீராக" என்றார்.

திரிசங்குவுக்கு இது பிடிக்கவில்லை. வசிஷ்டருடைய புத்திரர்களிடம் போய், "உங்களுடைய தகப்பனார், என்னுடைய குருவானவர், முடியாது என்று சொல்லிவிட்ட இந்த யாகத்தை நீங்கள் நடத்தித் தாருங்கள். என்னுடைய குரு என்னைக் கைவிட்டு விட்டார். நீங்கள் என் வேள்வியை நடத்தித் தர வேண்டும்" என்றான்.

வசிஷ்ட குமாரர்களுக்கு மிகுந்த கோபம் வந்தது.

"ஏன் உமக்கு இந்தத் துர்ப் புத்தி பிடித்தது? உம்முடைய குருவும் எங்கள் பிதாவும் சொன்ன சொல்லுக்குக் கட்டுப்படாமல் எங்களிடம் வந்திருக்கிறீர். திரும்பிப் போவீராக" என்றார்கள். திரிசங்கு அதைக் கேட்காமல், மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கொண்டே நின்றான்.

"மூர்க்க அரசனே! எங்கள் பிதாவை அவமதிக்க எங்களை நீர் பயன்படுத்திக் கொள்ளப் பார்க்கிறீர்; திரும்பிப் போவீராக!" என்றார்கள்.

"உங்களால் முடியாவிட்டால் வேறு யாரையாவது நான் தேடியலைந்து என் காரியத்தை முடித்தே தீருவேன்" என்று திரிசங்கு அவர்களுக்குக் கோபம் அதிகரிக்கும் முறையில் சொன்னான்.

அவர்கள் அதைப் பொறுக்காமல் அரசனை, "குருவை அவமதித்த அரசனே! நீ சண்டாளன்" என்று சபித்து விட்டு அவனை அனுப்பி விட்டார்கள்.

அன்றிரவு தூங்கினவன் காலையில், தன் அழகிய உருவமும் காந்தியும், நிறமும் இழந்து, அவலட்சண வடிவத்தோடு, பீதாம்பரத்துக்குப் பதில் அழுக்குத் துணியோடு எழுந்தான். அவன் அணிந்திருந்த ஆபரணங்கள் எல்லாம் மாறி விட்டன. மந்திரிகளும் பரிவாரமும் நகரத்து ஜனங்களும் அரசனுடைய சாப உருவத்தைப் பார்த்துத் தூர விலகி ஓடினார்கள். எல்லாரும் அவனைக் கண்டு வெறுத்தார்கள். வெட்கமும் துக்கமும் மேலிட்டு அரசன் தன்னந் தனியாக ஊரை விட்டு விலகி, ஊண் உறக்கமின்றி இரவும் பகலும் திரிந்தான்.

சண்டாள வேஷத்தோடு திரிசங்கு ராஜன் தபோதனராகிய விசுவாமித்திரர் ஆசிரமத்துக்குச் சென்றான். அவர் இவனைக் கண்டதும் கருணை மேலிட்டு, "நீ திரிசங்கு ராஜா அல்லவா? ஏன் இந்த வடிவம் அடைந்தாய்? யாருடைய சாபம்?" என்று கேட்டார்.

திரிசங்கு நடந்த விஷயம் எல்லாம் சொல்லி, "நான் என் ராஜ்யத்தைத் தருமம் தவறாமல் பரிபாலித்தேன். சத்திய வாழ்க்கை நடத்தினேன். நான் ஒரு பாபமும் செய்ததில்லை. எந்த விதத்திலும் யாருக்கும் தீங்கு செய்தது கிடையாது. என் குருவும் அவருடைய குமாரர்களும் என்னைக் கைவிட்டு, என்னை இந்த நிலை அடையச் சாபமிட்டு விட்டார்கள். நீர் தான் காப்பாற்ற வேண்டும்" என்று கூறி அவர் காலில் விழுந்தான்.

சாபத்தின் பயனாகச் சண்டாளனாகி விட்ட அரசனிடம் விசுவாமித்திரருக்கு அனுதாபம் பொங்கி வந்தது. விசுவாமித்திரருடைய கஷ்டம் இதுவே. அவருடைய இரக்கம், அன்பு, கோபம் முதலிய உணர்ச்சி வேகங்கள் அதிக தீவிரம்.

அவனைப் பார்த்து மதுரமான மொழியில் சொன்னார்: "அப்பனே! இக்ஷ்வாகு குலத்தரசனே! உனக்கு நல்வரவு. உன் தரும வாழ்க்கையைப் பற்றி நான் நன்றாக அறிந்தவன். உனக்கு நான் அபயம் தந்தேன். ரிஷிகள் உள்பட எல்லாரையும் அழைத்து, நீ நடத்த வேண்டும் என்று விரும்பிய வேள்வியை நான் நடத்தித் தருவேன். குருவின் கோபத்தால் நீ அடைந்த இந்தச் சண்டாள வடிவத்தோடேயே நீ சுவர்க்கம் சேருவாய். இது நிச்சயம்" என்று வாக்களித்து விட்டார்.

யாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து விட்டு, "உன் குருவால் உனக்கு நேர்ந்த இந்தச் சண்டாள தேகத்தோடே நீ சுவர்க்கம் அடைவாய். எப்போது நீ கௌசிகனிடம் சரணடைந்தாயோ அப்போதே நீ கோரிய எண்ணம் நிறைவேறினதாக வைத்துக் கொள்" என்று திரிசங்கு மகாராஜனுக்கு மறுபடியும் தைரியம் சொன்னார்.

சொல்லிவிட்டுத் தம் சீடர்களுக்கு உத்தரவிட்டார்: "நீங்கள் போய் எல்லா ரிஷிகளையும் சிஷ்யர்களோடு வேள்விக்கு வரும்படி நான் அழைத்ததாகச் சொல்லுங்கள்" என்றார்.

சீடர்களும் அவ்விதமே எல்லாப் பெரியோர்களிடமும் சென்று விசுவாமித்திரருடைய அழைப்பைத் தெரிவித்தார்கள். அநேகமாக எல்லோரும்

வருவதற்குச் சம்மதித்தார்கள். மகா தபஸ்வியான விசுவாமித்திரரின் அழைப்பை நிராகரிக்க அவர்களுக்குத் தைரியமில்லை.

ஆனால் வசிஷ்டரின் குமாரர்களை அழைத்தபோது அவர்கள், ''நாங்கள் வரமாட்டோம் என்று ரிஷியிடம் சொல்லுங்கள். ரிஷி எவ்வளவு தபஸ்வியாயிருந்தாலும் க்ஷத்திரியரான ஒருவர் எப்படி இவ்விதமான மந்திரச் சடங்குகளை நடத்தக் கூடும்? அதிலும் சண்டாளனுக்காக எப்படி யாகம் நடத்தலாம்?'' என்று ஆட்சேபித்து மறுத்து விட்டார்கள்.

இதைக் கேட்டதும் விசுவாமித்திர ரிஷி கடுங் கோபங் கொண்டு, ''நான் செய்யும் காரியத்தில் ஒரு தவறுமில்லை. கர்வங்கொண்ட இந்த வசிஷ்டகுமாரர்கள் இறந்து சாம்பலாகக் கடவார்கள். அவர்கள் ஏழு ஜன்மம் வரையில் நாய் தின்னும் ஜாதியாகக் கடவார்கள்'' என்று சபித்து விட்டு, நிச்சயித்தபடி யாகத்தைச் செய்ய ஆரம்பித்தார்.

கூடியிருந்த பெரியோர்களுக்கெல்லாம் காரியத்தை எடுத்துச் சொன்னார் : ''மகா தர்மவான், சத்யவான், இக்ஷ்வாகு குலத்தரசன், இவன் சரீரத்தோடு சுவர்க்கம் செல்ல வேண்டுமென்று இந்த வேள்வியைச் செய்ய நான் நிச்சயித்திருக்கிறேன். நீங்கள் அனைவரும் கலந்து கொண்டு காரியத்தை நிறைவேற்றித் தரவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

'இவர் மகா பலம் பெற்ற தபஸ்வி. இவருடைய கோபத்தை நாம் தாங்க முடியாது' என்று பயந்து எல்லாரும் வேள்வியில் கலந்து கொண்டார்கள். எல்லாச் சடங்குகளையும் கௌசிகருடைய தலைமையில் கிரமப்படி நடத்தினார்கள்.

வேள்வியின் முடிவில் தேவர்களை அழைத்து, ''அவியைக் கொள்ளுங்கள்'' என்று சொல்ல வேண்டிய காலம் வந்தது. அப்படியே விசுவாமித்திரர் தேவர்களை மந்திரம் சொல்லி அழைத்தார். ஆனால், யாரும் வரவில்லை! வேள்வி வீணாயிற்று. அழைப்புக்குப் பயந்து வந்த ரிஷிகள் மனத்துக்குள் விசுவாமித்திரரைப் பரிகசித்தார்கள்.

விசுவாமித்திரருக்குக் கடுங்கோபம் வந்து, தம் கையில் வைத்திருந்த நெய்க் கரண்டியை உயரத் தூக்கித் திரிசங்கு ராஜனை நோக்கி, ''என் தவத்தின் வலிமையைப் பார்ப்பாய், திரிசங்குவே! என் முயற்சியும் தவமும் சக்தி அவ்வளவும் உனக்குப் பயன் படுவதாக. என் தவத்துக்குச் சிறிதளவேனும் சக்தி உண்டாயின் நீ உன் சரீரத்துடன் இப்போதே சுவர்க்கம் ஏறுவாய்! தேவர்கள் அவி எடுத்துக் கொள்ளாதது பற்றி எனக்குக் கவலையில்லை. அரசனே, செல் மேலே!'' என்றார்.

அப்போது ஓர் அற்புதம் நடந்தது. அங்கே கூடியிருந்த ரிஷிகள் பிராமணர்கள் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கச் சண்டாளனை ராஜா அப்படியே ஆகாயத்தில் கிளம்பினான். விசுவாமித்திரருடைய தவ வலிமையை அப்போது உலகம் கண்டது.

திரிசங்கு சுவர்க்கத்தை அடைந்தான். உடனே இந்திரன் பார்த்தான். ''சண்டாள சரீரத்துடன் எவன் இங்கே வருகிறான்? குருவினிடம் சாபம் பெற்ற மூடனே, போ!'' என்று கீழே தள்ளிவிட்டான். சுவர்க்கத்திலிருந்து திரிசங்கு கதறிக் கொண்டு தலை கீழாக விழுந்தான். கீழே விழ விழ, ''ஐயோ, என்னைக் காப்பாற்றுவீர்! காப்பாற்றுவீர்!'' என்று திரிசங்கு கதறினான்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த விசுவாமித்திரர் தம் தபோபலத்தைத் தேவர்கள் இப்படியா இகழ்கிறார்கள் என்று கோபாவேசங் கொண்டு, ''நில்! நில்!'' என்று சொல்லி அந்தரிஷிகளுக்குமிடையில் ஒரு புது சதுர்முகப் பிரம்மாவைப் போல் ஜொலித்தார். தலை கீழாக விழுந்த திரிசங்கு, விசுவாமித்திரர் 'நில்' என்றதும் நடு ஆகாயத்தில் ஒரு நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டு அப்படியே நின்றான். அந்தக் கணமே ஆகாயத்தில் திரிசங்கு நின்ற தென் திசையில் புதிய துருவம், புதிய சப்த ரிஷிகள் இன்னும் பல நட்சத்திரங்களையும் சிருஷ்டித்து நிறைந்து விட்டார்.

''புது இந்திரனையும் உண்டாக்கி நிலை பெறச் செய்வேன். புதிய தேவர்களையும் உண்டாக்குவேன்'' என்று சொல்லிச் சொன்னபடியே செய்ய ஆயத்தமானார்.

''இது என்ன! விபரீதமாக முடியும் போலிருக்கிறதே!'' என்று எண்ணித் தேவர்களும், ரிஷிகளும் விசுவாமித்திரரிடம் வந்தார்கள்.

விசுவாமித்திரரிடம் நயமாகப் பேசி, ''இந்தக் காரியம் வேண்டாம், திரிசங்கு முதலிய எல்லா நட்சத்திரங்களும் தாங்கள் நிர்ணயித்தபடியே சாசுவதமாக இருக்கட்டும். தங்களுடைய புகழுக்குக் குறைவு வேண்டாம். கோபத்தைத் தணித்துக் கொண்டு எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். இப்படி விசுவாமித்திரரை ஒருவாறு சமாதானப்படுத்திவிட்டுத் திரும்பினார்கள். அதுவரை விசுவாமித்திரர் செய்த தவம் இவ்வாறு செலவழிந்து போய் விட்டது. **(தொடரும்)**






திரு கே. ஜோதிப்பிரகாசம்

திரு கே. எஸ். சீதாராமன்

திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சுவாமி கோயில் சன்னதித் தெருவில் ஒரு வீடு. காற்றுப் புகாவண்ணம் அந்த ஹாலைத் துணிகள் கட்டி மறைத்திருக்கிறார்கள். வியர்வை ஆறுகப் பெருகச் சிறியவர்களும் பெரியவர்களும் ஆவலோடு பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அடுத்த வீட்டுப் பையன் 'அஹமதாபாத் உடன்படிக்கை, அஹமதாபாத் உடன்படிக்கை....' என்று உரக்கப் படிக்கிறான், பரீட்சைக்கு!

''ஏய்' அப்புறம் படிடா!''

''மெதுவாக வாசி!''

''பரீட்சை கிடக்கட்டும்டா! அப்புறம் படி!''

அந்தப் பையனைப் பரீட்சைக்குப் படிக்க விடாமல், காற்றுக்கும் கவலைப்படாமல் அவ்வளவு தூரம் அவர்கள் ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தது என்ன தெரியுமா? திருவல்லிக்கேணி காஸ்மாபாலிடன் கிளப் ஆதரவில் நடைபெற்ற கேரம் ஆட்டம்தான்!

கேரம் போட்டியின்போது சிறிது காற்று வீசினாலும் அது போர்டில் காயை அசைத்து விடுமாம்! அதற்காகத்தான் திரை போட்டு ஆடினார்கள்!

தமிழக அரசுப் போக்குவரத்து தொழில் நுணுக்கப் பிரிவைச் சேர்ந்த வி. வாஸர் கேரம் ஆட்டங்களின் நுணுக்கங்களில் வல்லவராகக் காய்களைக் குழிகளில் தள்ளிக் கொண்டிருந்தார். அவரை எதிர்த்து ஆடிய கென்னடி நினைவுக் கிளப்பைச் சேர்ந்த எஸ். டெல்லி சளைக்காமல் போட்டியிட்டார். இரண்டு ஆட்டங்கள் வெற்றி தோல்வியின்றி முடிந்ததும், மூன்றாவது ஆட்டத்தை வாஸர் அபாரமாக ஆடிக் கைப்பற்றினார். வாஸர் ஆறு வருடங்களாகக் கேரம் ஆட்டத்தில் கலந்து கொண்டு வருகிறார். 1967ம் வருஷ தமிழக சாம்பியன் இவர். கேரம் இரட்டையர் ஆட்டத்தில் டெல்லியும் சேதுராமனும் சென்ற வருஷ சாம்பியன் அஹமத்தையும், சுந்தரராஜனையும் வென்று ஜயக்கொடி நாட்டினர்.

''நகைச்சுவை நடிகர் திரு என். எஸ். கிருஷ்ணன் நல்லா கேரம் ஆட்டம் ஆடுவாரு. பல கேரம் ஆட்டக்காரர்களை இந்தியாவின் பல பகுதிகளிலும் நடக்கும் போட்டிகளில் கலந்து கொள்ள அனுப்பி வைக்க உதவி செய்தாரு. அவர் நினைவாகவே என். எஸ். கே. நினைவுக் கோப்பை வழங்கி வருகிறோம்!'' என்று பெருமையுடன் கூறினார் தமிழக கேரம் போர்டு கழகக் காரியதரிசி பங்காரு பாபு.

ஃ ஃ ஃ

செஸ் ஆட்டம் உலகப் பிரசித்தி பெற்றது. நெப்போலியன், வால்டேர், பிரடெரிக் தி கிரேட் ஆகியோரெல்லாம் செஸ் ஆட்டத்தில் நிபுணர்கள்.

செஸ் பிறந்தது ஆசியாவில். துரியோதனன் தர்மனை ஆட அழைத்த சொக்கட்டான் ஆட்டத்துக்கும் இதற்கும் உறவு உண்டு என்று நாம் பெருமைப்படலாம். ஆனால் இதற்குச் சில சகுனிகள் தோன்றி மறுப்புக் கூறலாம்!

கேரம் ஆட்டத்தில் வெற்றி பெற்றவர்களோடு திரு ஏ. வி. எம். ராஜன் தம்பதியினர்.



கேரம் போட்டி மும்முரமாக நடக்கிறது!



செஸ் என்ற வார்த்தை பாரசீகத்தில் அரசன் என்ற பெயரான ஷாவிலிருந்து வந்துள்ளது. கிறிஸ்து பிறப்பதற்கு முன் 4000 ஆண்டுகளுக்கு முன் மெஸபொடோமியாவில் செஸ் ஆட்டம் பிரசித்தமா யிருந்திருக்கிறது. பாரசீகத்தைப் படையெடுத்த அராபியர்கள் செஸ் ஆட்டத்தையும் கற்றுக் கொண்டு ஸ்பெயினுக்கும் ஐரோப்பாவுக்கும் பரப்பினார்கள். அமெரிக்காவுக்கு பெஞ்சமின் பிராங்ளின் இந்த ஆட்டத்தைக் கொண்டு சென்றார். முதல் செஸ் உலகப் போட்டி லண்டனில் 1851ம் ஆண்டு நடைபெற்றிருக்கிறது. பெல்ஜியத்தைச் சேர்ந்த ஜார்ஜ் கால்டா நோவிஸ்கி 34 ஆட்டங்கள் ஆடி, அதில் 24ல் வெற்றி பெற்று, 10 ஆட்டங்கள் வெற்றி தோல்வியின்றி முடித்து ஓர் உலக ரிகார்டை ஸ்தாபித்திருக்கிறார்.

ஃ ஃ ஃ

திருவல்லிக்கேணி காஸ்மாபாலிடன் கிளப்பினர் தங்கள் முதல் செஸ் போட்டியைச் சிறப்பாக நடத்தினார்கள். முதல் ரவுண்டில் தோல்வியைத் தழுவிய கே. ஜோதிப்பிரகாசம் கடைசியில் எட்டுப் பாயிண்டுகளுக்கு ஆறரை பாயிண்டுகள் எடுத்துப் பார்த்தசாரதிப் பெருமான் கழல் கோப்பையைப் பெற்றார். இவரோடு இறுதி ஆட்டத்தில் ஆட வேண்டிய கே. எஸ். சீதாராமன் தமிழக செஸ் ஆட்டக்காரர்கள் வரிசையில் இடம் பெற்றவர். ரயில்வே டி.எஸ்.டி. இலாகாவில் ஸ்டெனோ உத்தியோகம் பார்க்கும் இவர் வேலை நிமித்தமாகச் சென்றதால், செஸ் இறுதி ஆட்டத்தில் கலந்து கொள்ள முடியவில்லை. பன்னிரண்டு வயதிலே தம் தாத்தாவிடம் செஸ் ஆட்டத்தைக் கற்றுக் கொண்டார். ஆபீஸ் வேலை தவிர மற்ற நேரமெல்லாம் செஸ் ஆட்டமும் அதன் நுணுக்கங்களைப் பற்றியறியும் ஆவலும் இவர் !மனத்தில் இடம் பெற்றிருக்கும்! வீட்டிலே இவர் ஆட்டத்தில் மூழ்கி யிருந்தால் இவர் தலையில் தண்ணீரைக் கொட்டித்தான் சாப்பிட அழைக்க வேண்டி நேரிடும்!

ஜோதிப்பிரகாசம் உலோக வியாபாரி கண்ணப்ப பிள்ளையின் குமாரர். மின்சாரத் துறையில் பி. ஈ. பட்டம் பெற்றவர். அப்பாவைப் போலவே மகனும் இப்பொழுது உலோக வியாபாரத் துறையில் ஈடுபட்டிருக்கிறார். "மாணவ சாம்பியனை நான் பட்டம் பெறும்வரை சிறிது காலம் செஸ் ஆட்டத்தை நிறுத்தி வைத்திருந்தேன். இப்பொழுது மறுபடியும் ஆடத் தொடங்கி விட்டேன்" என்கிறார் மகிழ்ச்சியோடு.

செங்கல்பட்டு ஜில்லா அச்சரபாக்கத்தைச் சேர்ந்த ஜோதிப்பிரகாசத்துக்கு மணமாகி விட்டது. செஸ் ஆட்டத்தில் இவர் மூழ்கி விடுவதால் மனைவியின் கோபத்துக்கு உள்ளாகவில்லை. இவரது ஆட்டத் திறமையைக் கண்டு இவரது மனைவி பூரிப்படைகிறார்!

சென்னை செஸ் ஆட்டக்காரர்களுக்கு ஒரு யோகம். இந்தியச் சாம்பியன்கள் வரிசையில் இரண்டாவது ஸ்தானம் பெறும் ஆரன் சென்னையில் இந்தியன் பாங்கியின் விஸ்தரிப்பு இலாகாவில் பணியாற்றுகிறார். இவர்தான் தமிழக சாம்பியன்! எல்லா செஸ் ஆட்டக்காரர்களுக்கும் பயிற்சி அளிப்பதில் இவர் மிகுந்த கவனம் செலுத்துகிறார்.

சென்னை செஸ் ஆட்டக்காரர்கள் ஆரன் தலைமையில் இலங்கைக்கு ஏப்ரல் 6ந் தேதி புறப்பட்டுச் சென்று ஏப்ரல் 22ந் தேதிவரை டெஸ்ட் மாட்ச் ஆடுகிறார்கள்.

திருவல்லிக்கேணி காஸ்மாபாலிடன் கிளப் நடத்திய போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்குவதற்காகக் காஞ்சிபுரத்தில் 'ஷூட்டிங்'கை முடித்துக்கொண்டு ஓடோடி வந்தனர் ஏ. வி. எம். ராஜன் தம்பதியினர். வந்த வேகத்திலேயே பேசிய திரு ராஜன், "ராமாயண காலத்திலேயே செஸ் ஆட்டம் சகுனி ஆடியிருக்கிறான்!" என்று சொல்லிக் கொண்டு போனார். அதனாலென்ன? பழங்காலத்திலே இந்த ஆட்டத்தில் இருந்த மோகத்தினால் பட்ட பட்ட ராஜாக்களே பெருந் தவறுகள் செய்தார்கள். இந்தத் திரைப்பட ராஜன் வாய் தவறியதில் அதிசயமென்ன?

—குண்டுமணி

## பறவை கற்பித்த பாடம்

ஒலியைவிட வேகமாகப் பறக்கக்கூடிய போர் விமானங்கள் இன்று ஏராளமாய் இருந்தாலும் பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் இத்தகைய விமானங்கள் இன்னும் பரிசோதனைக் கட்டத்திலேயே இருந்து வருகின்றன. படத்தில் நீங்கள் காண்பது இத்தகைய ஒரு விமானமே. பிரிட்டிஷ் பிரெஞ்சு கூட்டுறவில் தயாரான கன்கார்டே. அதன் 'மூக்கை'க் கவனியுங்கள். கீழ்நோக்கிச் சாய்ந்திருக்கிறதல்லவா? வானில் உயரே சென்று பறக்கும்போது அம்மூக்கு நீண்டு நேராகும். பூமி மட்டத்தை விமானம் நெருங்கும்போது அது கீழ் நோக்கிச் சாயும். ஒலியினும் வேகமாய் விரையும் விமானங்களுக்கு இத்தகைய அமைப்பு அத்தியாவசியமாகிறது. நாரை போன்ற பறவைகள் பறக்கும்போதும் கீழே இறங்கும்போதும் கவனியுங்கள். அவற்றின் அலகும் இதேபோன்று செயல்படுவதைக் காணலாம்.



இயற்கை மனிதனுக்குக் கற்பித்த பாடங்களில் ஒன்று இது.

படம்: "உலகச் செய்திப் படங்கள்"

## காட்சி - 2

(புதுச்சத்திரம் ஊரின் எல்லையில் தென்னந் தோப்பு. ஓர் இடத்தில் அந்தோணி உட்கார்ந்திருக்கிறான். அவனருகே கள்ளும் பானை. நல்லசிவமும், வெங்கிட்டுவும் இன்ஸ்பெக்டர் லாரன்ஸுடன் வந்து அவருக்கு அந்தோணியைச் சுட்டிக் காட்டுகின்றனர். அவனை நெருங்குகிறார் லாரன்ஸ்.)

**லாரன்ஸ்:** அந்தோணி ! அந்தோணி !

(அவர் அழைப்புக்குச் செவி சாய்க்காமல் குடிக்க முற்பட்டுக் கலயத்தை வாயில் கவிழ்த்துக் கொள்கிறான் அந்தோணி. தம் கைத்தடியால் கலயத்தைத் தட்டிவிடுகிறார் லாரன்ஸ். பானை கீழே விழுந்ததும் அந்தோணி ஆத்திரத்துடன் அரிவாளை ஓங்கியபடி நிமிர்ந்து எழுகிறான்.)

**அந்தோணி** (எதிரே நிற்கும் லாரன்ஸைப் பார்த்தவன் ஓங்கிய அரிவாளைக் கீழே இறக்கி): நீயா ? உன்னை யாரு இங்கே கூட்டிக்கிட்டு வந்தாங்க..... ம்....

**நல்ல, — வெங்கிட்டு:** நாங்க இல்லே.... நாங்க இல்லே....!

**நல்ல:** ஊரிலே எவ்வளவோ பெரிய மனுஷங்க இதே தப்பைச் செய்யறாங்க. அவங்களைப் பத்திப் புகார் பண்ணாமல் உன்னைப்பத்தி மட்டும் சொல்றதுக்கு எங்களுக்கு என்ன பைத்தியமா பிடிச்சிருக்கு? இல்லே, அத்தனை தைரியமாப் பேச நாங்க என்ன குடிச்சு இருக்கோமோ?

**வெங் :** குடிக்கிறது தப்பில்லையே!

**நல்ல:** குடிச்சுட்டுக் கலாட்டா செய்தாத்தான் தப்பு ! இன்ஸ்பெக்டர்கிட்டேயே இதைச் சொன்னோம். 'குடிச்சால் ஆயுசு அதிகரிக்கும்; அவங்களுக்கு ஊரிலே தனி மதிப்பு; ஔஷத சாஸ்திரப்படி எவன் ஒருத்தன் ஒரே தென்னை மரத்திலே இறக்கின கள்ளை விடாமல் ஒரு மண்டலம் சாப்பிடுறானோ அவன் அமிர்தத்தைச் சாப்பிட்டதற்குச் சமம்'னு சொன்னோம் ! இவர் நாங்க சொல்வது புரியாமல் முழிச்சார். சரி....இன்ஸ்பெக்டர் தென்னை மரமே பார்த்ததில்லே போலிருக்கு, காண்பிக்கலாம்னுதான் அழைச்சுக்கிட்டு வந்தோம்!

**வெங்:** தொலைவிலேயிருந்து பார்த்தார். மரத்தடியிலே யாரு ? தெரிஞ்ச ஆள் போல இருக்கேன்னார் !

**நல்ல:** நம்ம அந்தோணிதான் என்றோம்.

**வெங்:** 'அப்படியா?' என்றார். 'சார்! அவனை நாங்க தொந்தரவு பண்ணமாட்டோம். பாவம், மரத்தடியிலே பால் சாப்பிடுறான்.... கள்ளு குடிக்கலே'ன்னுட்டோம்.

**நல்ல,—வெங்கிட்டு:** எங்களை விட்டுடு. நாங்க பாவம். இருட்டினா வெளியே வரவே பயப்படுவோம், ஏன் உன் விஷயத்திலே தலையிடப் போறோம் ?

(அவர்கள் பயந்து ஓடியதும் கூண்டை விட்டு வெளியே வந்த சிறுத்தையாகத் திரும்புகிறான் முரடன் அந்தோணி. அவன் முன் எதையும் ஈடு கொடுக்கும் வலிமையும் உறுதியும் கொண்ட லாரன்ஸ் நிற்கிறார்.)

**லாரன்ஸ்:** அவங்களை ஏன்டா, மிரட்டுறே ? நீ குடிக்கிறதாகத் தகவல் வந்தது. அதான் நானே வந்தேன்.

**அந்தோணி** (அலட்சியமாக): ஹூம் !

**லாரன்ஸ்:** ஏன்டா, குடிக்கிறே ?

**அந்தோணி :** தாகத்துக்குத் தண்ணீர் குடிக்கலே ? பசித்தால் சோறு தின்னலே ? அதே மாதிரிதான். நிதப்படி உள்ள பழக்கத்திலே இதுவும் ஒண்ணு.

**லாரன்ஸ்:** இது ஒரு சட்டவிரோதமான செயல் என்கிறது கூடவா தெரியாது ?

**அந்தோணி :** இதை நான் செய்யறதாலே யாருக்கும் தொந்தரவு கிடையாதுன்னு உனக்குத் தெரியுமா ? போதை மயக்கத்தில் யாருக்காவது நான் தொல்லை கொடுத்திருக்கிறேனான்னு விசாரி !

# ஞான ஒளி



கே. சுந்தரம்

**லாரன்ஸ்:** முதல்லே நீ குடிக்கிறது தப்பு!

**அந்தோணி :** அதைப் பத்தி என்கிட்டே நீ கேட்கிறதே தப்பு. நீ யாரு கேக்க?

**லாரன்ஸ்:** நான் இந்த ஊர் போலீஸ் இன்ஸ்பெக்டர் ! குற்றவாளிங்க விஷயத்தில் நான் கடுமையா இருப்பேன். உன்னை இந்த ஊரிலே தட்டிக் கேட்க ஆளில்லைன்னு இனிமே நினைக்காதே ! தப்பு செய்யாதே... ஜாக்கிரதை !

**அந்தோணி** (அலட்சியமாகச் சிரித்தபடி): இன்று வரைக்கும் என்னைத் தட்டிக் கேட்கவோ அதட்டிக் கேட்கவோ ஆள் கிடையாது. நீயா உஷார் கொடுக்கிறே ? நான் ஒரு மாதிரியானவன். ஜாக்கிரதை ! இந்த அந்தோணி வெறுத்தான்னா அரிவாள்தான் பேசும் !

(அந்தோணி அரிவாளை ஓங்க லாரன்ஸ் தம் துப்பாக்கியை நீட்டி அவனை அதட்டுகிறார்.)

**லாரன்ஸ்:** ஸ்... அரிவாளைக் கீழே போடுடா! ம்... கீழே போடு! இந்த மிரட்டலுக்குப் பயந்தவன் நானில்லே! ஜாக்கிரதை! போலீஸ்காரன் போலீஸ் உடுப்பை மாட்டும் போதே மனசைக் கழற்றி வைச்சுட்டுத்தான் மாட்டிக்கிறான்.

**அந்தோணி:** எனக்கு நீ சரியான ஜோடி தான்!

**லாரன்ஸ்:** அதனாலேதான் சொல்கிறேன்! என்கிட்டே மோதிப் பார்க்காதே! ஏண்டா, கேள்வி கேட்பார் இல்லாமே கெட்டழிஞ்சு போறே?

(அனுதாபத்துடன் லாரன்ஸ் கேட்க அன்புக்கு ஏங்கும் அந்தோணி உணர்ச்சி வசப்படுகிறான்.)

**அந்தோணி:** லாரன்ஸ்! உன் உடுப்புக்கு மட்டுமில்லே! நீ கழற்றி வைச்சதாகச் சொன்னியே, உன் மனசு.... அதுக்கும் மதிப்புக் கொடுத்துச் சொல்கிறேன்..... என்னைக் குடிக்காமல் தடுக்காதே! வேணுமானால் தண்டிச்சுடு. இல்லாட்டி சில பெரிய மனுஷங்களுக்குத் தருகிற மாதிரி எனக்கும் ஒரு 'பர்மிட்' வாங்கிக் கொடுத்துடு.

**லாரன்ஸ்:** 'பர்மிட்'டு வாங்கியாவது குடிக்க வேண்டிய அவசியம் என்னடா?

**அந்தோணி:** நான் மனுஷனா நடமாடணுங்கிறதுக்காக. என் இறந்த காலமும், எதிர்காலமும் ஞாபகத்தில் வராமல் நான் வாழணுமென்கிறதுக்காக....

**லாரன்ஸ்:** இப்போ வருந்தி என்ன லாபம்? அதுக்கு அந்த நாளிலேயே ஒழுங்காப் படிச்சிருக்கணும்.

**அந்தோணி:** படிப்புத்தான் ஏறலியே!

**லாரன்ஸ்:** நானும் உன்கூடத்தான் அனாதையாக வளர்ந்தேன்! எனக்கு மட்டும் எப்படிடா படிப்பு ஏறித்து?

**அந்தோணி** (நாத் தழுதழுக்க): அனாதைச் சிறுவனாக வளர்ந்தாலும் நீ ரொம்ப அதிர்ஷ்டசாலியப்பா.... ஏன்னா, உனக்கு உங்க அம்மா அப்பா யாருன்னே தெரியாதே! ஆனால் நான்? என்னைப் பெற்றவனைப் பற்றி நினைச்சால் என்னாலே மனுஷனா வாழ முடியாது லாரன்ஸ். என்னை உனக்கு எப்போதிலிருந்து தெரியும்?

**லாரன்ஸ்:** எட்டு வயசிலே இருந்து....

**அந்தோணி:** அதுக்கு முந்தி? என் வாழ்க்கை பிஞ்சிலேயே வெம்பினது லாரன்ஸ்!

ஒரு காலத்திலே எங்கப்பன் இந்த ஊரிலே ஒரு ரௌடி. அவனுடைய கட்டான உடல் அழகிலே மனசைப் பறி கொடுத்தா ஓர் அப்பாவிப் பொண்ணு.

அவங்களுக்கு நான் பிறந்த சமயம் எங்கப்பன் ஏதோ ஒரு குற்றத்துக்காக ஜெயில் தண்டனையை அனுபவிச்சுட்டு வெளியே வந்திருந்தான். திருந்தி நல்லவனாநானும் வாழணும், தன் பெண்டாட்டி பிள்ளையையும் காப்பாத்தணும்னு அவன்






நினைச்சான். ஆனால் அவனை இந்த ஊர் ஏற்றுக் கொள்ளலே. ஊர் அவனை ஒதுக்கி வைச்சது மாஜி குற்றவாளி என்பதற்காக. என் நினைவறிஞ்சு.... லாரன்ஸ்... நான் அம்மான்னு அழுதது கம்மி! பசின்னுதான் அழுவேன்! அந்தப் பொல்லாத வறுமை எங்களை அணு அணுவாச் சித்திரவதை செய்தது. அதோடே எதிரொலி.... நான் சிறுவனாயிருந்தபோது நடந்ததே அந்தச் சம்பவம்! அது பயங்கரமானது, லாரன்ஸ்!

ஒரு நாள் நான் பசி வெறியிலே ஒரு தோட்டத்தில் மாம்பழம் திருடப் போனேன். ஏழைக்கு வெந்த சோறு ஆறக்கூடப் பொறுக்காதே! என் பசியும் அப்படிப் பட்டதுதான். திருட்டுத்தனமா பறிச்ச மாம்பழத்தை 'மரத்து மேலேயே தின்ன ஆரம்பிச்சுட்டேன். அப்போ அந்தத் தோட்டத்தோட காவல்காரன் என்னைப் பார்த்து விட்டான். 'இறங்குடா'ன்னு கத்தினான். வாயாலே சொன்னதோடே நிறுத்தாமல் கிழேயிருந்து குரங்கை விரட்டறப் போலே கல்லாலே அடிச்சான். அவன் எறிந்த கல் என்னைவிடப் பலமாயிருந்தது. என் நெற்றியிலே அது தாக்கியதும் நான் ''அம்மா''ன்னு அலறிக்கிட்டே கிழே பொத்துன்னு சுருண்டு விழுந்தேன்.

கண்ணைத் திறந்தப்போ என் கண் எதிரிலே என்னைப் பெற்றவன்.... வறுமையிலே வாழ்வே கசந்துபோன மாஜி குற்றவாளி...... மிருகமா காவலனை செஞ்சுக்கிட்டிருந்தான்;

கையிலே வெட்டரிவாளோடே நின்றான். அவன் கையாலே வெட்டுப்பட்டுப் பலி ஆடு போல் துடிச்சுக்கிட்டிருந்தான் தோட்டக்காரன். அவனைப் பார்த்து என் அப்பன், ''நீ அடிச்சதாலே அவன் சிந்தினது என் ரத்தம்டா! என் ரத்தம்! பதிலுக்கு நீயும் ரத்தம் சிந்தித்தான் ஆகணும்''னு சொன்னான்! வெட்டு வெட்டுனு வெட்டி அவனைக் கூறு போட்டுட்டான்.

என்றோ நடந்த அந்தச் சம்பவம் என் மனசிலே அச்சா பதிஞ்சுடுத்து. நான் கண்டதைச் சர்வ வல்லமை பொருந்திய ஆண்டவன் சாட்சியா கோர்ட்டிலேயும் சொன்னேன். சாட்சி நான். குற்றவாளி என்னைப் பெற்றவன்! நான் கொடுத்த வாக்குமூலமே அவனுடைய கொலைக் குற்றத்தை ஊர்ஜிதம் பண்ணிடுச்சு.

படிப்பறிவில்லாத எங்கம்மா, தன் பதினாறுவது வயசிலேயே வாழ்வு சிதைஞ்சு போன அப்பாவி.... தன் கழுத்திலே தொங்கின கயிற்றுக்காக — அதைக் கட்டினவன் கழுத்திலே கயிறு ஏறக் கூடாதே என்கிற துக்காகத் துடியாத் துடிச்சா!

ஊரிலே படிச்சவங்க உபதேசம் பண்ணினாங்க. 'ஹைகோர்ட்டுக்குப் போ! அப்போதான் உன் புருஷன் திரும்ப உனக்குக் கிடைப்பான். இல்லேன்னா தூக்கிலே தொங்க வேண்டியதுதான்' என்று சொன்னாங்க. ஏழு வயசு எனக்கு. என்னையும் கூட்டிக்கிட்டு அந்த ஹைகோர்ட்டு வாசலுக்கே திருட்டு ரயிலேறி வந்துட்டா. கோர்ட்டு வாசல்லே

கூடி நிற்கிற பிச்சைக் காரங்க போகிற வருகிற பெரிய மனுஷங்ககிட்டே 'ஐயா, தர்மவானே, ஒரு காலணு பிச்சை போடுங்க'ன்னு கெஞ்சின மாதிரி அங்கே நின்னு தனக்கு மாங்கல்யப் பிச்சை கேட்டா. போற வர வக்கீல்களின் கால் களைக் கட்டிக்கிட்டு, ''ஐயா! என் புருஷனைக் காப்பாத்துங்க அய்யா''ன்னு கெஞ்சிப் புலம்பினு. அவ உயிர் மூச்சு அடங்கற வரைக் கும் அந்த ஒரே புலம் பல்தான். அப்படியே பைத்தியம் பிடிச்சுச் செத்தே போயிட்டா!

(லாரன்ஸ் கண்ணீரைத் துடைத்துக் கொள் கிறார்.)

**அந்தோணி:** நீ ஏன் அழறே? நானே அழலையே?

எங்கப்பன் தூக்கிலே தொங்கினன். நான் அனாதையா ரோட்டிலே அலைஞ்சேன். ஆறுமுகமா அனாதையானேன். அடைக்கலம் சாமியார்தான் என்னை அந்தோணியா மாத்தி உன்கூடவே வளர்த்தார்.

நீ படிச்சுட்டுக் கிளம்பிப் போயிட்டே. நான் படிப்பில்லாமே இங்கேயே அவர்கிட் டேயே தங்கிட்டேன். அட, சின்னப்புள்ளை யிலேதான் கஷ்டப்பட்டேனே! பிறகாவது சுகப்பட்டேனு? அதுவும் இல்லையே!

என்னையும் மனுஷனுக்கி நானும் உலகத் தாரைப் போல் வாழணும்னு பதினேழு வயசிலேயே எனக்கு ஒரு பெண்ணைக் கல்யாணமும் செஞ்சு வைச்சாரு.

(விரக்தியுடன் சிரிக்கிறன் அந்தோணி.)

நான் உலகத்திலே ஒரு மனுஷனு வாழ் வது கடவுளுக்கே பொறுக்கலே. பெண் டாட்டி என்கூட ஒரு வருஷம் வாழ்ந்த துக்குச் சாட்சியா ஒரு பெண்ணைப் பெத்துப் போட்டுட்டுச் செத்தும் போயிட்டா.

இப்போ சொல்லு! என் பிறப்பையும், வளர்ப்பையும் வைச்சு எடை போட்டுச் சொல்லு! நான் இப்படி இருக்கிறதே. பெரிய காரியமில்லையா?

**லாரன்ஸ்:** கவலைப்படாதே, அந்தோணி! உன் மகள் மேரியாவது நல்லா படிச்சு உயர்வா வருவா.... உயர்ந்த மனிதன் ஒவ் வொருத்தனும் தாழ்ந்த இடத்திலேயிருந்து தானே தன் சொந்த முயற்சியாலேயும் நேர்மையான உழைப்பாலேயும் உருவா யிருக்கான்!

**அந்தோணி:** அதுதான் லாரன்ஸ் என் ஒரே ஆசை: ''ஆண்டவனே! என்னைப் பெற்ற அப்பனலே குனிஞ்ச என் தலை, நான் பெற்ற மகளாலே நிமிரணும்'' என் கிறதுதான் நான் தினம் ஆண்டவனை வேண் டிக்கிற ஒரே ஒரு பிரார்த்தனை.... அதுக் காக என்னையே அழிச்சுக்கறேன்..... அட,



''வேகமா சுருக்கெழுத்து எழுதத் தெரிஞ்சவனை வேலைக்கு வைத்தால் போதுமா? அவன் வேகத்துக்கு ஏற்ப உங்களுக்குச் சொல்லிண்டு போகத் தெரிய வேணுமா?''

தென்னை மரமா நின்னு ஒம் சந்தன மரமா தேய்ஞ்சுடுவேன்.

**லாரன்ஸ்:** என்ன சொல்லறே?

**அந்தோணி:** எல்லா விதத்திலேயும் தன்னை அடுத்தவங்க உபயோ கத்துக்கே தியாகம் பண் ணுகிற தென்னை மரம், இருக்கிறபோது தனக்கே கூட நிழல் தந்துக்க முடியாது. சந்தன மரம் இருந்து லாபமே இல் லேன்னுலும், தேயும்போது மணக்குமே! நான் இந்த ஊருக்கு உழைச்சா அந்த வாழ்த்தெல்லாம் என் மகளை வாழவைக்குமே!

**லாரன்ஸ்:** நான் உன்னுடைய நலனையே பெரிசா மதிச்சுச் சொல்லறேன். நீ மட்டும் குடிக்கிறதையும் இந்தக் கோபத்தையும் விட்டு விடுகிறதா வாக்குக் கொடு. நான் உன் மகளோடே எதிர்காலத்தை உன் ஆசைப்படி நிறைவேற்றுகிறேன்.

**அந்தோணி** (மகிழ்ச்சியுடன்): சரி, நீ என் வீட்டுக்கு வா!

**லாரன்ஸ்:** நீ இனிமே குடிக்கமாட்டேன்னு வாக்குக் கொடு...... வரேன்.

**அந்தோணி:** சரி, உனக்காக ஒத்துக்க றேன். இனிமே இன்னிக்குக் குடிக்கலே!

**லாரன்ஸ்:** இன்றைக்கு மட்டுமா?

**அந்தோணி:** நாளையைப் பற்றி இன் னைக்கே எப்படிக் கவலைப்பட முடியும்? போகலாமா....? (சற்றுத் தயங்கி விட்டு) அட.... நீ வர்ரேன்னு முன்கூட்டியே தெரி யாமப் போயிடுச்சே!

**லாரன்ஸ்:** ஏன்?

**அந்தோணி:** வழக்கம் போல் என் மகள் உப்புக் கஞ்சியும், எருவுந்தான் எடுத்துக் கலயத்தில் வைச்சிருக்கப் போவுது!

**லாரன்ஸ்:** அதிலே பாதி கொடு. அது தான் எனக்கு வேணும்!

**அந்தோணி:** சபாஷ்! இதான் என் லாரன்ஸ்! வா!

(இருவரும் கிளம்பிச் செல்கின்றனர். இரண்டடி எடுத்து வைத்ததும் அந்தோணி மீண்டும் பேசுகிறன்.)

மேரி இந்த நேரத்திலே உன்னையும் என்னையும் பார்த்தா மலைச்சுப் போயிடுவா!

**லாரன்ஸ்:** ஏன்?

**அந்தோணி:** என் பெண்ணு தூங்கி முழிக் கிறதுக்கு முன்னே வீட்டை விட்டுக் காலை யிலே இருட்டோடே கிளம்பினு. நான் திரும்பி வீட்டுக்கு வருகிறப்போ அது தூங்கற நேரமாத்தான் இருக்கும். இன் னைக்குத்தான் முதல் தடவையா நேரத் தோடே வீடு திரும்பறேன்.

**லாரன்ஸ்:** சரி, வா!

(முரட்டு அந்தோணியும் அவனது பால்ய நண்ப னை இன்ஸ்பெக்டர் லாரன்ஸும் ஒருவரை யொருவர் அணைத்துக்கொண்டே நடக்கின் றனர்.)

(தொடரும்)

அரவிந்த் அளிக்கும்
பருத்தித்துணிகளின்
அற்புத உலகம்

INTERPUB-A.5 TAM

# Arvind


Arvind Mills Ltd.


LALBHAI GROUP

பனிச்சென்றிருப்பவையும், பகட்டானவையும்,
ப்ளெயினானவையும், ப்ரின்ட் செய்தவையும்
பிரமிக்கத்தக்க பலவித பாப்ளின் வகைகள்.
'கோல்ட் ட்ரிங்க்', 'ப்ளூ பேர்ட்', 'ரோஜா', 'ரூபா'—
ஆகியவற்றிலிருந்து தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.
உடைகளுக்கு உகந்தவை, சட்டைகளுக்குச்
சிறந்தவை, கமீஸ்களுக்குப் பிரமாதமானவை.

# அம்புலிக்கு அப்பால்.. 3

கதை: புஷ்பா
படம்: விஜயா

அந்தப் புதிய மனிதன் அதட்டிப் பேசியதும் கோபிக்குக் கோபம் வந்தது.

மிரட்டல் பிரமாதமாக இருக்கிறதே! பச்சைக் கிரகத்துக்கு நான் ஏன் போகக் கூடாது!

அந்தக் கிரகம் முழுவதும் ஒரு பாழ் வெளி! வெறும் பாலை வனம்!

அதற்குத்தானா நீங்கள் போட்டி போட வந்திருக்கிறீர்கள்?

ஆனால் அந்தப் பாலை வனத்தின் பொன் மணலில் அற்புதமான ஒரு லோகம். இதுவரை உலகம் அறிந்திராத அபூர்வமான ஒரு பொருள்!

அது மட்டும் ஒருவர் வசமானால் அப்புறம் இந்த உலகமென்ன? விண்வெளியில் கூட ஆதிக்கம் செலுத்தலாம்! அப்படிச் செய்யவேண்டுமென்பது தான் எங்கள் ஆசை! உலகை மட்டுமல்ல அகிலத்தையே ஆளப் போகிறோம்!

இவனுக்கென்ன பைத்தியமா?

கோபி! நீ செய்கிற உதவிக்குக் கைம்மாறாக... இதோ!

ஓஹோ, மிஸ்டர்! மரியாதையா வெளியே போகிறீங்களா இல்லே போலீஸை வரவழைக்கவா?

கோபி! உன்னை எச்சரிக்கிறேன். உன் செய்கைக்காகப் பின்னால் வருந்தப் படுவாய். நான் வருகிறேன்.

அந்த மர்ம மனிதன் வெளியேறிய போது வாசலருகே மறைந்திருந்த பிரபாகர் அவனை ரகசியத் தூரத்தில் அழைத்தான்.

மிஸ்டர்! ஒரு நிமிஷம்!

கோபி ஒரு முட்டாள்! சந்தர்ப்பம் நம் வீட்டுக் கதவை ஒரே ஒரு முறை தான் தட்டும் என்பதை அறியாத மடையன்!

ஏதேது! அவரை நன்றாக எடை போட்டு வைத்திருக்கிறீர்களே!


நீங்கள் அவனுடன் பேசுவதைக் கவனித்துக் கொண்டுதான் இருந்தேன்... சரி இங்கேயே நின்று பேச வேண்டாம். வாருங்கள், என் வீட்டுக்குப் போவோம்!


வீடு போய்ச் சேர்வதற்குள்ளேயே அந்த ஆசாமி தன் கோரிக்கையைப் பிரயாகிடம் தெரிவித்து விட்டான்.


இவ்வளவுதானே! நான் இருக்கிறேன் உங்களுக்கு உதவி பண்ண! ராக்கெட் பூமியை விட்டுக் கிளம்பியதும் என் கைவரிசையைக் காட்டி விடுகிறேன்!
உங்களை நான் நம்பலாமா?


என்னைத் தவிர வேறு யாரையும் நம்பாதீர்கள்! அது சரி, நீங்கள் யாரென்று சொல்லவே இல்லையே?


'புரோனால் சாங்கின்' என்கிற ரகசிய ஸ்தாபனத்தைச் சேர்ந்தவன் நான்... உலகை மொத்தத்தையும் எங்கள் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வருவதுதான் எங்கள் நோக்கம்! இப்போதைக்கு இது போதுமே!


நீங்கள் எங்களுக்குச் செய்யவிருக்கும் உதவிக்கு அட்டாக இதை வைத்துக் கொள்ளுங்கள்!
இவன் சொல்கிறபடியே செய்வோம்! பிரயாணம் நின்று போனால் கோபியின் இந்த உடைமம்! நமக்கும் பணம் கிடைக்கும்! ஒரே கல்லில் இரண்டு மாங்காய்!
தொடரும்....

# இப்பொழுது!

# 12 நாட்களில் வெண்மை பளிச்சிடும் பற்கள்!

சக்தி வாய்ந்த புதிய செய்முறை. பனிரெண்டே நாட்களில் பற்களுக்கு அதி வெண்மையையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது




[illegible]



புதிய செய்முறை | புதிய சுவை | புதிய பேக்

[illegible]

# தீராத விளையாட்டு

## கு. அழகிரிசாமி

கோவிலில் ஓர் அழகான சிலை இருக்கிறது; பூங்காவில் ஓர் அழகான மரம் இருக்கிறது. யாருக்குமே சொந்தமில்லாத பொதுச் சொத்துக்கள் தான். ஆனால் அந்தச் சிலையையும் மரத்தையும் துஷ்பிரயோகம் செய்வதை யாருமே சகிக்க மாட்டார்கள். சொந்தச் சொத்தைப் பாழாக்குவது போன்ற ஓர் ஆத்திரம் வரும். தடுக்கச் சக்தி யில்லாவிட்டால் துயரமாவது உண்டாகும்.

ரங்கராஜன் ஓர் அழகான விக்கிரகம்; ஓர் அழகான கற்பகத் தரு. அந்த விக்கிரகத்தையும் கற்பகத் தருவையும்



துஷ்பிரயோகம் செய்ய அவனுக்கே உரிமை கிடையாது என்பது போல் விஜயாவின் மனசுக்குத் தோன்றியது. உலகத்தில் ஒருவனாவது நல்லவனாக இருக்க வேண்டும்; ஊர் அழகாவது கெடாமல் இருக்க வேண்டும்; ஒரு குணமாவது பாழாகாமல் இருக்க வேண்டும். இப்படியெல்லாம் விஜயாவுக்கு ஆசையும் தவிப்பும் ஏற்பட்டதற்கு அவளுடைய குடும்பப் பின்னணி மூல காரணமாக அமைந்திருந்தது.

ரங்கராஜனை முதன்முதலில் பார்த்தபோது அவனுடைய முகம் அவளுடைய கவனத்தையெல்லாம் கவர்ந்தது. அந்த அழகும், அந்தச் சாந்தமும் அவளிடம் ஒரு பக்தியையே உண்டுபண்ணி விட்டன. உடனே அவளுக்குத் தன் தமையனே நினைவுக்கு வந்தான். உலகத்தில் ஆணினத்தில் இப்படிப்பட்ட அபூர்வப் பிறவியையும் காண முடிகிறது; தமையனைப் போன்ற ஒரு ஜன்மத்தையும் பார்க்க முடிகிறதே என்று நினைத்தாள். இருவரையும் பக்கம் பக்கமாக நிறுத்திப் பார்க்கும்போது ரங்கராஜன் ஒரு தெய்வப் பிறவியாகவும், தமையன் ஓர் அரக்கனாகவும் காட்சியளித்தார்கள்.

தமையனின் தோற்றம், அலங்காரம், கொடிய பார்வை, குணங்கள் முதலியவற்றை அடியோடு வெறுத்த விஜயா அந்த மாதிரியான குறைகளும், கோபங்களும் இல்லாத ஒரு மனிதாத்மாவைக் கற்பனை செய்து பார்க்கக் கூட முடியாதவளாக மனம் சலித்துப் போயிருந்தாள். கடைசியில் அரசடி விநாயகர் கோவில் தெருவுக்குக் குடி வந்து, ரங்கராஜனைப் பார்த்த பொழுது பாலைவனத்தில் மழை பெய்த மாதிரி இருந்தது. அவள் உள்ளம் குளிர்ந்தது. குளிர்ந்ததோடு அங்கே பூஞ்செடிகளும் முளை விட்டுத் தளிர்த்தன. இரண்டு மாத காலத்துக்குள் ஆங்காங்கே இரண்டொரு செடிகள் ஒன்றிரண்டாகப் பூத்தும் இருந்தன. இப்படித் தன்னில் மாறுதலை ஏற்படுத்திய அவன் யாராக இருக்கட்டும்; தன்னை இனி ஏழு ஜன்மங்களுக்கும் திரும்பிப் பார்க்காமலிருக்கட்டும்; கவலையே இல்லை. அவன் இப்படியே அழகனாக, சாந்த சொரூபியாக இருந்தால் போதும்!

விஜயாவுக்கு ரங்கராஜனிடம் ஏற்பட்ட !கவர்ச்சிக்கும் அக்கறைக்கும் இது தான் எல்லை.!இதைத் தாண்டிச் செல்ல அவளுக்கு அப்போது ஆசையும் இல்லை; துணிவும் இல்லை.



## அத்தியாயம் 4

அம்மாவைப் போல் ரங்கராஜன் அழகு பிம்பமாகப் பிறந்திருப்பதைப் பற்றி ஒரு தெய்வீகமான பொறுமை யுடன் பெருமூச்செறிந்து கொண்டு சுந்தரியும் தங்கமும் கோவிலில் பேசிக் கொண்டார்கள். பெற்ற தாயாரும் உடன் பிறந்தவனும் அழகாக இருப்ப தைப் பற்றி இப்படி எந்த வீட்டிலும் சாதாரணமாகப் பேசிக் கொள்வ தில்லை. தங்கமும் சுந்தரியும் பேசிய தோடு பொறுமைப்படவும் செய் தார்கள். பெருமிதமும் கொண் டார்கள். இவ்வாறு அவர்கள் பேசிக் கொண்டது இது முதல் தடவையல்ல. பேசத் தெரிந்த நாளிலிருந்தே அவர்கள் பேசியிருக்கிறார்கள் என்று கூடச் சொல்லலாம்.

வருஷக் கணக்கில் பழகியும்கூட 'அழகு' என்ற விஷயம் எல்லோ ருடைய கவனத்திலும் சதா இருந்து கொண்டிருந்தது. அவர்கள் மறந் தாலும், அக்கம் பக்கத்தாரும் உறவின ரும் ஜானகியம்மாளையும் ரங்கராஜனை யும் பார்த்த போதெல்லாம் தங்களுக் குள் பேசிப் பேசி வியந்து கொண் டிருந்தது அழகை ஞாபகப்படுத்திக் கொண்டே யிருந்தது.

வயதாகி, உத்தியோக ஓய்வு பெற்ற பிறகும்கூட, மனைவிக்குப் பிரியத்தோடு செய்யும் உபசரணைகளையெல்லாம் தவறா மல் செய்து கொண்டு வந்தார் நடராஜ முதலியார். புதுவிதமான புடவைகளையும் புதுவிதமான நகை களையும் தேடித் தேடி வாங்கிக்கொண்டு வருவார். கோடையானாலும், மழைக் காலமானாலும் ஒரு நாள்கூடத் தவறா மல் சாயங்காலம் வீடு திரும்பும் போது பூவும் கையுமாக வருவார்.



இப்படிக் கண்ணும் கருத்துமாகக் கவனித்து ஜானகியம்மாளின் அழகைப் பேணி வந்தபோது அவர் ஆண்டவனை நோக்கி ஒரு வரம் கேட்டார். ஜானகியம்மாள் கர்ப்பமாக இருந்த சமயம் அது. பிறக்கிற குழந்தை ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் அம்மாளைப் போல் பிறக்க வேண்டும் என்ற வரத்தைத் தினம் தினம் கேட்டார். அவருடைய அதிர்ஷ்டம், கேட்ட வரத்தை ஆண்டவன் கொடுத்து விட்டான். அவர் ஒரு கல்யாணத்துக்காக ஸ்ரீரங்கத்துக்குப் போய், ரங்கநாதனையும் சேவித்துவிட்டுத் திரும்பிய பத்து நாட்களுக்குள் மகன் பிறந்தான். திருவரங்கன் திருவருள் செய்துவிட்டான் என்பதைப் பையன் முகத்தைப் பார்த்ததுமே தெரிந்தது. ரங்கராஜன் என்றே அவனுக்குப் பெயர் வைத்து விட்டார்.

குடும்பத்தில் இப்படி அழகைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பதற்கு வேண்டிய வசதியும் இருந்தது. வேறு வாழ்க்கைப் பிரச்னை எதுவுமே கிடையாது. உத்தியோக வருமானம் ஒருபுறமிருக்க, கிராமத்தில் பிதுரார்ஜிதச் சொத்தும் நிறைய இருந்தது. அதனால் தாம் சம்பாதிப்பதைப் போல் இருமடங்கு செலவழித்துக் கொண்டு இருக்க முடிந்தது. எனவே, அவருக்குச் சிந்தனை, கவனம், கனவு, நனவு எல்லாம் அழகைப் பற்றியனவாகவே அமைந்து விட்டன.

ரங்கராஜன் பிறப்பிலேயே அம்மாவின் அழகைத் தேடிக் கொண்டு விட்டான். வயதாக வயதாக அவளுடைய குணங்களையும் தேடிக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டான். வருஷத்துக்கு வருஷம் மனத்தையும் பண்படுத்திக் கொண்டு வந்தான்.

அம்மாவுக்கு இவ்வளவு உயர்ந்த உள்ளம் எங்கிருந்து வந்தது என்று அவன் எத்தனையோ தடவை யோசித்துப் பார்த்திருக்கிறான். அவள் முகத்தில் கோபக் குறியை அவன் பார்த்ததே கிடையாது. கடுசொல்லைப் பேசியே அறிய மாட்டாள். எதைப் பற்றியும் யாரைப் பற்றியும் அவள் இழிவாக ஒரு வார்த்தை சொன்னதில்லை. உலகத்தில் கெட்டது என்று ஒன்று இருக்க முடியும் என்பதைக்கூட நம்பாதவள் மாதிரி இருந்தாள். அவள் சுபாவம் இப்படி அமைந்ததற்குக் காரணம் இதுவாகத்தான் இருக்க முடியும் என்று அவன் முடிவு கட்டினான்: அவள் கன்னிப் பெண்ணாகி அப்புறம் திருமணம் ஆகும்வரையில் வீட்டை விட்டு வெளியேறாமல் உள்ளேயே இருந்தவள். வீடுதான் அவள் உலகம். அங்கே போகக்கூடிய பெண்மணிகள் எல்லாம், அந்த அழகின் சாந்நித்தியத்திலே தலை வணங்கி நிற்கத்தான் முடியுமே தவிர, ஊர் வம்பு பேசவோ, ரசக் குறைவான செய்திகளைச் சொல்லவோ அவர்களுக்கு வாய் வராது. அம்மாவின் முன்னிலையில் பரவசமான, இனிமை ததும்பக் கூடிய, இதமும் கனிவும் நிறைந்த மொழிகளைத்தான் அவர்களால் பேச முடியும். இந்த நிலையில் அம்மாவுக்குக் கொடுஞ் சொல் எப்படித் தெரியும்? கொடிய சுபாவம்தான் எப்படி ஏற்பட முடியும் ?

''எனக்கு அன்பு கொள்ளத்தான் தெரியும்; மன்னிக்கத் தெரியாது'' என்று ஒரு பெண்மணி சொன்னாள். அவள் காந்திஜியுடன் பழகியவள். ஆலிவ் ஷ்ரீனர் என்ற ஐரோப்பிய மாது. அவளுடைய இந்தக் கவிதா வசனத்தை ரங்கராஜன் எப்போதோ வாசித்திருக்கிறான். அதை அடிக்கடி அம்மாவின் சுபாவத்தோடு பொருத்திப் பார்த்துக் கொள்வான். அம்மாவும் யாரையும் மன்னித்தவளல்ல. யாரிடத்திலும் அன்பு காட்டத்தான் இவளுக்கும் தெரியும். விரோதியிடத்திலும் அன்பு காட்டும் குணத்தைவிடப் பெரியது, விகாரங்களும் அருவருப்புக்களும் தன் கண்ணுக்கே படாமல் செய்து கொள்வது. இந்த நிலையை அந்த ஐரோப்பியப் பெண்மணி கற்பனை செய்திருப்பாளோ என்னவோ ?

அந்தத் தெருவில் திரியும் அந்தப் பைத்தியக்காரன், அம்மாவின் குணங்களையெல்லாம் எடுத்துக் காட்டும் உறை கல்லைப் போல் இருந்தான். கோவிலுக்குத் தங்கைகளோடு போய் விட்டு வந்த மறுநாள் அந்தப் பைத்தியக்காரனின் வருகையைத்தான் ரங்கராஜன் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டு மாடியறையில் அமர்ந்திருந்தான். பைத்தியக்காரனின் பசியை அன்றும் தீர்க்க வேண்டும் என்ற அக்கறையோடு, அவனைத் தங்கத்து'க்கும் சுந்தரிக்கும் காட்ட வேண்டும் என்ற ஆசையும் இருந்ததால்தான் காலையிலிருந்தே அவன் வருகையை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்தவண்ணமாக இருந்தான்.

அந்த விருந்தாளி வரப் பதினொரு மணிக்கு மேல் ஆகிவிட்டது. ஊமை பேசுவது போல் 'அம்மா' என்று அவன் முதல் குரல் கொடுத்ததுமே ரங்கராஜன் கீழே இறங்கி வந்துவிட்



''எதிர்பாராத தன லாபம் என்று என் ராசி பலன்சொல்லிற்று என்பதால் லாட்டரிச் சீட்டு வாங்கினுயே, இதோ கைமேல் பலன்! கண்டக்டர் ஒரு பைசா அதிகம் கொடுத்து விட்டான்! லாட்டரியிலே லட்ச ரூபாய்க்குக் காத்திருக்காதே!''

டான். உள்ளே போய், ''அம்மா! உன் விருந்தாளி வந்து விட்டான். இன்னிக்கு என்னமோ லேட். வேலை ஜாஸ்தி போலிருக்கு — சாப்பிடக்கூட நேரமில்லாமே!'' என்று வேடிக்கையாகச் சொன்னுன்.

அவன் யாரைச் சொல்கிருன் என்பது ஜானகியம்மாளுக்குத் தெரிந்து விட்டது. ''விருந்தாளி'' என்ற வார்த்தையை இதற்கு முன்பும் இரண்டொரு முறை அவன் உபயோகித்திருக்கிருன். ஆனுல் சுந்தரிக்கும் தங்கத்துக்கும் விஷயம் புரியவில்லை.

''எந்த விருந்தாளி வருந்திருக்கிருர் ராஜா? அவன் இவன்னு சொல்றியே, உன் ஃப்ரண்டா?'' என்று கேட்டாள் சுந்தரி.

ரங்கராஜன் சிரித்தான். ''சிநேகிதன் தான்! ஆனுல் இந்தச் சிநேகிதன் வீட்டுக்குள்ளே வர மாட்டான். வாசலில்தான் நிற்பான். இல்லே, அங்கேயே உட்கார்ந்து விடுவான். உள்ளே அவனை யாரும் அழைச்சதில்லை; அவனும் வந்ததில்லை!''

அவன் இவ்வாறு சொன்னது தங்கத்துக்குப் புரியவில்லை. ஏதோ தமாஷ் பண்ணுகிருன், போய்ப் பார்க்கலாமே என்று அவள் வாசலுக்கு ஓடி வந்தாள். அங்கே அந்தப் பைத்தியக்காரனைத் தவிர வேறு யாரும் இல்லை. அவனை அவள் கணக்கில் வைத்துக் கொள்ளவே இல்லை. வேறு யாரேனும் வந்து மாடிக்குப் போயிருப்பார்களோ என்றும் நினைக்கத் தோன்றியது. வாசலுக்கு வந்ததுபோல் மாடிக்கும் போய்ப் பார்க்கத் தைரியமில்லை. அதற்குள் ரங்கராஜனுமே அங்கே வந்து விட்டான்.

''விருந்தாளியைப் பார்த்தியா, தங்கம்?'' என்று கேட்டான் அவன்.

''நீ என்ன சொல்லறே, ராஜா? விருந்தாளி ஒருத்தரையும் காணுமே! உம்.....?''

''கண் முன்னுலே உட்கார்ந்துண்டிருக்கான். எங்கேன்னு கேட்கிறியே?''

''யார்? இவனையா சொல்றே?'' என்று பைத்தியக்காரனைக் காட்டிக் கேட்டாள். ''இவனையா?'' என்று அழுத்திக் கேட்ட போது அவளுடைய வியப்பும், ஏளனமும், இகழ்ச்சியும் ஒருசேர வெளிப்பட்டன.

''இவனையேதான். இவனுக்கென்ன? ஏன் ஒருமாதிரி முகத்தைக் கோணறே?''

''அழுகாயிருக்கு.....!''

அவனுக்கு அங்கே நிற்கவே பிடிக்கவில்லை. அவனுடைய தமாஷை ரசிக்கவும் முடியவில்லை.

இதற்குள் சுந்தரி பின்தொடர ஜானகியம்மாள் ஒரு வாழையிலைத் துண்டும், ஒரு பாத்திரமும் கையில் எடுத்துக் கொண்டு வெளியே வந்து விட்டாள். வந்ததுமே, ''ஏண்டாப்பா இவ்வளவு நேரம், இன்னிக்கு?'' என்று கேட்டாள்.

அவ்வளவு நேரமும் ரங்கராஜனும் தங்கமும் பேசிக் கொண்டிருந்ததைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் முழங்காலைக் கட்டிக் கொண்டு குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தவன் தூக்கத்திலிருந்து விழித்தவன் போல், தலையைச் சட்டென்று தூக்கித் திரும்பிப் பார்த்தான்.

ஊமையின் உச்சரிப்புடனேயே, ''அம்மா! அம்மா!'' என்று இரு முறை சொன்னுன். திரும்பி உட்கார்ந்தான். ஜானகியம்மாள் இலையை அவன் முன்னுல் வைத்து, ''பிடிச்சிக்கோ, காத்து அடிச்சிக்கிட்டுப் போயிருமே!'' என்றுள். அவன் இலையை அழுத்திப் பிடித்துக்கொண்டு அம்மாளின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் குனிந்து நிமிரும்போது, அவனுடைய கண்கள் அவளுடைய முகத்தை நோக்கியே தொடர்ந்து கொண்டிருந்தன.

இலையில் ஐந்தாறு இட்டிலிகளை வைத்து விட்டு, சட்டினியையும் அள்ளிப் போட்டாள்.

''எல்லாத்தையும் சாப்பிட்டுரு.... தூரப் போட்டுறக் கூடாது. என்ன?''

அவன் குனிந்து சாப்பிட்டான்.



வந்து விட்டது!
ஸிங்கர்*
ப்ரெஷர் குக்கர்

—விசேஷ ஸேஃப்டி லாக்கிங் அமைப்புடைய ஒரே குக்கர்!
வைட்டமின்களையும், உணவின் மணத்தையும் வெளியேறவிடாமல் அது தடுப்பதால், அதிக போஷக்குள்ள சுவையான உணவு உங்களுக்கு கிடைக்கிறது.



● உங்கள் எரிபொருள் செலவை 67 சதவீதம் குறைக்கிறது சில மாதங்களுக்குள்ளேயே அதன் விலையை எடுத்து விடலாம்!
● 5 வருட உத்தரவாதம் உள்ளது.
இந்தியா பூராவிலுமுள்ள ஸிங்கர் கடைகளிலும், அங்கீகாரம் பெற்ற விற்பனையாளர்களிடமும், டிபார்ட்மெண்ட் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

**ஸிங்கர் - அளிப்பது சிறந்த பொருள்களே!**

ஸிங்கர் ஸுயிங்
மெஷின் கம்பெனி



ஸிங்கர் பில்டிங், 207, டி.என். ரோடு, பம்பாய்-1.
* ஸிங்கர் கம்பெனியின் ரிஜிஸ்டர்ட் டிரேடு மார்க். ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்: ஸிங்கர் ஸுயிங் மெஷின் கம்பெனி.

SM 155 TM

அவன் இரண்டு இட்டிலிகளை எடுத்துச் சாப்பிடும் வரை அந்த அம்மாள் அங்கேயே நின்றாள். பிறகு உள்ளே போனாள். அவள் போவதைத் திரும்பிப் பார்த்த பைத்தியக்காரன் சாப்பிடுவதை நிறுத்தி இட்டிலியோடு இலையைச் சுருட்டினான்.

''ஏம்ப்பா, இருந்து சாப்பிடேன்'' என்றான் ரங்கராஜன்.

அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை. இன்னும் ஒரு நிமிஷம் தாமதித்தால், அத்தனை இட்டிலிகளையும் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும் என்று ரங்கராஜன் எங்கே கட்டாயப்படுத்துவானோ என்று பயந்தவன் போல் வேகமாக இலையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு திரும்பிப் பார்க்காமல் நடையைக் கட்டி விட்டான்.

அவன் நடந்து போவதைப் பார்த்துக் கொண்டே நின்றார்கள் ரங்கராஜனும் தங்கமும். அப்புறம் அவன் இந்தப் பக்கம் திரும்பி, ''தங்கம்! நம்மை லட்சியம் பண்ணாமல் போகிறான் பார்!'' என்று சொன்னான்.

''இவனோடே உனக்கு என்ன விளையாட்டு? இவனை வைச்சிக்கிட்டு விருந்தாளி அது இதுன்னு ஏன் தமாஷ் பண்ணறே?''

''நான் ஒன்றும் தமாஷ் பண்ணலே. அவன் விருந்தாளியேதான். விட்டுக்குள்ளே வராதது அவன் தப்பு. மற்றப்படி ஒரு விருந்தாளிக்கு நடக்க வேண்டிய மரியாதையெல்லாம் இங்கே நடக்குது. அம்மா ஒரு நாள் கூட அவனுக்கு எச்சில் சோறோ, பழைய சாதமோ போட்டதில்லே. இவ்வளவுதான்னு ஒரு அளவு வைச்சுக் கிட்டும் போட்டதில்லே. சுடச்சுடக் கொண்டு வந்து ஒரு இலை போட்டு உட்கார வச்சிதான் பரிமாறியிருக்கிறா.... ஒவ்வொரு சமயம் அம்மா காரியமாயிருந்தால் நான் சாதமோ பலகாரமோ கொண்டு வந்து போடுவேன். ஆனால் அவன் தொடவே மாட்டான். அப்புறம் அம்மா வந்து சொன்னால் சாப்பிடுவான். இப்படிப்பட்ட சித்தசுவாதீனமில்லாத ஏழைகளுங்கூட நம் பிக்ஷையோடு தேடி வருகிற மாதிரி வாழ்கிறாங்களே, அவங்கதான் தெய்வப் பிறவி. என்னிடத்திலே ஏதோ குறையிருக்கு. அதனாலேதான் என்னுடைய உபசாரத்தை இவன் உபசாரமா ஏத்துக்க மாட்டேங்கிறான். தங்கம்! இப்போ சொல்லு, அம்மாவும் நானும் ஒண்ணாயிட முடியுமா? ஒண்ணுபோல இருக்கிறோம்னு நீயும் சுந்தரியும் பேசினீங்களே!''

அப்புறம் அவன் பேசவில்லை. அவளும் ஒன்றும் சொல்லத் தெரியாமல் நின்றாள்.

''வா, போகலாம்'' என்று அவளை அவன் உள்ளே அழைத்துக் கொண்டு வந்தான்.

## அத்தியாயம் 5

புதன்கிழமை வருவதாகச் சொல்லி விட்டுச் சாத்தூருக்குத் திரும்பிய அருணாசல முதலியார், புதன்கிழமையே வந்து விட்டார். அவர் சொன்ன சொல் தவறாதவர் என்பதற்கு இந்த ஒரு சிறு விஷயத்தைக்கூடச் சான்றாகக் கொள்ளலாம். எதையும் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று பேசக்கூடியவர். கிராமத்து நிலச்சுவான்தாராக இருந்த வரையில் இப்படிப் பேசியது சரி, வியாபாரியான பிறகாவது பேச்சில் நெளிவு சுளிவு இருக்க வேண்டும் என்று அவர் கருதியது கிடையாது. சாத்தூருக்கு வந்து வியாபாரத் துறையில் இறங்கி இருபது வருஷங்களாகியும்கூட, பழைய கிராமப் பண்பை அவர் விடவே இல்லை. ஊருக்குள் அவருக்கு 'ஒரு சொல் முதலியார்' என்றே பெயர். அவரிடத்தில் பயப்படத்தக்க ஓர் அம்சம் — அந்த ஒரே அம்சம்தான் இருந்தது. அதாவது, ரகசியத்தை அவரிடம் தப்பித் தவறிச் சொல்லி விடக் கூடாது. அடுத்த நிமிஷமே அதை வெளியே சொல்லி விடுவார். அதனால் எவன் எவன் எப்படிப் பாதிக்கப்பட்டாலும் அவருக்குக் கவலையில்லை. ''யோவ்! மூடி மறைக்கிற வழக்கம் நம்மகிட்ட கிடையாது. எதையும் விட்டுச் சொல்லுவேன்; உடைச்சுப் பேசுவேன்'' என்பார். ''நீங்க உடைக்கிற உடையிலே, நாலஞ்சு தலை நொறுங்கிப் போயிடும் போலிருக்கே!'' என்று சொன்னால், ''போகட்டும். போகட்டுமேன்னேன். அப்படித் தலைக்கு ஆபத்து வராப்பலே ஒரு காரியத்தை ஏன் செய்யணும்னு கேட்டேன்'' என்று உற்சாகமாகப் பேசுவார்.

நடராஜ முதலியாருக்கு அருணாசல முதலியாரின் சேவை ஒரு நிரந்தரத் தேவையாக இருந்தது. தம் சொந்த விஷயங்களிலும் அவரைத் தலையிடச் செய்தால்தான் சொக்கட்டான் காய்கள் நகரும் என்று பெரிய

முதலியாருக்குத் தெரியும். கிராமத்தில் இருந்த தம் பங்கு நிலங்களை மேற்பார்ப்பது, சாகுபடி செய்வது, குத்தகைக்கு விடுவது, வசூல் செய்வது போன்ற எல்லாக் காரியங்களையும் தம்பியின் பொறுப்பிலேயே அவர் விட்டிருந்தார். அது மட்டுமல்ல, சுந்தரிக்கு மாப்பிள்ளை பார்த்தது, பேசியது, கல்யாணத்தை முடித்தது — இந்தக் காரியங்களைச் செய்தவரும் அருணாசல முதலியார்தான். அப்புறம் ரங்கராஜனுக்கு ஒவ்வோர் இடத்திலிருந்தும் கிராக்கி வந்த போது, அங்கே சம்பந்தம் பண்ணலாமா கூடாதா என்பதைத் தீர விசாரித்துப் பைசல் பண்ணியவரும் அவர்தான். தமையனரின் குடும்பப் பொறுப்புக் காரியத்தையும் நிறைவேற்றிக்கொண்டு வந்த 'ஒரு சொல் முதலியார்' அன்று ஒரு புது யோசனையோடு மதுரைக்கு வந்தார்.

வியாபாரக் காரியங்களையெல்லாம் கவனித்து முடித்து விட்டுத் தமையனின் வீட்டுக்கு வந்தார். இரவு அங்கேயே தங்குவது என்ற உத்தேசத்துடனும் வந்தார்.

சாப்பிட்ட பிறகு அவரும் பெரிய முதலியாரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். ரங்கராஜனையும் அழைத்துப் பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக் கொண்டார்.

''அண்ணே, ஒரு யோசனை'' என்று ஆரம்பித்தார் முதலியார்.

''உங்களுக்கு ஞாபகம் இருக்கோ, இல்லேயோ ? முந்தி ஒரு சமயம் சொன்னீங்க, 'இனிமே மதுரைதான் நமக்கு ஊர். எல்லாத்தையும் மதுரைக்கு ஒதுக்கிக் கொண்டாந்துற வேண்டியதுதான்'னு பேச்சோடு பேச்சாச் சொன்னீங்க. நான் அதை மனசிலே ஒரு மூலையிலே போட்டு வச்சிருந்தேன். இப்பொ ஒரு நல்ல சான்ஸ் வர்ருப்லே இருக்கு. வர்ருப்லே என்ன; வந்தாச்சின்னே வச்சிக்க வேண்டியதுதான். நம்ப ஊரிலே பெருமாள் பிள்ளை மகன் சுப்பையா இருந்தானில்லே...''

''சுப்பையாவா?'' என்று கேட்டார் நடராஜ முதலியார்.

''ஆமா, அந்தச் சுருட்டைத் தலைப் பயல் ? கத்திரிக்காய்க்குக் காலும் தலையும் மொளேச்சாப்பலே ஒரு குள்ளப் பயல் விசுக்கு விசுக்குன்னு நடந்துக்கிட்டிருந்தானே.... உங்களுக்கு ஞாபகம் இருக்காது. அவன் சின்னப் பயலா இருக்கிறப்போ பார்த்திருப்பீங்க. அவனும் இருபது இருபத்திரண்டு வயசிலே பெனங்குக்குப் போறேன்னு போயிட்டான். இப்போ ஊருக்குத் திரும்பி வந்திருக்கிறன் — பொஞ்சாதி பிள்ளேயோட. அவ போட்டிருக்கிற நகையே நாப்பதாயிரத்துக்கு இருக்கும் போலே இருக்கு !....''

''நாப்பதாயிரமா ?'' என்று புருவங்களை மேலே தூக்கினர் பெரிய முதலியார்.

'' ஆமான்னு சொல்றேனே. இது போக ரொக்கம் வேறே ஒரு லட்சத்துக்கு இருக்குமாம்....''

'' கதை மாதிரி இருக்கு !''

''கதைதான் ! ஆனா, நான் நல்லா விசாரிச்சுக்கிட்டு வந்து சொல்றேன். அவன் காடு கரையை வாங்கிப் போட்டுடணும்னு அலைஞ்சிக்கிட்டிருக்கிறன். ஒரு நாள் சாத்தூருக்கே வந்து என்னைக் கேட்டான். 'ஊரிலே நிலத்தைப் போட்டுட்டு டவுனுக்கு வந்துட்டீங்களே, அதைக் கவனிக்கிறதுக்கு உங்களாலே முடியுமா ? நீங்களாவது முக்கால்வாசியை வித்துக் காசாக்கிட்டீங்க, உங்க அண்ணாச்சி நிலமெல்லாம் அப்படியேதானே கிடக்கு. என்ன செய்யலாம்னு யோசனை பண்ணியிருக்கீங்க?'ன்னு கேட்டான். காட்டைக் கட்டி மலையைக் கட்டிப் பேசிப் பிட்டுக் கடைசியிலே 'எனக்குக் குடுத்துடுங்களேன். நீங்க ஞாயமாச் சொல்ற வெலையைத் தர்றேன்'னு சொன்னான். 'இருடா, அண்ணாச்சியைக் கேட்டுச் சொல்றேன்'னு சொல்லி அவனை அனுப்பிச்சேன். பயல் ஒண்ணுக்கு ஒண்ணரையாக்கூட வெலை குடுப்பானும். கழுதை உடம்பிலே வெயில் படாமே பெனங்கு சிங்கப்பூரிலே சம்பாரிச்ச பணம். தாராளமாச் செலவழிக்கப் பழகின கை. பணத்தோட அருமை தெரியுமா பயலுக்கு? கொஞ்ச நாட்கள் இங்கே இருந்தால் தெரியும். அது எப்படியும் போகுது. நீங்க என்ன சொல்றீங்க?''

நடராஜ முதலியார் கொஞ்சம் யோசித்தார். தலையைக் குனிந்து கொண்டே, ''எப்பவோ சொன்னேன்— ஒரு பேச்சுக்கு. நீ ரொம்பக் கிட்டக் கொண்டாந்துட்டே! உம் ?... சரி, யோசிப்போம். எல்லாரையும் கேளு'' என்று சொல்லி விட்டுச் சமிக்ஞையோடு ரங்கராஜனையும் ஒரு தடவை திரும்பிப் பார்த்தார்.

'எல்லாரையும்' என்றால் ரங்கராஜனைத்தான் குறிக்கும் என்று அருணாசல முதலியாருக்கும் நீண்ட நாள் அனுபவத்தில் தெரியும். (தொடரும்)

1968-ன் தலைசிறந்த செய்திகளில் எவ்வளவு உங்கள் ஞாபகத்தில் நிற்கின்றன? இதோ, 1968ல் பரபரப்பூட்டிய முப்பது செய்திகள் இருக்கின்றன. இவற்றில் கோடிட்ட இடங்களில் விட்டுப் போன வார்த்தைகளை வரிசைக்கிரமமாகப் பக்கத்தில் உள்ள கட்டத்தில் காலி இடங்களில் நிரப்புங்கள் பார்க்கலாம்! அதோடு மட்டுமல்ல; கட்டங்களைச் சரியாக நிரப்பினால், நடுக் கட்டத்தில் மேலிருந்து கீழாக 1968ல் உலகத்தையே அதிசயிக்க வைத்த பெரும் செய்தி ஒன்று கிடைக்கும்! எங்கே முயற்சி செய்யுங்கள், பார்க்கலாம். உங்களுக்கு உதவியாகத் தேதிகள்கூடக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

(விடைக்கு 73ம் பக்கம் புரட்டவும்)

சென்னையின் சுற்றுப்புறங்களில் கொள்ளையடித்த ஒரு பெண்ணைத் தலைவியாகக்கொண்ட ------------ கும்பல் வழக்கு விசாரணைக்கு வந்தது. (விடை: முகமூடி)

2. அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் அபேட்சகரான ராபர்ட்--------------கடப்பட்டார். (ஜூன் 5)

3. மத்திய அரசாங்க ஊழியர்கள் ஒரு நாள் அடையாள------------- செய்தனர். (செப் 19)

4. தமிழக முதலமைச்சர் திரு--------- அவர்களுக்கு நியூயார்க்கில் அறுவைச் சிகிச்சை அளிக்கப்பட்டது. (செப். 16)

5. -------------- நாட்டு வேவு கப்பலான ப்யூப்லோ, வடகொரியர்களால் கைப்பற்றப்பட்டது. (ஜன.23)

6. ------------ வில் ராவ் பிரேந்தர் சிங் மந்திரி சபை கவிழ்ந்தது.

7. திருமதி ஜாக்குலின் கென்னடி கிரேக்க செல்வந்தரான திரு அரிஸ்டாட்டில் ------------ ஓனஸிஸை மணந்தார். (அக். 20)

8. சென்னை -------- தேர்தலில் தி. மு. க-கூட்டணி வெற்றி பெற்றது. (அக். 28)

9. நீக்ரோக்களின் தலைவரான திரு மார்ட்டின் -------------- சுட்டுக் கொல்லப்பட்டார்.

10. முதல் வானவெளி வீரரான திரு ---------- விமான விபத்தில் உயிர் துறந்தார். (மார்ச் 28)

11. கேரளத்தில் நக்ஸல்பாரி கம்யூனிஸ்டுகள்--------- போலீஸ் நிலயத்தைத் தாக்கினர். (நவம். 24)

12. அகில இந்திய------------- கட்சித் தலைவரான திரு தீனதயாள் உபாத்யாயா மரணமடைந்த நிலையில் காணப்பட்டார். (பிப். 11)

13. உலகெங்கும் ---------------- பிறந்த நூற்றாண்டு விழா தொடக்கம். (அக். 2)

14. ஒலிம்பிக் ஹாக்கி பந்தயத்தில் இந்தியாவை ------------------ தோற்கடித்தது. (அக். 24)

15. ரஷ்யர்களால் ஏவப்பட்ட செயற்கைக் கிரகமான ஜோந்த் 5 ---------------- சுற்றிவிட்டு இந்துமகா சமுத்திரத்தில் மீட்கப்பட்டது. (செப். 22)

16. பிரபல கர்நாடக இசை மேதை ஸ்ரீ ------------ காலமானார். (ஜூன் 8)

17. 'வட வியட்நாம் மீது----------- நிறுத்தப்படும்.' ஜான்ஸன் அறிவிப்பு. (ஏப்ரல் 1)

18. கடற்கரையில் நீர்விபத்தில் காணமல் போன நியூசிலாந்து பிரதமர் திரு ஹோல்டுக்குப் பதிலாக திரு -------------- பதவி ஏற்றார். (ஜனவரி 9)

19. இந்தியாவிலேயே கட்டப்பட்ட முதல் கடற்படைக் கப்பலான ஐ. என். எஸ்.---------- பம்பாயில் பிரதம மந்திரியால் வெள்ளோட்டம் விடப்பட்டது. (அக். 23)

20. இரண்டாவது ----------- மாநாடு சென்னையில் தொடங்கியது. (ஜனவரி 3)

21. ஐம்பது நாட்கள் நடைபெற்ற, அகில இந்திய தயாரிப்பாளர் சங்கத்தின் ஆதரவில் நடந்த உலகச் ----------- சென்னையில் முடிவடைந்தது. (மார்ச் 11)

22. மேற்கு வங்காளத்தில் டார்ஜிலிங், ஸிலிகுரி பகுதிகளில் பெருத்த மழை,---------- காரணமாகப் பெரும் சேதம். (அக். 5)

23. இந்தியா-பாகிஸ்தானுக்கிடையே இருந்த---------- தகராறில் பாகிஸ்தானுக்குச் சாதகமாக தீர்ப்பு. (பிப்ரவரி 19)

24. ------------- தென் மத்திய ரயில்வேக்களில் வேலை நேரத் தகராறில், பயர்மென்கள் ஸ்டிரைக். (ஜூலை 6)

25. தென்னாப்பிரிக்காவில் டாக்டர் ------- பெர்னார்டு மேற்கொண்ட மாற்று இருதய அமைப்பு ஆபரேஷன் பூரண வெற்றி. (ஜனவரி 2)

26. செக்கோஸ்லாவியாவில் பழைய நிலைமை ஏற்பட வேண்டி செக் ஜனாதிபதி திரு ------------தலைமையில் செக் தலைவர்கள் மாஸ்கோ சென்றனர். (ஆகஸ்ட் 23)

27. உயிரியல் ஆராய்ச்சி காரணமாக இந்தியரான டாக்டர் ------------------வுக்கு நோபல் பரிசு அறிவிக்கப்பட்டது, (அக்.16)

28. அமெரிக்க தேசிய சாம்பியனாக நீக்ரோவான திரு ------------ டென்னிஸ் ஆட்டத்தில் சிறப்பு பெற்றார். (டிசம்பர் 8)

29. பட்ஜெட்டை நிறைவேற்றும்படி பஞ்சாப் சட்டசபையைக் கூடும்படி -----------உத்தரவிட்டது சரியே என்று நீதிமன்றத்தில் தீர்ப்பு. (ஜூலை30)

30. பாரிஸ் நகர சர்வகலாசாலையான --------- வில் மாணவர்களின் பெரும் போராட்டம். (மே 17)

தயாரிப்பு: கே. பாலசுப்ரமணியன்


இன்ப
ஊற்றினில்
நனைந்த
துண்டோ ?
ஃபண்டா ஆரஞ்சு
சுவை இனிதே...
பருகிடவே
எடுக்காதோ தாகம்!
ஃபண்டா, கோகா-கோலா
கம்பெனியின் தயாரிப்பு
CMCF-2-152 TAM



## ஞாயிறன்று கிரி செய்யும் பணி

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையன்றும் காலை சுமார் இரண்டு மணி நேரம் இந்தியக் குடியரசின் துணைத் தலைவர் திரு வி. வி. கிரி தில்லியில் ஒவ்வோர் இடத்துக்கும் சென்று சுகாதார ஏற்பாடுகள் எப்படி இருக்கிறதென்று மேற்பார்வையிட்டு வருகிறார். துணைத் தலைவரே செல்வதால், இவருடன் தில்லி மேயர், உதவி மேயர் மற்ற அதிகாரிகளும் வருகிறார்கள். இவர் பார்வையிட்ட இடங்கள் எல்லாம் சுத்தமாகிக் கொண்டு வருகின்றன.

இப்பணியைத் திரு வி. வி. கிரி தில்லிக்குச் சென்றதும் புதிதாக மேற்கொள்ளவில்லை. மைசூர் ராஜ்யத்தின் கவர்னராக இருந்தபோது ஒவ்வொரு ஞாயிறன்றும் ஒவ்வோர் இடத்துக்கும் சென்று நகரைச் சுத்தமாக வைக்கும் பணியில் ஈடுபட்டார். இரண்டே ஆண்டுகளில் நகரம் மிக சுத்தமான நகரமாக விளங்கியது.

ஒவ்வொருவரும் என் மாதிரி கஷ்டப்பட வேண்டாம். அவரவர்கள் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்வதுடன் தன் வீட்டுக்கு முன்புள்ள தெருப் பகுதியைச் சுத்தமாக வைத்துக் கொண்டால் போதுமே என்கிறார்.

சமீபத்தில் சென்னையில் நடந்த காந்தியடிகள் நூற்றாண்டு விழா மாநிலக் குழுவின் கூட்டத்தில் இத்தகவலைத் திரு கிரி வெளியிட்டார்.

கேட்டு எழுதியவர்: ''நஜன்''

---

## மே தினம் தோன்றியது எங்கே?

மே முதல் தேதியை தொழிலாளர் தினம் எனக் கொண்டாடுகிறோமல்லவா? இது ருஷ்ய நாட்டில் கோலாகல விழாவாகக் கொண்டாடப்படுவதையும் நாம் அறிவோம். ஆனால் மே முதல் தேதி விடுமுறை என்பது அமெரிக்காவில்தான் ஆரம்பத்தில் தோன்றியது என்பது வியப்பளிக்கும். எட்டு மணி நேரத்துக்கு மேல் வேலை செய்ய இயலாது என்று அமெரிக்கத் தொழிலாளிகள் போராட்டம் நிகழ்த்தி வெற்றிபெற்ற தினமே மே முதல் தேதி. இதுவே ருஷ்யாவிலும் தொழிலாளர் தினமாக ஏற்கப்பட்ட பிறகு அமெரிக்காவில் தேதி மாறிவிட்டது! இப்போது அமெரிக்காவில் தொழிலாளர் தினம் செப்டம்பரில் வருகிறது. தொழிற்சங்கம் என்று முதன்முதலில் தோன்றியதும் அமெரிக்காவிலேதான்.

அங்கு தொழிற்சங்கங்கள் அரசியல் கட்சிகளின் செல்வாக்குக்கு அடங்கியவை அல்ல. அரசியல் கலப்பற்ற தொழிற் சங்கங்களேயானாலும் ஜனாதிபதி தேர்தலின்போது தொழிற் சங்கங்களுக்கு வெற்றி தோல்வியை நிர்ணயிப்பதில் பெரும் பங்கு உண்டு. எந்தக் கட்சி தொழிலாளர் நலன்களுக்கு உகந்ததாகச் செயல்படுமென்று கருதுகின்றனவோ, அந்தக் கட்சிக்குத் தொழிற் சங்கங்கள் ஆதரவு தருகின்றன. தேர்தல் பிரசாரத்திலும் உதவுகின்றன.

- ஒரு சொற்பொழிவில் பேர்ட்ராம் மெக்னமாரா கூறியது.




---



சமீபத்தில் இந்திராகாந்தி கல்கத்தாவுக்கு வந்தபோது விமான நிலையத்தில் ஒரு வயதான மனிதர் அவரிடம் வந்து ''தான் வேலைக்கு ஓர் அப்ளிகேஷன் போட்டிருந்தேன். உங்களிடமிருந்து அதற்குப் பதிலே இல்லையே?'' என்று கேட்டார்.

அவர் அப்ளிகேஷன் போட்ட வேலை - மேற்கு வங்காள கவர்னர் பதவி!

- ஸ்டேட்ஸ்மன்




உலகிலேயே மிக வெற்றிகரமான திரைப் படங்களில் ஒன்றான 'கான் வித் தி விண்ட்' என்ற படத்தின் கதையை எழுதியவர் மார்க்காரட் மிச்சல் என்ற பெண். அந்த நாவலுக்கு 'கான் வித் தி விண்ட்' என்ற பெயர் இடுவதற்கு முன் அவர் பல பெயர்களை யோசனை செய்தாராம். அவைகளில் ஒன்று ''பா பா ப்ளாக் ஷீப்!''

-- எம். ஜி. எம். தகவல் இலாகா

--''பாபு''




உயர்வின் சின்னம்

(Estd.: 6-1-1947)

# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்

பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:
திருநெல்வேலி-6 [போன்: 274

மத்திய அலுவலகமும், முதலீடுகள் பெற்றுக்கொள்ளுமிடமும்:
36-B, மவுண்ட் ரோடு (ஸ்பென்சர் & கம்பெனி எதிரில்)
சென்னை-2 போன்: 84244
புதிய கிளையுடன் செயல்படுகிறது

தணிக்கைக்குட்பட்டு 31-3-1969ல் அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 5 லட்சம் மொத்த ஆஸ்திகள் 2.00 கோடி. சீட்டில் ஈடுபடுத்திய தொகை ரூ. 4.12 கோடி செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வும் 1.88 லட்சம்

கல்கத்தா ரிசர்வ் பாங்க், பாங்க் அல்லாத நிதி கம்பெனிகள் டிபார்ட்மெண்ட் 29-10-66ல் வெளியிட்ட நோட்டிபிகேஷன் DNBC 1/ED (S) 66/- பாரா 2 (i) (f)ன் ஸப்கிளாஸ் (x)ன் படி.

## காரண்டி செய்த லோன் வாங்கப்படுகிறது

| தவணை | வட்டி விகிதம் ரூ. 300-லிருந்து ரூ. 5,000 வரை | ரூ. 5,000-க்கு மேல் |
|---|---|---|
| ஒரு வருடம் | $8\frac{1}{2}\%$ P. A. | 9% P. A. |
| இரண்டு வருடம் | 9% P. A. | $9\frac{1}{2}\%$ P. A. |

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி செக்குகள் அனுப்பப்படுகின்றன. அவைகளை எங்கள் எந்தக் கிளையிலும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம்.

### தொழில் விபரம்

பிரதி மாதம், மாதம் மும்முறை, தினசரி உள்ள ஏலச் சீட்டுகள் நடத்துதல், ரூ. 10,000 வரை மதிப்புள்ள ஏலச் சீட்டுகள் எங்கள் 27 ஆபீஸ்களிலும் நடத்தப்படுகின்றன.

### அலுவலக நிர்வாகம்

மானேஜிங் டைரக்டர்:
ஸ்ரீ AR. ராமசாமி,

டைரக்டர்கள்:
ஸ்ரீ M. A. M. கோவிந்தன் செட்டியார்
ஸ்ரீமதி RM. மெய்யம்மை ஆச்சி

மத்திய அலுவலக மானேஜர்:
ஸ்ரீ K. A. ராம், பி. ஏ., பி. எல்.

### கடந்த மூன்று வருடங்களில் ஆதாயமும் டிவிடெண்டும்:

| வருடம் | வரி கொடுப்பதற்கு முன் லாபம் | வரி கொடுத்த பின் லாபம் | டிவிடெண்ட் விகிதம் |
|---|---|---|---|
| 1965-66 | 61908-72 | 25170-72 | 15% |
| 1966-67 | 79686-41 | 27686-41 | 16% |
| 1967-68 | 89468-58 | 28468-58 | 17% |

### பொறுப்புகள் 31-3-1968

| | |
|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வ் நிதி | ரூ. 1,40,075 |
| பிக்ஸட் டிபாஸிட் | ரூ. 8,42,575 |
| ஷார்ட் டெர்ம் டிபாஸிட்டுகள் | ரூ. 2,75,050 |
| காரண்டி செய்த லோன்கள் | ரூ. 10,33,475 |
| தற்காலிகக் கடன் | ரூ. 1,15,991 |
| சீட்டு இதர பொறுப்பு வகைகள் | ரூ. 1,33,79,414 |
| மொத்தம் | ரூ. 1,52,86,580 |

புதிய M. குரூப் ரூ. 25,000 மதிப்புள்ள சீட்டுகள் எங்கள் 12, கிலேதார் தெரு, திருச்சி (போன்: 4276)யிலும், 43, விஸ்வநாதராவ் ரோடு, மாதவநகர், பெங்களூர்-1 (போன்: 75955)லும் நடைபெறும். ஆடிட் செய்த பாலன்ஸ் ஷீட்டுகள் வேண்டுபவருக்கு அனுப்பப்படும்.

K. A. ராம், பி. ஏ., பி. எல்.
மத்திய அலுவலக மானேஜர்

அனுமதித்த தேதி: 7-4-69

AR. ராமசாமி
மானேஜிங் டைரக்டர்

PARAMOUNT

சிறுவர் கதை

# ஏழு சகோதரர்கள்

முன்னொரு காலத்தில் ஏழு சகோதரர்கள் ஒரு பெட்டியில் வசித்தார்கள். வானவில்லின் புதல்வர்கள் அவர்கள்.

சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள், பச்சை, நீலம், ஆழ்ந்த நீலம், வயலட்—இவை அவர்களின் பெயர்கள்.

ஒருநாள் அவர்கள் தங்களுடைய இருண்ட வீட்டில் இருந்த ஒரு கீறல் வழியாக எட்டிப் பார்த்தார்கள். ஆனால் எதையும் பார்க்கவில்லை. பார்ப்பதற்கு ஒன்றுமே இல்லை!

"எவ்வளவு மந்தமாக இருக்கிறது. நாம் ஏதாவது செய்வோம்" என்று அவர்கள் கூச்சலிட்டார்கள். ஆகவே அவர்கள் பெட்டியிலிருந்து வெளியே தாறுமாறாகத் தாவிக் குதித்தார்கள். ஆழ்ந்த நீலம் ஒரு வீட்டின் படம் வரைந்தான்.

"இது பிரயோசனம் இல்லை" என்று அவன் சகோதரர்கள் ஒரே குரலில் கத்தினார்கள். "உலகத்தில் இன்று ஆழ்ந்த நீல வர்ண வீடுகளே கிடையாது" என்றார்கள்.

சிவப்பு வேகமாகச் சில செங்கற்களை வரைந்தான். அவற்றை அடுக்குவதற்கு அவர்கள் அனைவரும் உதவி புரிந்தார்கள். சிவப்பு வீடு மிகவும் நேர்த்தியாக இருந்தது.

"ஆனால் ஏதோ ஒன்று இல்லை போலிருக்கிறதே! அது என்ன?" என்று ஒருவன் கேட்டான்.

"எனக்குத் தெரியும். கூரை இல்லை" என்று பச்சை சொன்னான். அந்த வீட்டுக்கு அழகான கூரை ஒன்றை அவன் அமைத்தான்.

அது மிக மிகப் பச்சையாக இருந்தது. அதனால் அவன் மிகுந்த மகிழ்ச்சி கொண்டான். தோட்டத்தில் கொஞ்சம் புல்லும் மரங்களும் தீட்டினான்.

புல் பசுமையாகவும், இனிமையாகவும் காட்சி தந்தது. ஆகவே சகோதரர்கள் அதன் மேல் நடக்க விரும்பவேயில்லை. "நாம் எங்கே விளையாடுவது?" என்று அவர்கள் கேட்டார்கள்.

"இதோ அதற்கு ஓர் இடம்" என்று சொல்லி, மஞ்சள் மணல் தடம் ஒன்றை வரைந்தான்.

நீலம் களங்கமற்ற வானம் அமைத்தான். அதிலே பிரகாசமான சூரியனை ஆரஞ்சு தொங்கவிட்டான்.

ஆழ்ந்த நீலம் மட்டுமே வருத்தமாக இருந்தான். "நான் என்ன செய்ய முடியும்? நான் எதற்கும் உபயோகம் இல்லாதவன்தானா?" என்று அவன் விம்மினான்.

"ஒரு ஆறு போட்டால் என்ன?" என்று அவன் சகோதரர்கள் யோசனை கூறினார்கள். "நல்லது!" என்று ஆழ்ந்த நீலம் உற்சாகமாகச் சொன்னான்.

அவன் துள்ளி எழுந்தான். ஆழ்ந்து கனத்த நீல நிறத்தில் வளைந்து ஓடும் நதி ஒன்றைத் தீட்டினான். இதுவரையில் கண்டிராத அளவு மிகவும் நீல நிறமான நதி அது.

வயலட் தம்பிக்குத்தான் இதுவரை செய்வதற்கு எதுவும் அகப்படவில்லை. கடைசியாக அவன் கீழே உட்கார்ந்து அழலானான்.

அவனது கண்ணீர்த் துளிகள் மென்மையான பசும் புல் மீது விழுந்தன. அவை மண்ணைத் தொட்ட இடத்தில் எல்லாம் அழகான வயலட் பூக்கள் மலர்ந்தன. லிலாக் செடிகள் பூத்துக் குலுங்கின!

—ஒரு ருஷ்யக் கதை

விக்டர் வாஜ்தயேவ்



(சென்ற இதழ் தொடர்ச்சி)

விறுவிறு என்று நாடகங்கள் ஓடின. ஐம்பதாவது நாடகமும் வந்தது. அதைக் கோலாகலமாய்க் கொண்டாட நினைத்தார்கள். விளம்பரமும் அழைப்புக்களும் பறந்தன. நாடகத்தன்று கவர்னர் தலைமை வகித்தார். மந்திரிகள் பேசினார்கள். விழா அமர்க்களமாய் நடந்தது.

இரவில் 'டின்னர்' முடிந்து நாங்கள் வீட்டுக்கு வரும்போது பதிரெண்டு மணியாகிவிட்டது. நாங்கள் ஒரு 'ஸெட்' முன்னால் போய் விட்டோம். அக்காவும் வசந்தாவும் முன்னால் போய்க் கொண்டிருந்தார்கள்.

புறக்கடைத் தோப்பில் கூடிய போது, அமிர்தம் சிவியைப் பார்த்து, ''ஏண்டி, நீ கவனிச்சயாடீ ?'' என்றாள்.

''என்னதை?''

''சாப்பாடு முடிந்ததும் வசந்தா நைஸா அடுத்த ரூமுக்குள்ளே நழுவினதை!''

''தெரியும்; நானும் பார்த்தேன்!''

''காரணம் தெரியுமா ?''

''தெரியாது !''

''ரமேஷ் ஓரமா நின்னு மெள்ள ஜாடை காட்டினார்.''

''அப்புறம்?.'

''திரும்பி வரும் போது வசந்தா பீடா போட்டுக் கொண்டு சிரிக்கக் கொண்டே வந்தாள்! ரமேஷ்தான் அவளுக்கு ஸ்பெஷலா பீடா கொடுத்திருக்கணும்!''

. எங்களுக்குத் 'திக்'கென்றது.

''அதனால் என்னடி?'' என்றாள் உஷா.

''அதனால் என்ன?...ஓ...ண்...ணுமில்லே'' என்று வெற்றிலை அடைத்த வாயால் பம்மினாள் அமிர்தம்.

பேச்சு நின்றது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு நினைவில் ஆழ்ந்தோம். உண்மையில் அன்றைய நாடகத்தைப் பார்த்த போது கூட ரமேஷ் நடிப்பு ஒரு விசேஷமாகத் தோன்றியது. ''மாலா! உன் கண்கள் வீசும்

# நாங்கள் நடிகைகள்

பெர்க்லி-கல்கி
இலக்கியப்
பரிசுத்திட்டம்



ஸ்ரீவேணுகோபாலன்

ரூபாய் ஐந்நூறு
இரண்டாவது பரிசு பெற்ற
சிறுகச் சிறுகதை

அலையிலே என் மனசை ஒரு படகாய் மாற்றி மிதக்க விடுகிறேன்!'' என்று சொல்லும் போது அவர் நடிக்கிறாரா அல்லது உள்ளூற உணர்ந்து அனுபவிக்கிறாரா என்று தோன்றியது. ஒரு கட்டத்தில் வசந்தாவை இழுத்து அவர் உறுதி மொழி கொடுத்த போது அவர் முகத்தில் தோன்றிய ஆவலும் அன்பும் பரிவும் அப்பப்பா, நடிப்பு என்றே சொல்ல முடியாது.

இரண்டு நாட்களாய் வசந்தா தெம்பாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தாள். நாள் முழுதுக்கும் வசந்தாவின் சிரிப்பு எங்கேயாவது கேட்டுக் கொண்டேயிருந்தது. கொல்லையில் சிரிப்பு! வாசலில் சிரிப்பு! சின்னத் தம்பியோடு பேசிச் சிரிப்பு. குளிக்கப் போனால் 'தண்ணி சில்லுனு இருக்கே' என்று சொல்லிச் சிரிப்பு! சாப்பாட்டு வேளையில் டக்கென்று வந்து நிற்கும் கறுப்பன் நாயிடம், ''எங்கேடா இத்தனை நாழி போயிருந்தே ?'' என்று செல்லமாய்க் கேட்டுச் சிரிப்பு !

காலண்டரில் அடுத்த நாடக தேதியைப் பார்த்துக் கொண்டே இன்னும் பத்து நாள் பாக்கி, ஒன்பது நாள் பாக்கி, எட்டு நாள் பாக்கி என்று ஒவ்வொரு நாளும் சொல்லிக் கொண்டே வருவாள். 'அமிர்த அக்கா ! வசனம் ஒப்பிக்கிறேன். கேட்கிறியா ?' என்று சொல்லிக் கிணற்றடியில் ஒப்பிக்க ஆரம்பிப்பாள். ''சேகர்! பீச்சிலே அன்னிக்கு என்னைப் பார்த்த முதல் பார்வையை நான் மறக்கல்லே ! அந்தப் பார்வை என் மனசிலே பூவாய்ப் பூத்து விட்டது. ஒரு நட்சத்திரமாய்ப், பொரிந்து விட்டது.....''

சொல்லும்போதே அவள் வெறுமையை நோக்கிக் குழைந்து மெய்மறந்து போவாள்...

ஒரு நாள் இருட்டும் நேரத்தில் வீடு நிசப்தமாயிருந்தது. அக்கா வடபழனி கோயிலுக்குப் போய் விட்டாள். உஷாவுக்குச் குளோயிலே ஒத்திகை. அமிர்தம் டான்ஸ் கற்றுக்கொள்ளப் போய் விட்டாள். நித்தியா உள்ளே அரிக்கன் லாந்தர் முன்னால் தேனும் பேட்டை இளமுத்துவினுடைய அனல் கக்கும் வசனங்களை நெட்டுருச் செய்து கொண்டிருந்தாள். சீனி தாவணியை இடுப்பில் சுற்றிக் கொண்டு டப்பாங்குத்துப் பாட்டுக்கு ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்தில் வியர்த்து விறுவிறுக்கவே, சீனி கொல்லைப்புறத்துக்குப் போனாள். அங்கே கிணற்றடி தோய்ப்புக் கல்லில் வசந்தா உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, மெள்ள அடி மேல் அடி வைத்துப் போய்ப் பின்புறமாக அவள் கண்களைச் சட்டென்று பொத்தினாள். வசந்தா அவள் கைகளை விடுவித்தாள்.

''என்ன வசந்தா ? ஏன் இப்படி....?'' சீனியின் கை ஈரமாகி விட்டது. வசந்தா எதற்கோ கண்ணீர் விட்டிருக்கிறாள்.

''ஒண்ணுமில்லேடி!''

''சும்மா ! காரணம் சொல்லு. ஏன் அழுதுகிட்டிருந்தேன்னு !''

வசந்தா சிறிது நேரம் பேசவில்லை.

''பழசெல்லாம் நினைச்சுப் பார்த்தேன். அழுகையா வந்தது.''

இதற்குள் அமிர்தமும் நித்தியாவும் வந்து விட்டார்கள். எல்லோரும் வசந்தாவைச் சுற்றி நின்று கொண்டார்கள்.

அமிர்தம் வசந்தாவைப் பார்த்து, ''ஒண்ணு கேட்பேன், கோவிச்சுக்க மாட்டியே?'' என்று கேட்டாள்.

''இல்லே.''

''சாயங்காலம் டான்ஸ் கிளாஸுக்குப் போறதுக்கு முன்னாடி, சவுரியைத் தேட வேண்டி வந்தது. உன் சவுரியை எடுத்துக்கிடலாம்னு உன் பெட்டியைத் திறந்தேன்!''

''எடுத்துக்கிடறதுதானே !''

''அதைச் சொல்ல வரல்லே வசந்தா ! உன்னை தேடின போது எதேச்சியா நீ சோளித் துணி வைக்கிற அட்டைப் பெட்டியைத் திறந்து பார்த்தேன். உன்னை பார்த்தா ஒரு பட்டுப் புடவை கண்ணைப் பறிக்குது !''

வசந்தா திக்பிரமையோடு நின்றாள். இருட்டில் நாங்கள் எல்லோரும் நிசப்தமாய் நின்றோம். வீட்டின் உள் விளக்கு மங்கலாய் ஆடிக் கொண்டிருந்தது.

''அதைக்கூட அவர்தான்டி வாங்கிக் கொடுத்தது !''

''யாரு ? ரமேஷா ?''

''ஆமாம்! நான் என்னடி செய்வேன் ? வேண்டாம், வேண்டாமின்னேன். கேட்கல்லே! கொடுத்துட்டாரு ! கட்டிக்க; பார்க்கணும்கிறாரு ! அக்காவுக்குத் தெரிஞ்சு துன்னு....''

மீண்டும் நிசப்தம். எங்கள் மனங்கள் 'தடக் தடக்' என்று அடித்துக் கொண்டன.

''அவர் ஏன்டி அப்படிச் செய்யறாரு ?''

''தெரியலே !''

''இந்த மாதிரி வைச்சுக்கிடாதீங்கன்னு சொல்றதுதானே !''

''எப்படி நான் சொல்லுவேன் ?''

''நான் சொல்லட்டுமா ?''

''ஐயோ, சீனி! என் மனசை நீ புரிஞ்சுக்கல்லே !''

நாடகங்கள் ஓடிக் கொண்டிருந்தன. வழக்கமாகக் கலாபவனத்தார் ஒரு நாடகத்தை நூறு வரை ஓட்டித் தீர்ப்பார்கள். ஆனால் இந்த நாடகத்தை எழுபதிலேயே சட்டென்று நிறுத்தி விட்டார்கள். அடுத்த நாடகத் தயாரிப்பில் இறங்கி விட்டார்கள்.

மளமள வென்று வேலைகள் நடந்தன: ஒத்திகைகளும் ஆரம்பித்து விட்டன. சில நாட்களில் எங்களுக்குச் செய்தி வர ஆரம்பித்தது: புது நாடகத்தில் ரமேஷ் கதா நாயகனாக நடிக்கவில்லை என்று.

முதல் நாள், ஒத்திகையில் கலந்து கொண்டு விட்டு வந்த அக்கா வீட்டில் வந்து வருத்தப் பட்டுக் கொண்டிருந்தாள். ''என்ன சண்டையோ, சச்சரவோ தெரியலேயேடி! மத்தவங்களைப்போல இவங்களும் பூசல் போட்டுக் கிட்டாங்களோ என்னவோ! ரமேசுக்கு ஒரு வேசம்கூடக் கொடுக்கல்லே. புதுசா ஒருத்தனைப் பிடிச்சுக் கதாநாயகனாப் போட்டிருக்காங்களே, அவர் கத்த மட்டும் ! வசனம் கூடத் தெரியாது '' என்றாள்.

வசந்தாகூட உற்சாகமில்லாமல் இருந்தாள். வீட்டில் கலகலவென்று பேசவில்லை. பின்புறம் கிணற்றடிக் கல்லில் இரவு வெகு

நேரம் உட்கார ஆரம்பித்தாள். எதற் கெடுத்தாலும், "நாடகத்திலே நல்ல ஆளைப் போடாமல் இப்படிக் கெடுக் கிறாங்களே!" என்று சொல்லிக் கொண் டிருந்தாள்.

கடைசியில் மேடைமீது ஒத்திகை பார்க்கும் நாளும் வந்தது. அக்காதான் வசந்தாவோடு போயிருந்தாள். ஒத்திகை முடிந்ததும் அக்காவால் பொறுக்க முடிய வில்லை. செக்ரடரி சாரை அழைத்துக் கொண்டு அப்பால் தனியாகப் போனாள். "என்னங்க, இது! இப்படிப் பண்ணிட் டீங்களே! ரமேசையே கதாநாயகனாகப் போட்டிருக்கலாமே! இவரு நடிப்பு சுகமில் லிங்களே!" என்றாள்.

"ரமேஷ் நடிக்கக் கூடாதுன்னு அவன் அப்பா கண்டிப்பா உத்தரவு போட்டுட் டார். அதனாலேதான் அவனுக்கு ஒரு பாத் திரம்கூடக் கொடுக்கல்லே! எங்களுக்குக்கூட வருத்தந்தான்!" என்றார் செக்ரடரி.

"ஏன் அப்படிச் சொன்னாரு?"

'ஹி....ஹி....' என்று புகைவிலேயோடு சிரித்தார் சார். "உங்களுக்கு ஒண்ணும் தெரி யாதா? அரசல் புரசலாப் பேசிக்கிறது காதிலே விழலேயா?"

"இல்லீங்களே!

மீண்டும் சிரித்தார் அவர்.

"ரமேஷ் வசந்தா மேலே இஷ்டம் வச்சுட்டான்னு அவன் அப்பா சொல்றார்!"

"அட கடவுளே!" என்று வாயை விரித் தாள் அக்கா. "மெய்யாலுமா?"

"யாரு கண்டாங்க? அதனாலே கண் டிப்பாப் பேசிட்டார்! அவனே இந்தப் பக்கம் தலை காட்ட விடறதில்லே! அவரும் கமிட்டி அங்கத்தினர்லேயிருந்து விலகிட்டார்!"

வீட்டுக்கு வரும் வரை அக்கா பேசாமல் இருந்தாள். உள்ளே போய் முகம் கழுவித் திருநீறு பூசி வந்ததும் நடையிலே உட் கார்ந்து கொண்டு, "அவளைக் கொண்டு வாடி இங்கே! ஏ... வசந்தா!" என்று கத்தினாள்.

புதுப் புடவையைக் களைந்து பழையதை உடுத்திக் கொண்டிருந்த வசந்தாவை நாங்கள் அழைத்து வந்தோம்.

"என்னமடீது? நான் கேள்விப்படறதெல் லாம் நிசமா?"

"என்னது அக்கா?"

"இந்த ரமேசு உன் மேலே என்னமோ காதல் கீதல்னு சொல்லிட்டுத் திரியறா ராமே?"

வசந்தா ஒரு கணம் தயங்கி நின்றாள்.

"என்னடி தயங்கிறே? இரண்டு கை சேர்ந்தால்தானே சத்தம் கேட்கும்?"

"எனக்கு ஒண்ணுமே தெரியாதக்கா!"

"உன்கிட்டே அவர் ஏதாவது அது இதுன்னு பேசினாரா?"

"ஊஹூம்! இல்லேயக்கா! அவரா ஏதாவது நினைச்சிண்டிருந்தா அதுக்கு நான் என்ன செய்யறது அக்கா?"

"லெட்டர், கிட்டர் ஏதாச்சியும் கொடுத் தாரா?"

"இல்லேயக்கா!"

"நிஜம்மா?"

"நிஜம்மாதான் அக்கா!"

"பெரிய இடத்துப் புள்ளைங்களுக்குப் புத்தி போற போக்கைப் பாரு!" என்று அங்கலாய்த்தாள் அக்கா.

இதற்குப் பிறகு வீட்டில் கலகலப்பு கொஞ்சம் குறைந்திருந்தது. வசந்தா தனித்தே இருந்து வந்தாள். இரவுச் சாப் பாடுகூடக் களையில்லாமல் இருந்தது.

ஒரு வெள்ளிக்கிழமை காலை. கிணற்றடி யில் நாங்கள் துணி துவைத்துக் கொண் டிருந்தோம். வாசல் பக்கம் திடீரென்று கூச்சல் எழும்பிக் கொண்டிருந்தது. நாங்கள் பரபரப்பாக வீட்டுக்குள் நுழைந்தோம். வாசல் நடையில் யாரோ கத்திக் கொண் டிருப்பதைக் கேட்டு, மெள்ள எட்டிப்



பார்த்தோம். ரமேஷின் தந்தை என்று புரிந்து விட்டது.

"ஊரைக் குட்டிச்சுவரா பண்றீங்க? நடிக்கிறாப் போல நடிக்கிறது. ஆளை மயக் கறது. உங்களையெல்லாம்......"

"இந்தா சார், கம்மா அடுக்காதீங்க! எங்க பெண்ணு மேலே தப்பு இடையாது. உங்க பிள்ளை மாறிப் போனார்னு அதுக்கு நாங்க என்ன பண்ணறது?"

"உங்க பெண்ணு மயக்காம எங்க பிள்ளை மாறிடுவானா? இல்லே, மாறிடுவானா கேட்கிறேன்? ஒரு பெரிய வீட்டுப் பிள்ளை யைப் பிடிச்சுட்டா வாழ்க்கை முழுக்க பணத்துக்கு நிம்மதியாயிருக்கலாம்னு உங்க

"என் பையனுக்கு மூன்று சக்கர சைக்கிள் ஒன்றை உங்களிடம் தவணை முறையில் வாங்கி இருந்தேனே இந்தாருங்கள், பணம்!" என்று தவணைத் தொகையைச் செலுத்தினார் வந்தவர்.



கடைக்காரர் கேட்டார்: "பையன் எப்படி இருக்கிறான்?"

"அடுத்த வாரம் அவனுக்குக் கல்யாணம்" என்றார் வந்தவர்.

—ஸ்ரீ. ராஜா ராமன்

---

பெண் நினைச்சிருக்கா! பணம் வேணுமின்னு கேளுங்க! பணத்துக்காகத்தானே எதையும் பண்றீங்க? எங்களுக்குத் தெரியாதா?"

"இந்தா, சார்! சும்மா அலட்டாதீங்க! உங்க பணத்துக்கு யார் அழுவறாங்களோ அவங்ககிட்டே கொடுங்க! உங்க பணம் இங்கே தேவையில்லே. பணத்துக்காக அது பண்றோம், இது பண்றோம்னு கேவலமாப் பேசாதீங்க! எங்களுக்கும் மானம் உண்டு!"

"உண்டு..... எல்லாம் வாழற லட்சணத்திலேயிருந்து தெரியறதே! இந்தாம்மா கடைசியிலே எச்சரிக்கை! அந்தப் பெண் அந்தப் பக்கம் தலை காட்டக் கூடாது. ஆமாம்; சொல்லிட்டேன். அப்புறம் அந்த நாடகக் குழுவையே கலைச்சுடுவேன்!"

கறுவிக் கொண்டே போய்க் காரின் கதவைத் திறந்து 'டப்'பென்று அடைத்துப் பறந்து போனார் அவர்.

அவர் போன பிறகு அக்கா 'ஓ' என்று அழுது கொண்டிருந்தாள். நாங்கள் சமாதானப்படுத்திப் பார்த்தோம்.

அதற்குப் பிறகு வீடே வெறிச்சிட்டு விட்டது. வசந்தா வளைய வளைய வந்து கொண்டிருந்தாள். கலகலப்பெல்லாம் ஓடி விட்டது. இரவில் தென்னோலைகளின் சலசலப்பு எங்களுக்கு ஏதோ துக்கமான முணுமுணுப்புப் போல இருந்தது.

ஏனோ தெரியவில்லை. புதிய நாடகத்தின் அரங்கேற்றம் தள்ளிப் போய்க் கொண்டேயிருந்தது. ஒருவேளை ரமேஷின் தந்தை பழி வாங்கிவிட்டாரோ என்று தோன்றியது.

நவராத்திரி நாட்கள் வந்தன. நோன்பும் விரதமுமாக வீடு தடபுடல் பட்டுக் கொண்டிருந்தது. அக்கா பாதி நேரமும் வீட்டில் இருப்பதேயில்லை. கோவில், குளம் என்று போய்க் கொண்டிருந்தாள்.

வசந்தாவைக் கலாபவனத்தார் 'கான்ஸல்' செய்து விட்டார்கள். இது அவளுக்குத் தெரியாது. நாங்கள் அவளிடம் சொல்லவில்லை. அவளும் எங்களைப் போல் யாரையாவது அழைத்துக் கொண்டோ, தனியாகவோ வெளியே கோவில்களுக்குப் போய் வந்தாள்.

ஒரு வெள்ளிக்கிழமை இரவு அக்கா வீட்டில் இல்லை. நாங்கள் பின்புறம் இருந்தோம். நன்றாக இருட்டியிருந்தது. வசந்தா கொல்லைக்கட்டில் இறங்கி வந்து கொண்டிருந்தாள்; அவள் தடுமாற்றம் எங்களை ஏதோ செய்தது. கொஞ்ச நாட்களாய் உடம்பு சரியில்லை. இளைத்துப் போயிருந்தாள்.

கிணற்றடிக் கல்லில் உட்கார்ந்தாள். முகம் சோர்ந்திருந்தது. "உடம்பு எப்படி இருக்கு?" என்று சீனி கேட்டான். 'சரியாயிருக்கு!" என்று தலையை ஆட்டினாள்.

"ஆமாம், வசந்தா! இந்த விஷயமெல்லாம் என்ன?" என்றான் சீனி. வசந்தா பதில் பேசவில்லை. தலையைக் குனிந்து கொண்டிருந்தாள்.

"உன் மேலே ரமேஷுக்கு இஷ்டமா, வசந்தா?"

"ஆமாம்."

"உனக்கு?"

அவள் தலையை நிமிர்த்தாள். "என்னைப் பற்றி ஒன்னுஞ் சொல்லத் தெரியலே!"

நாங்கள் மேலே தொடரவில்லை. சிறிது நேரத்தில் அவளாக ஆரம்பித்தாள்.

"எனக்கு என்னவோ அவர் அன்பை என் மேலே கொட்டின மாதிரி தோணறது. என்கிட்டே பேசும்போதோ, நடிக்கும் போதோ, பரிவையும் அன்பையும் கொட்டிப் பேசினார். எவ்வளவோ படிச்சவர், பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர், என்னை—அனாதையான என்னைக் கௌரவிச்சு, மதிப்புக் கொடுத்துப் பேசி எல்லா உதவியும் செய்தார்னு நினைக்கும்போது என் மனசுகூடக் கரைஞ்சுதான் போகுது. அவர் மதிப்பை அடையும் பேறு பெற்றேன் என்றுகூடச் சொல்லத் தோணறது. அவர் பேரிலே குற்றம் இல்லே, குற்றமேயில்லே! என் மேலேதான் குற்றம்! நான்தான் துரதிர்ஷ்டவசமா அவரோடு நடிக்க வேண்டி வந்தது!"

அதற்கு மேல் பேசவில்லை. விம்மலோடு முகத்தைக் குனிந்து கொண்டாள். எங்களுக்கே சங்கடமாகத்தான் இருந்தது. இரவு படுக்கும் போது ஆளுக்கொரு சுமையைத் தூக்கிக் கொண்டிருப்பது போலிருந்தது.

ஒவ்வொரு நாளும் மௌனத்தோடு நகர்ந்தது. வீடே துக்கம் கொண்டாற்போல் வெறுமையாய்க் காட்சியளித்தது.

இரண்டு மூன்று வாரங்கள் ஓடியிருக்கும். ஒரு நாள் காலை! மணி ஐந்திருக்கும். அக்கா ஐய்யோ முறையோ என்று கத்துவதைக் கேட்டு நாங்கள் அலறிப் புடைத்து எழுந்தோம். "டேய், சின்னத் தம்பி! வசந்தா பையை எடுத்துக்கிட்டு வாசலிலே போறா, பாருடா! போய்ப் பாருடா! போ! போ!" என்று இரைந்தாள். நாங்கள்கூடத் திடுக்கிட்டோம்.

வெளியே ஒவ்வொருவராக வந்தோம்; நாய்கள் குரைத்துக் கொண்டிருந்தன. கிழக்கு வெளுத்துக் கொண்டிருந்தது.

"அடிப் பாவி! வீட்டை விட்டு ஓடறியேடி! உனக்கு என்ன தைரியம்டீ?" என்று அக்கா பிரலாபித்தாள். விஷயத்தை நாங்கள் ஒருவாறு ஊகிக்க முடிந்தது. வசந்தா அதிகாலையில் வீட்டை விட்டுக் கிளம்பி விட்டாள், நிரந்தரமாக.....

வாசலில் எல்லோரும் கூடிவிட்டோம். அக்கா பதற்றத்தோடு அங்குமிங்கும் உலாத்திக் கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கவே பயமாக இருந்தது; எங்களை

அடிக்கடி முறைத்துப் பார்த்தாள். பிறகு தெருவோடு அவளும் நடக்க ஆரம்பித்தாள்.

நாங்கள் கசமுசவென்று பேசிக்கொண்டோம். வானம் வெளிறி விட்டது. வாசலில் துக்கம் காத்தவர் போல் நாங்கள் நின்றோம்.

சிறிது நேரத்தில் அக்கா வசந்தாவை ஒரு கையால் இழுத்துக் கொண்டு இரைந்து கத்தியவாறு வந்து கொண்டிருந்தாள். வசந்தா ஒரு கையால் முகத்தை மூடி அழுது கொண்டிருந்தாள். சின்னத்தம்பி பின்னால் வந்து கொண்டிருந்தான்.

''வீடு பிடிக்கல்லியாம்! வேறே எங்கேனும் போய் வாழ்ந்துக்கருளாம். எம்மாந் தைரியம் பாரு ! வேறே இடத்திலே ஒழுங்கா வாழ விட்டிருவாளுக பாரு !'' என்று இரைந்து கொண்டே ஸ்டோருக்குள் வசந்தாவை அக்கா இழுத்து வந்தாள்.

வாசற்படியில் அவளை நிற்க வைத்து, ''ஏண்டி ! என்னைப் பாரு ! நான் உங்க அம்மா மாதிரி ! இவங்களைப் பாரு ! இவங்க உன் சகோதரிங்க மாதிரி ! இங்கே இருக்கிற சொர்கம் வேற எங்கேடீ வரும் ?'' என்று கூறினாள். அவள் அப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும் போதே எங்கள் பார்வை தெருவுக்கு மறுபுறம் உள்ள இடைவெளி வழியே அங்குள்ள மைதானத்தை நோக்கிச் சென்றது. அங்கே ரமேஷின் உருவம் தென்பட்டது. எங்களுக்குச் சுரீர் என்றது.

அக்காவும் ஒரு திருப்பத்தில் பார்த்து விட்டாள். ஒருகணம் வாயடைத்து நின்றாள். ஒரு தரம் ரமேஷையும், ஒரு தரம் வசந்தாவையும் மாறி மாறிப் பார்த்தாள். முகம் சிவந்து கண்கள் பழுக்கக் காய்ந்தன. வசந்தாவை உற்றுப் பார்த்து, ''ஓகோ ! ரெண்டு ,பேரும் சேர்ந்தா ?'' என்று கேட்டாள். பிறகு சின்னத் தம்பியைப் பார்த்து, ''டேய், அவளை விடுடா! அவள் போகட்டும்! இஷ்டப்படியே போகட்டும்'' என்று கூறி விட்டு ரமேஷ் இருக்கும் திசையைப் பார்த்து, ''இங்கே தைரியமா வந்து அழைச்சிக்கிட்டுப் போங்கோ!'' என்று கத்தினாள். ரமேஷ் நடந்து முன்னால் வந்து கொண்டிருந்தான். ''ம்! போடி ! தாராளமாய்ப் போ ! அவர் காத்துக்கிட்டிருக்கார் பாரு!'' என்றாள் வசந்தாவைப் பார்த்து.

வசந்தா பல கணங்கள் தயங்கினாள். பிறகு கையில் பையை எடுத்துக் கொண்டு, படிகளில் மெள்ள இறங்கலானாள். அக்கா இருக்கும் இடம் வரை வந்தவள் தயங்கி நின்றாள். ''மன்னிச்சுடுங்க!'' என்று சொல்லி மேலும் இரண்டடி எடுத்து வைத்தாள். அழுகைதாங்காமல்அப்படியே நின்றாள்.

அக்கா அவளைப் பதைப்போடு பார்த்தாள். ''இந்தாடி, வசந்தா ! என்னைப் பார்த்துக்க ! ஒரு மாடி வீட்டுச் சீமான் கல்யாணம் பண்ணி என்னை அழைச்சிக்கிட்டுப் போனவர்தான்! இப்போ அவர் என்னை என்ன வரிசையிலே வச்சிருக்கார் பாரு! அமிர்தாவைப் பார்த்தியா ? ஒரு மிராசுதார் அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு அழைச்சுக்கிட்டவர்தான். அவ கதி என்னாச்சு பாரு ? உஷாவோடு (உஷா) அம்மா இல்லே ? அவளை ஒரு பஸ் கம்பெனி சொந்தக்காரரு ஆசை காட்டி அழைச்சுக்கிட்டுப் போனவர்தான். அவருக்குப் பொறந்த பெண்ணு எங்கே வந்து நிக்கிறு பாரு ! கடைசியிலே உங்க அம்மாவை நினைச்சுப் பாரு ! அவ அழகுக்கு என்ன குறைச்சல்? அவளை விட்டுட்டு இன்னொருத்தியோடு ஓடினானே, உங்கப்பன் நாடக கண்டிராக்டர்! அதையும் நினைச்சுப் பாரு ! இதுக்கெல்லாம் மாறு உனக்கு ஒருத்தன்

* * *




## இன்ஸ்பெக்டர் கைது !

இன்ஸ்பெக்டர் ஒருவர் தம்மைத் தாமே கைது செய்து கொள்ள வேண்டிய பரிதாப நிலை பெர்லினில் ஏற்பட்டது!

இந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒரு வழக்கில் சாட்சி சொல்ல வேண்டியிருந்தது. குறித்த நேரத்தில் அவர் நீதிமன்றத்துக்குப் போனார். அங்கே தமது காரை நிறுத்த இடமில்லை! தொலைவில் வண்டியை நிறுத்திவிட்டு நடந்து வரலாம் என்றாலோ நேரமாகி விடும். நீதிபதியின் அதிருப்திக்கு ஆளாக நேரிடும்.

ஆகவே இன்ஸ்பெக்டர் வண்டிகள் நிறுத்தக் கூடாது என்று 'போர்டு' போட்டிருந்த இடத்திலேயே காரை நிறுத்தினார். நீதிமன்றத்துக்குள்ளே போய் வழக்கில் சாட்சி சொன்னார். அந்த வழக்கு முடிந்த கையோடு தாமே தம்மீது, காரை நிறுத்தக் கூடாத இடத்தில் நிறுத்தியதற்காக வழக்குத் தொடுத்துக் கொண்டு நீதிபதியை அபராதம் விதிக்கும்படி கேட்டுக் கொண்டார்!

— வி. எஸ். ஸாங்கடண்கர்



இது போன்ற இக்கட்டான நிலை ஏதேனும் உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறதா? அந்த இக்கட்டான நிலையை எப்படிச் சமாளித்தீர்கள்? சுருக்கமாக எழுதி அனுப்புங்கள். பிரசுரிக்கப்படுவனவற்றுக்குச் சன்மானம் உண்டு. உறையின் மேல் ''இக்கட்டான நிலை'' என்று குறிப்பிடவும். பிரசுரிக்க இயலாதவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை.



## பற்றும் பத்தியமும் !

**நா**ட்டு வைத்தியர் நகையழகனின் இயற்பெயர் ஹாஸ்ய சுந்தரம். கசப்பான மருந்தைக் கொடுத்தாலும் இனிமையாகப் பேசி வந்ததால், இடையே உள்ள 'ஸ'வை நீக்கி நண்பர்கள் ஹாஸ்ய சுந்தரமாகப் பெயர் சூட்டினர். காலதேச வர்த்தமானத்தை ஒட்டி அவர் தமது பெயரை முழுத் தமிழாக்கிக் கொண்டார். பெயருக்கு ஏற்பப் பற்களுக்குப் பொன் வேய்ந்து, கழுத்துக்குத் தாம்புக் கயிறு சங்கிலி மாட்டி, விரல்களுக்கு மோதிரம் அணிந்து தம்மை நகையழகனாகவேகூடச் செய்து கொண்டு விட்டார். நாட்டு வைத்தியமும் நம்பகமானதாகிப் பெருகி வளர்ந்து பொருள் தந்ததே இதற்குக் காரணம்.

அன்று ஓர் இளைஞன் அவரைக் காண வந்தான். தன் நோயைக் கூறினான். நோயின் காரணத்தைக் கண்டுபிடித்துவிட்ட நகையழகன் புன்னகையோடு, ''கவலைப்படாதே ! வீட்டுக்குப் போய் இன்று முதலே இந்தப் பற்றைப் போட்டுக் கொள் ! இதற்கு ஒரே ஒரு பத்தியம். பெண்டாட்டி கையால் அரைத்துப் போடச் சொல்ல வேண்டும் !'' என்றார்.

இளைஞனின் முகத்தில் நாணம் குமிழியிட்டது. ''பெண்டாட்டி கையால்தான் போடவேண்டுமா ? நானே போட்டுக் கொள்ளக் கூடாதா ?'' என்று கேட்டான்.

''நாட்டு மருந்து விஷயத்தில், மருந்தைக் காட்டிலும் பத்தியம்தான் முக்கியம் !''

''அப்போ ஒரு வாரம் பத்து நாள் பொறுத்துக் கொள்ளலாம் அல்லவா ?''

''அதெப்படி ? நோய் என்றால் முளையிலேயே கிள்ளி எறிய வேண்டாமோ ? ஒரு நாள்கூடத் தவக்கம் கூடாது.''

''பெரிய இக்கட்டான காரியத்தைச் சொல்கிறீர்களே ! அவளிடம் போய் இப்போ எப்படிச் சொல்றது ?''

''ஏன்? உனக்கும் அவளுக்கும் ஏதாவது சண்டையோ ?''

''சே ! அப்படி ஒரு பிரமேயமே ஏற்படவில்லே. இப்போ போய்ச் சொன்னால் நாலு பேர் நாலுவிதமாகச் சொல்லமாட்டார்களா ?''

''ஓகோ ! மகப் பேறுக்குத் தாய் வீட்டுக்குப் போயிருக்கிறாளாக்கும் !''

''அந்தப் பேறு.... சமீபத்தில் ஏற்படாது....!''

''அப்போ ஏன் தயங்கறே ?''

''இல்லே.... வந்து.... முந்தாநாள்தான் பெண் பார்த்து வந்தோம். பெண் பிடிச்சிருக்குன்னு நான் சொல்லவே, பெரியோர்கள் பாக்குவெற்றிலை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். எவ்வளவுதான் சீக்கிரம் முகூர்த்தம் வைக்கிறதென்றாலும், அடுத்த வாரத்துக்கு முன் நாள் கிடையாதே. அப்படியிருக்கும் பொழுது அவளைப் போய்ப் பற்று அரைத்துப் போடச் சொன்னால் நன்றாயிருக்குமா ?'' என்று கேட்டான் இளைஞன். நகையழகனுக்கு சுவாடவில்லை.

வந்துடுவான்னு எதிர்பார்க்காதே! கல்யாணமாய், ஆறு மாசத்திலே ஆசை தீர்ந்து போச்சுன்னு, அப்புறம் நீ பொறந்த இடமும் குலமும்தான்டி முன்னாலே நிக்கும் ! ஆம்...மாம் !''

வசந்தா அழுகையோடு திரும்பிப் பார்த்தாள். அக்கா மிகவும் நிதானமாகவே பேசினாள்.

''உனக்குப் பின்பலம் இருந்துச்சின்னு, ஒருத்தன் ஆயுசு வரைக்கும், உன் உறவுக்காரங்களுக்கும், சமூகத்துக்கும் பயந்து வச்சுக் காப்பாத்துவான் ! இல்லாக்கட்டி எங்களை எறிஞ்ச மாதிரி உன்னையும் எறிஞ்சிருவான். உனக்குப் பின் பலம் இருக்கான்னு நல்லா யோசி ! இருக்குன்னு நினைச்சா, போ ! தாராளமாப் போ! அவங்க அவங்க வசதிக்கு ஏத்தாப்பலே, வகைக்கு ஏத்தாப்பலே கட்டிக்கிட்டாத்தான்டி கல்யாணம் கொஞ்சம் நிலைச்சு நிக்கும். அப்படியில்லாத கல்யாணம் வச்சத்திலே ஒண்ணுகூட நிக்காதடீ !.... அப்புறம் அவன்கூடப் போயிட்டுச் சந்தியிலே நின்னு, திரும்ப இந்த மாதிரி இன்னொரு மடத்திலே போய்ச் சேராதே !.... நாடகத்திலேதான் டுயட் எல்லாம்! வாழ்க்கையிலே கிடையாது.''

வசந்தா ஆணி அறைந்தாற்போல் அப்படியே நின்றாள். கண்ணீர் தெப்பல் தெப்பலாய் வந்து கொண்டிருந்தது. முகத்தை மூடிக் கொண்டு விம்மத் தொடங்கினாள்.

இதற்குள் ரமேஷ் சற்று எட்டத்தில் வந்து நின்றார். அக்கா அவனை ஏறிட்டுப் பார்த்து, அவனை நோக்கி நடந்து சென்றாள்.

''தம்பி! ஒரே ஒரு கேள்வி கேட்கிறேன், தம்பி ! வசந்தாவைக் கட்டிக்க ! கட்டிக்கிட்டா, உன்னாலே என்னை மாமியாரு ஸ்தானத்திலே கவுரதையா வச்சுக்க முடியுமா ? இந்தப் பொண்ணுங்களை மச்சினி ஸ்தானத்திலே வச்சுப்பியா ? சின்னத் தம்பியை மச்சான்னு கூட்டி வச்சுப்பியா ? இன்னிக்கு இந்த உறவு பேசிக்க உன் மனசு கஷ்டப்படுதுன்னு, நாளைக்கு வசந்தாவைப் பெண்டாட்டின்னு சொல்லிக்கக்கூடக் கஷ்டப் படுவே தம்பி ! உறவோட சமூகத்தோட வாழுற வாழ்வுதான் தம்பி நிலைக்கும். எல்லாத்தையும் விட்டுட்டா தனியாப் போய் ரெண்டு பேரும் எத்தினி நாள் வாழ்ந்துடுவீங்க ! நாடகக் கதையைப் போல வாழ்க்கைன்னு நினைச்சுக்கிடாதே, தம்பி!'' என்றாள்.

வசந்தா தாரை தாரையாக அழுதாள். பிறகு திடீரென்று ஆவேசம் வந்தவளைப் போல் பையை உதறிக் கீழே போட்டுவிட்டு ''அக்கா! உன் மனசு கோணி நடக்கமாட்டேன், அக்கா !'' என்று தேம்பலோடு இரைந்தாள். பிறகு பின்புறம் திரும்பிக்கூடப் பாராமல் படியேறி வீட்டுக்குள் நுழைந்து மறைந்து விட்டாள்.

''வசந்தா ! வசந்தா !'' என்று இரைந்தான் ரமேஷ்! வீட்டுக்குள்ளிருந்து பதிலே வரவில்லை. அக்காவுக்கு ஆனந்தக் கண்ணீர் கொப்பளித்தது.

''ஒருத்தருக்குத்தான் இஷ்டம் ! ஒருத்தருக்கு இஷ்டமில்லே, தம்பி ! போ ! போய் அப்பா அம்மா மனசு கஷ்டப்படாம நடந்துக்க தம்பி ! உணர்ச்சியிலே ஒண்ணும் பண்

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது!

சிறியோர், பெரியோர், யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"பல் நோய்களால் நான் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன்.. உங்களுடைய போர்ஹான்ஸை உபயோகித்துப் பார்த்தேன்.......இப்போது எனக்கு அந்த நோய்களின் அவதியில்லை. அநேகமாக 20 முதல் 25 நபர்கள் போர்ஹான்ஸ் உபயோகிக்கத்தொடங்கி விட்டனர். என் குடும்பத்தில் போர்ஹான்ஸ் தனி இடம் பெற்று விட்டது."

—உதயசங்கர் திவாரி, பாட்னா.

"விஞ்ஞான முறையில் தயாரிக்கப்படும் உங்கள் போர்ஹான்ஸ் பற்பசையை நான் கடந்த பத்து வருடங்களாக உபயோகித்து வருகிறேன். அது எனது ஈறுக் கோளாறுகளை யெல்லாம் அகற்றி விட்டது. இப்போது என் குடும்பத்தினர் யாவருமே போர்ஹான்ஸ் பற்பசை கொண்டு பல் துலக்குகிறார்கள்."

—என். எம். லால், புது டில்லி.

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும் காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபின்-ஆக்ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்...உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம்.
தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 15 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள் : மானேர்ஸ் டென்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1. K 6

பெயர் ______________ வயது ________

விலாசம் ______________________

மொழி ______________________

**போர்ஹான்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

65F-182 TM.

ணிப்புடாதே!'' என்றுள் அக்கா.

இந்தச் சம்பவங்களுக்குப் பிறகு வசந்தா நடிப்பதற்கு அறவே மறுத்தாள். எங்கள் வற்புறுத்தல்கள் பேரில் மெள்ள மெள்ள நடிக்கச் சம்மதித்தாள். ஆனுல் கதாநாயகியாக அல்ல! ஒரு சகோதரியாக, ஒரு தோழியாக, அல்லது ஒரு தாயாகத் தான் நடித்தாள். யாராவது கேட்டால், ''கதாநாயகியா வேண்டாங்க! நடிப்பாலேகூடக் காதல் ஒரு லட்சிய உணர்வுன்னு காட்டுவதற்கு நான் விரும்பவில்லே'' என்பாள். அவள் சொன்னது சரியோ, தப்போ தெரியாது!

ஒன்று மட்டும் உண்மை. இப்படி இருக்க வேண்டும் என்று நடிக்கிறேம். ஆனுல் அப்படி யாரும் இருக்க முடியாது என்று எங்களுக்கு நன்ருகத் தெரியும். அப்படி இருக்கக்கூடிய மனத் துணிவும் பண்பும் கோடியில் ஒருவரிடம் இருந்தால் அதிசயம்! மற்றவர்கள் அதை நினைத்து ஏங்கித் தோல்வியுறும் சாதாரணமானவர்கள் தான்!

இருந்தாலும், இம்மாதிரி லட்சியங்களை நாடகம், காவியம், கலைகள் எல்லாம் வீசி எடுத்து மனிதன் முன் போடுவதனுல் தான் அவை வீசி விடுகிற கனவில் களித்து, எங்கேயோ எப்போதோ ஒரு லட்சியவாதி பிறக்கிறுன். அவனுல் நாடும், இனமும், குலமும் விருத்தியடைகிறது. அந்த கைய லட்சியங்களை எடுத்து வீசும் பணியில் நாங்களும் ஒரு சிறிய வகையில் ஈடுபட்டிருக்கிறேம். அந்தப் பணிக்காகவே எங்களை அர்ப்பணித்திருக்கிறேம். அதை நினைக்கும் போதே மகிழ்ச்சி அடைகிறேம்!

துடைப்பம் போல நாங்கள் அழுக்கானவர்கள்தான்! ஆனுல் பிறர் அழுக்கை அகற்ற நாங்கள் உதவி புரிகிறேம். நாங்கள் எச்சிற்பட்டவர்கள்தான்! ஆனுல் சபரி அளித்த பழங்களைப்போல புனிதமானவர்கள்!

## தெரியுமே! ▼ (விடை)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | மு | க | ழு | டி | | | |
| 2 | | | | கெ | ன் | ன | டி | | |
| 3 | | லெ | ஸெ | நி | று | த் | த | ம் | |
| 4 | | | | | அ | ண் | ணு | து | ரை |
| 5 | | | | அ | மெ | ரி | க் | க | |
| 6 | | | | வா | ரி | யா | ஞு | | |
| 7 | | | | சா | க் | ர | டீ | ஸ் | |
| 8 | | | | ந | க | ர | ச | பை | |
| 9 | | | ஷா | த | ர் | கி | ங் | | |
| 10 | | | யூ | ரி | க | கா | ரி | ன் | |
| 11 | | பு | ல் | ப | ன் | ளி | | | |
| 12 | | | ஜ | ன | ச | ங் | க் | | |
| 13 | | | | கா | ந் | தி | ஜி | | |
| 14 | | | அ | ஸ் | தி | ரே | லி | யா | |
| 15 | | ச | ந் | தி | ர | னை | | | |
| 16 | | ம | து | ரை | ம | ணி | ஐ | ய | ர் |
| 17 | | | | கு | ண் | ரு | ஷெ | ச் | சு |
| 18 | | கா | ர் | ட் | ட | ன் | | | |
| 19 | | | | ரீ | ல | கி | ரி | | |
| 20 | | உ | ல | க | த் | த | மி | ழ் | |
| 21 | | | ஈ | ந் | தை | | | | |
| 22 | | | நி | ல | ச் | ச | ரி | வு | |
| 23 | | | கூ | ட் | சு | | | | |
| 24 | | | | தெ | ற் | க | த் | தி | ய |
| 25 | | | | கி | றி | ஸ் | டி | ய | ன் |
| 26 | | | | ஸ் | வ | போ | தா | | |
| 27 | வா | ர் | ஹோ | வி | ந் | த் | தொ | ரா | ணு |
| 28 | | | அ | ர் | த | ர் | ஆ | ஷ் | |
| 29 | | கு | வ | ர் | ண | ர் | | | |
| 30 | | | | சா | ர் | போ | ன் | | |



உங்கள் விடைகளில் முப்பதும் சரியானுல் உங்களை வெல்ல யாராலும் முடியாது.

20-29 நடப்பு விவகாரங்களில் அக்கறை உள்ளவர்.

10-19 மற்ற விவகாரங்களில் ஏனேதானே என்று இருப்பவர்.

1-9 கிணற்றுத் தவளை.

0 ஏனய்யா! நியூஸ் பேப்பர் ரேடியோ என்ற சில விஷயங்கள் உலகத்தில் இருக்கிறதே, தெரியுமோல்லியோ......?

# ஆண்களே !

# உங்கள் குடும்பத்தைக் கட்டுப்படுத்த 5 பைசா மட்டுமே போதும்.




குழந்தை பிறப்பதை உங்களால் இப்பொழுது தடுக்க முடியும்.

**நிரோத்** உபயோகியுங்கள்



குடும்பத்தைக் கட்டுப்படுத்துங்கள்

மூன்றின் விலை 15 காசு • ஒன்றின் விலை 5 காசு

*தற்போது சில மாவட்டங்களில் மட்டும் கிடைக்கின்றன*




# கிளிஞ்சல் கோபுரம்

ஜெகசிற்பியன்

வாழ்க்கையின் ஒவ்வோர் கட்டத்திலும் போராடி எதிர் நீச்சல் போட்ட இலட்சிய வாதியான முத்துசிவனின் பாத்திரப் படைப்பைப் புகழ்வதா, இரண்டாவது சபதத்தில் வெற்றி காணும்வரை அவனுக்காகக் காத்திருக்கத் தயாராக உள்ள கருணை வைப் புகழ்வதா?

இராசிபுரம்
10–4–69 இராசை ப. புவனேசுவரன்

கிளிஞ்சல் கோபுரம் ஒரு கோபுர கலசம். புதுமைப் படைப்பு. புதிய முடிவு. இறுதியாகக் கும்பாபிஷேக விளக்கம் அருமையிலும் அருமை. ஆனால் கதையை விரைவிலேயே முடித்து விட்டார்.

கண்டனூர்,
10–4–69 மெ. மெய்யப்பன்

''கிளிஞ்சல் கோபுரம்'' என்னும் உயிர்க் காவியத்தைப் படித்து மகிழ்ந்தேன்.

ஆனால் கடைசியில் கதாநாயகனை முத்துசிவனை ''ஜெகசிற்பியன்'' இவ்வளவு தூரம் சித்திரவதை செய்திருக்க வேண்டிய இல்லை. கருணையை மறுபடியும் ஏதோ சபதம் என்ற போர்வையில் ஒதுக்கி அதற்கும் கருணையை 'நான் தங்கள் சபதம் முடியும் வரை காத்திருப்பேன்' என்று சொல்லவைத்து கருணையையும் முத்துசிவனையும் உயர்த்தியிருக்கிறார். அப்படியென்றால் அவர்கள் அறுபதுக்கு அறுபது கல்யாணம் செய்து வைப்பதாக உத்தேசமா?

ஹைதராபாத்,
12–4–69 பி.ஏ. கந்தசாமி

நண்பர் முத்துசிவனுக்குக் கடைசிவரையில் இன்னல்களைக் கொடுத்து வாழ விடாமல் தடுத்த ஆசிரியர் ஜெகசிற்பியன் மிகவும் கல்நெஞ்சக்காரர்.

ஸ்ரீரங்கம்,
11–4–69 மைதிலி

ஜெகசிற்பியன் அவர்களின் புகழ் கிளிஞ்சல் கோபுரத்தை எழுதியதால் கோபுரத்தின் உச்சிக்குச் சென்று விட்டது. கதையை நன்கு முடித்த ஆசிரியருக்கு என் பாராட்டுகள்.

திருவள்ளூர்,
11–4–69 மா. கிருட்டிணன்

கிளிஞ்சல் கோபுரம் அழியும் தன்மையுடையதுதான். ஆனால் ஜெகசிற்பியனின் கிளிஞ்சல் கோபுரம்...? வாசகர்களின் மனத்தில் என்றும் நிலைத்து நிற்கக் கூடியது. இலட்சிய வீரனை முத்துசிவனை இடையில் அலைக்கழித்துவிட்டு இறுதியில் கோபுர கலசமாக உயர்த்திய பாங்கு பாராட்டுக்குரியது. அவன் வழியில் நடக்கும் கருணையும் போற்றுதலுக்குரியவளே.

சென்னை–5
10–4–69 பாசி. இராமச்சந்திரன்

சூழ்நிலை, சுற்றுப்புறங்களில் கஷ்டங்களையே காண்பவர்கள் முத்துசிவனின் வாழ்க்கையில் எதிர்ப்படுகின்ற பேரிடிகளைத் தங்களுக்கு ஏற்பட்டதைப் போன்று உணர்கின்றனர். மற்றவர்களைக் காட்டிலும் கருணையை எண்ணும்போது ரொம்பவும் பரிதாபமாக இருக்கிறது.

திருப்புகலூர்,
10–4–69 ஜி. சேஷாத்திரி

ஆசிரியர் தம் பெயருக்குப் புறம்பாக அழிக்கும் வேலையில் ஈடுபட்டுவிட்டார். இக்கதையின் முடிவில் கருணை–முத்துசிவன் மணம் நடவாது என்று கதையின் தலைப்பைப் பார்த்தே தெரிந்து கொண்டோம். அதற்காக இத்தனை துன்பங்களை அந்தக் கதையின் கடைசியில் திணிக்க வேண்டுமா?

சென்னை–33
10–4–69 கிருஷ்ணு

வருஷத்திய கதை ஒரே வாரத்தில் முடியக் கண்டேன். இத்தனை இன்னல்களா, மனிதனுக்கு? நல்லோன் ஒருவன் சற்றுப் பாதை பிறழ்ந்தமைக்கு இவ்வளவு தண்டனையா? அவனுக்காக அனுதாபப்படுகிறேன். ஞானலியின் முடிவும், மைதிலியின் வாழ்விழப்பும் வலம்புரியின் மரணமும், சுந்தரியின் போக்கும் என்னை அவ்வளவாகத் துன்புறுத்தவில்லை. கருணையின் இறுதிப் பேச்சு 'உங்கள் இரண்டாம் லட்சியம் முடியும்வரை காத்திருப்பேன்' என்றது என்னை அறியாமலே கண்ணினின்று நீரை வரவழைத்து விட்டது.

காரைக்குடி–3
11–4–69 ரா. நாகசேதுசுப்பிரமணியன்

# அம்மா அம்மா தான்...

**பா. தாமரை புஷ்பம்**

''**ப**க்கத்து வீட்டுக் குழந்தை ஒன்று நம்ப வீட்டுக்குத் தூங்கவருமே அது வந்துட்டுதா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் என் கணவர். அவருடைய சிரிப்பிலிருந்த குத்தலை நான் முதலில் புரிந்து கொள்ள வில்லை.

''பக்கத்து வீட்டுக் குழந்தையா?'' என்று அப்பாவித்தனமாகக் கேட்டேன்.

''ஆமாம். செக்கச் செவேர்னு குண்டு குண்டா குந்துமணி அளவு குழி விழுருப் பிலே சிரிச்சுக்கிட்டிருக்குமே அந்தப் 'பக்கத்து வீட்டுக் குழந்தை' கோகிலாவைத்தான் சொல்றேன்'' என்று சிரிக்காமல் வெகு கரிசனமாக விவரித்தார் அவர்.

எனக்கு அவமானத்தால் அழுகையே வரும் போல் இருந்தது. கோகிலா எங்களுடைய குழந்தை!

''நம் குழந்தையை இப்படி நாக்கூசாமல் பக்கத்து வீட்டுக் குழந்தை என்கிறீர்களே?'' என்று கத்துவதற்குத் தொண்டை வரைக் கும் வார்த்தைகள் வந்தன. ஆனால் நாவில் புரண்டு வெளியேறத் தெம்பில்லாமல் அவை நடுத் தொண்டையிலேயே அடைத்துக் கொண்டு நின்று விட்டன. அவரிடம் கத்த வாயேது எனக்கு?

காலை ஆறு மணிக்குக் குழந்தை கோகிலா பசியோடு 'அம்மா' என்று குரலெடுத்து அழுவது என்னவோ எங்கள் வீட்டில்தான். அதுவும் என்னருகே படுக்கையில் படுத்துக் கொண்டேதான். ஆனால் ஆறேகால் மணிக்கு 'ஸைன்கலித்த' மதர்ப்பில் விளையாடிக்கொண் டிருப்பது மட்டும் பக்கத்துப் போர்ஷன் கமலாவின் மடியில்!

குழந்தையின் அழுகுரல் கேட்டு ஓடி வந்து ''அக்கா, கோகிலா அழுகிறள். நான் எடுத் திட்டுப் போறேன்'' என்று அரைத் தூக் கத்திலிருக்கும் என்னிடமிருந்து கோகிலாவை எடுத்துக் கொண்டு போவாள் கமலா. மீண் டும் அவள் என்னிடம் குழந்தையை ஒப் படைப்பது இரவு எட்டு மணி சுமாருக்குத் தான். இதற்கிடையில் குழந்தை அப்போது ஒரு பத்து நிமிஷம், இப்போது ஒரு பதினைந்து நிமிஷம் என்று கொஞ்சக் கொஞ்ச நேரமாக என் கைப்பராமரிப்பில் இருக்கும் காலப் பிரமாணம் மொத்தத்தில் இரண்டு மணி நேரம் தேறலாம். மீதிப்போதெல்லாம் குழந்தையின் விலாசம், ''கோகிலா, மேல் பார்வை: கமலா, பக்கத்துப் போர்ஷன்'' தான்.

கமலா புதிதாகக் கல்யாணமாகிப் பக்கத் துப் போர்ஷனுக்குக் குடிவந்தவள். கல்யா ணத்துக்கு முன்னால் ஓர் ஆரம்பப் பள்ளியில் ஆசிரியையாக இருந்தவளாம். திருமண மான பின் வேலைக்குப் போகக் கணவன் அனு மதிக்கவில்லை. சின்னஞ் சிறு குழந்தை களுடன் பழகிய அனுபவ சுகமோ அல்லது எதிர்காலத் தாய்மைப் பேற்றுக்குத் தயா ராகும் தாபமோ, அந்த இளம் பெண் கமலாவிடம் கலந்து திரண்டு எங்கள் குழந்தை கோகிலாவின் பேரில் அன்பாகச் சுரந்தது.

ஆரம்பத்தில் பொழுதுபோக் காகச் சிறிது நேரம் கோகி லாவை எடுத்துக் கொண்டு போய் விளையாடிக் கொண் டிருப்பாள் கமலா. ஆனால் நாளடைவில் கோகிலாவின் பகல் பொழுதெல்லாம் பக்கத் துப் போர்ஷனிலேயே கழிய ஆரம்பித்தது. எனக்கு ஒரு வகை யில் அது நிம்மதி யாகவே இருந்தது. கோகிலா எனக்கு மூன்றாவது குழந்தை. எத்தனை யாவது குழந்தை யென்றாலும்தாய்க் குப் பாசம் மங்கா மலேதான் இருக்



ரும் என்றாலும் பராமரிப்பு விஷயத்தில் கொஞ்சம் அலுப்புத் தட்டத்தானே செய்யும். கைவேலையாக இருக்கும்போது யாராவது கொஞ்ச நேரம் குழந்தையை வைத்துக் கொள்ள மாட்டார்களா என்று தோன்றுதா? அந்தக் 'கௌரவ' உதவியைக் கமலா உற்சாகத்துடன் செய்தது எனக்குச் சௌகரியமாகவே இருந்தது.

ஆனால் அன்றைக்கொரு நாள் நடந்தது கொஞ்சம் ரசபேதமாகப் போய்விட்டது.

என் கணவரின் சிநேகிதர் ஒருவர் வீட்டுக்கு வந்திருந்தார். அப்போது குழந்தை கோகிலாவைப் பற்றிப் பேச்சு வந்தது.

''குழந்தை எங்கே? நான் பார்க்கவேயில்லையே?'' என்று கேட்டார் நண்பர்.

அப்போது குழந்தை கமலாவோடு பக்கத்து வீட்டில் விளையாடிக் கொண்டிருக்கவே குழந்தையை எடுத்து வரப் போனேன். என்னைக் கண்டதும் கோகிலா தாவியோடிக் கமலாவின் மடியில் உட்கார்ந்து கொண்டு 'நான் வரமாத்தேன் போ!' என்று பழிப்புக் காட்டினாள்.

''அக்கா! கோகிலா உங்ககிட்ட டூ! நீங்க அவளுக்குக் காலையிலே மருந்து கொடுத்தீங்களாம். இல்லே கோகிலா?'' என்று சந்தர்ப்பம் புரியாமல் கொஞ்சினாள் கமலா.

எனக்கு ஆத்திரம் ஒரு பக்கம், அவசரம் ஒரு பக்கம்.

''வாடி இங்கே. ஒரு புது மாமா உன்னைப் பார்க்கணும்னு கூப்பிடறார். சாக்லெட்டெல்லாம் வாங்கிண்டு வந்திருக்கார். தர்றேன் வா!'' என்று நயமும் பயமும் காட்டிக் குழந்தையைக் கவர முயன்றேன்.

''பொய் சொல்லறே! நீ சாக்லெட் தர மாட்டே! மருந்துதான் தருவே!'' என்று என் முகத்தில் அடித்தாற் போல் கூறிவிட்டுக் கமலாவின் தோளில் ஒன்றிக் கொண்டாள் குழந்தை.

கமலாவோ குழந்தையை இறுக அணைத்துக்கொண்டு சிரிக்க ஆரம்பித்து விட்டாள். எனக்குக் கமலா பேரில் ஏற்பட்ட எரிச்சலையும் சேர்த்துக் குழந்தையை ஓங்கி அறையத்தான் தோன்றியது. அறைவதற்குக் கையையும் ஓங்கி விட்டேன். சட்டென்று என் கையைப் பிடித்துக் கொண்டாள் கமலா.

''கமலா, கையை விடு'' என்று சீறினேன்.

''அது எப்படி விடுவது? என் கோகிலாக் கண்ணுவை அடிக்க ஓங்கிய கையைப் பிடிக்கத்தான் பிடிப்போம். தட்டிட்டீங்கன்னு பல்லால் கடிக்கவும் கடிப்போம்! அப்படித்தானே கோகிலா?'' என்று விளையாட்டுத்தனமாகக் கூறிய கமலா சட்டென்று தோளில் இருந்த குழந்தையை இடுப்பில் எடுத்து வைத்துக் கொண்டு, ''அக்கா வந்திருக்கிறவர் குழந்தையைப் பார்க்கணும். அவ்வளவுதானே! அதுக்காக நீங்க ஏன் அலட்டிக்கிறீங்க? நான் குழந்தையைக் கொண்டு வந்து காட்டறேன். அவங்க பார்க்கட்டும்'' என்று கூறியவாறு குழந்தையோடு எனக்கு முன்னால் நடந்தாள்.

கடைசியில் என் குழந்தை எங்கள் நண்பருக்குக் கமலாவின் இடுப்பில் இருந்து கொண்டுதான் தரிசனம் கொடுத்தது. நானோ ஒரு 'ஆயா'வைப் போல் கையைப்



பிசைந்து கொண்டு பக்கத்தில் நிற்க வேண்டியதாயிற்று.

மறு நாள் என் மானத்தை வாங்கிவிட்டார் என் கணவர். அலுவலகத்திலிருந்து வரும் போது ஒரு சிறிய பார்சலை என்னிடம் கொடுத்தவாறு, ''இதைப் பத்திரமாக வைத்துக் கொள். உனக்கு ரொம்பவும் உபயோகமாகக் கூடியது. உனக்காக ரொம்பக் கஷ்டப்பட்டுத் தயாரித்துக் கொண்டு வந்தேன்'' என்றார்.

'' என்ன இது ?''

''பிரித்துப் பார் '' என்றார் குறுஞ்சிரிப்புடன். பிரித்துப் பார்த்தேன். அழகாக நறுக்கப்பட்ட சிறிய அட்டைத் துண்டுகள் இரண்டு மூன்று இருந்தன. ஒவ்வொன்றிலும் 'நான்தான் கோகிலாவுக்கு அம்மா' என்ற எழுத்துக்கள் இருந்தன.

கேள்விக் குறியுடன் அவரைப் பார்த்தேன்.

அவர் கிண்டலாக, ''உனக்காகத்தான் வாங்கி வந்திருக்கிறேன். இப்போதைய நிலவரத்தில், இந்த அட்டையைக் கழுத்தில் மாட்டிக் கொண்டால்தான் யாரும் உன்னைக் 'கோகிலா'வுக்கு 'அம்மா'ன்னு ஒப்புக் கொள்வாங்க. சும்மா அவசரத் தேவைக்காக இப்போ அட்டையிலே செய்துட்டு வந்திருக்கேன். மாசம் பிறக்கட்டும். வெள்ளித் தகட்டிலே செய்து கொண்டு வருகிறேன். பத்து இருபது செலவானாலும் பரவாயில்லை. பாவம், பத்து மாசம் சுமந்து பெற்றவளாச்சே நீ! உன் அம்மா அந்தஸ்தைத் தகட்டிலே எழுதிக் காட்டியாவது நாலு பேர் முன்னாலே நிரூபிக்கப்புடுவோம். பயப்படாதே!'' என்றார்.

கணவர் இப்படி ஈரமில்லாமல் நிர்த்தாட்சிண்யமாகக் குத்திக் காட்டுகிறார் என்பதற்காகப் பெண்ணாகப் பிறந்த நான் கமலாவிடம் போய், 'என் குழந்தையைத் தொடாதே' என்று அநாகரிகமாகப் பேச முடியுமா ?

நான் 'அம்மா அந்தஸ்தை'ப் பற்றி அலட்டிக் கொள்ளவில்லை.

ஆனால் சதா ரோஷத்தைக் கிளறிக் கொண்டிருக்கும் என் கணவரின் வாயை எப்படித் திருப்திப்படுத்துவது? அதுதான் எனக்குப் பிரச்னையாக இருந்தது. திடீரென்று ஒரு வழி பிறந்தது.

அன்றொரு நாள் பக்கத்துப் போர்ஷனுக்கு ஒரு பெரும் விருந்தாளிகள் கூட்டம் வந்திருந்தது. அது என் பிரச்னையைத் தீர்க்கத் தோதாகத் தோன்றியது. அவர்கள் கமலாவின் தாய்வழி உறவுக்காரப் பட்டாளம். முழு டிக்கட்டுகளும், அரை டிக்கட்டுகளுமாகப் பெருங்கூட்டமாகப் படையெடுத்துப் பக்கத்துப் போர்ஷனை அடைத்துக் கொண்டிருந்தார்கள். அந்தக் கூட்டத்தைச் சமாளிக்கும் கெடுபிடியில் நிச்சயம் கமலாவுக்குக் கொஞ்ச நாட்களுக்குக் கோகிலாவின் பேரில் கவனம் ஏற்பட முடியாதல்லவா ? அதைப் பயன்படுத்தத் திட்டமிட்டேன். என் வேலைகள் என்னோடு என்று, விருந்தாளிகள் வந்த சாக்கில் குழந்தையைப் பக்கத்துப் போர்ஷன் பக்கம் போக விடாமல் நானே வைத்து விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தேன்.

என் கணவரிடமும் சொல்லிக்காட்டினேன். "கொஞ்ச நாட்களுக்குக் கோகிலாவின் பக்கம் கமலா வரமாட்டாள். நானும் அந்தப் பக்கம் விடவில்லை. குழந்தையும் மறந்திடுவாள். இப்போ உங்களுக்குத் திருப்தி தானே !" என்று.

அவர் சிரித்துக் கொண்டு, "அப்பாடா! நல்ல வேளை ! பக்கத்து வீட்டுக்கு விருந்தாளிகள் வந்தாலும் வந்தாங்க. நீயும் தப்பிப் பிழைக்கப் பழையபடி கோகிலாவுக்கு அம்மாவாயிட்டே!" என்றார்.

அவர் கூறி வாய் மூடவில்லை.

"அக்கா!" என்று அழைத்துக் கொண்டு வாசலில் வந்து நின்றாள் கமலா.

"என்னம்மா" என்றேன் துணுக்குற்று.

"காலையிலிருந்து கோகிலாவைக் காணுமே! எங்கே என் கோகிலாக் கண்ணு? நான் எடுத்துட்டுப் போறேன். கொண்டாங்க, குழந்தையை !"

"எதுக்கம்மா ? அங்கே உன் வீட்டில் ஆளும் பேருமா வந்திருக்கச்சே இவளும் வந்து ஊட்டி அடிப்பாள். உனக்கு வீணாகத் தொந்தரவு" என்று குழந்தையைக் கொடுக்காமலேயே தட்டிக் கழிக்க முயன்றேன்.

ஆனால் கமலா விடவில்லை. "நல்லா இருக்கு ! அங்கே இருக்கிற நாலு குழந்தைகளோடு அஞ்சாவதாக என் கோகிலாக் கண்ணும் இருந்து விளையாடிட்டுப் போறா! எனக்கு அவளும் இருந்தால்தான் நிறைவாக இருக்கும்!" என்று கூறி என் மறுமொழியையே எதிர்பார்க்காமல் குழந்தையை என்னிடமிருந்து பிடுங்காத குறையாகத் தூக்கிச் சென்று விட்டாள்.

"பார்த்தயா, 'என் கோகிலாக் கண்ணு'ன்னு தூக்கிக்கிட்டுப் போறாள். பாவம், உனக்குக் கிடைத்த ஒரே சந்தர்ப்பமும் போச்சு. இனிமேல் உனக்கு வேறே வழியில்லே. நான் வாங்கிட்டு வந்த அட்டையை மாட்டிக்க வேண்டியதுதான் ! இல்லாட்டி காலப் போக்கில் எனக்கே நீதான் கோகிலாவுக்கு அம்மாவான்னு சந்தேகம் வந்தாலும் வந்து விடும்" என்றார் அவர்.

வாய் திறக்க வழியில்லாமல் தவித்தேன்.

அரை மணி நேரம்தான் ஆகியிருக்கும்.

திடீரென்று பக்கத்து வீட்டிலிருந்து கமலா என்னை அழைத்த குரல் கேட்டது.

"அக்கா...அக்கா கொஞ்சம் உங்க கோகிலாவை எடுக்க வாருங்கள் சீக்கிரம் !"

கமலாவின் குரல்தான்! 'உங்க கோகிலா' என்கிறாளே, அதிசயமாக? என் கணவரே வியப்பை அடக்க முடியாமல், "என்ன ஆச்சரியமா இருக்கே! 'உன் கோகிலா'ன்னு பரபரப்பாக் குரல் கொடுக்கிறாளே!" என்றார்.

"என்ன கமலா என்ன?" என்று அவசரமாக எழுந்து வாசலுக்கு விரைந்தேன்.

"அக்கா, எல்லோரும் சாப்பிட உட்கார விருந்தாங்க. அதற்குள் உங்க பொண்ணு ஒரு வேலை செய்து விட்டாள். கொஞ்சம் சீக்கிரம் வாருங்கள்."

ஐந்து நிமிஷங்கள் கழித்துக் குழந்தையைக் கொஞ்சிக் கொண்டே நான் என் வீட்டுக்குள் நுழைந்தேன்.

என்னையும் குழந்தையையும் பார்த்து முறுவலித்தார் என் கணவர். அது அவருடைய தோல்விச் சிரிப்பு.

நான் பெருமிதம் பொங்க, "இப்போது புரிந்ததா உங்களுக்கு? குழந்தையின் சிரிப்போடு சிரித்து, அதன் விளையாட்டோடு விளையாடி அந்தக் குழந்தை இன்பத்தை மற்றவர்கள் யார் வேண்டுமானாலும் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் அநுபவிக்கலாம். குழந்தையினால் வரும் இன்பத்தை மட்டும் பெறுபவர்கள் அவர்கள். ஆனால் குழந்தை கொடுக்கும் பெரிய தொல்லையிலிருந்து சிறிய தொல்லை வரையில் அத்தனைச் சிரமங்களையுமே இன்பமாக ஏற்றுக் கொள்ளுகிற தனிக் கௌரவம் அந்தத் தாயார் ஒருத்திக்குத்தான். மற்ற யாருமே அதைத் தாங்க மாட்டார்கள். அந்தத் தாய்மையின் உன்னத அந்தஸ்து மற்றவர்களால் நினைத்துப் பார்க்கவும் முடியாதது. தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொல்லி என் வெற்றிக்கு விழாக் கொண்டாடினேன்.

டவல் ஒன்றை எடுத்துத் தந்து, "பச்சைத் தண்ணீரை விட்டுக் கழுவினாயே...? குழந்தையின் காலெல்லாம் ஈரமாயிருக்கு. சீக்கிரமாத் துவட்டு...." என்று என்னை அவசரப்படுத்தினார், தொல்லைகளுக்குப் பாத்யதைப்பட்ட அடுத்த பங்காளியான 'அவர்!'

"சாப்பாட்டுக்கு உட்காரவிருந்த அத்தனை பேரையும் அஞ்சு நிமிஷம் நிறுத்தி வச்சுட்டாளே, எங்கள் கோகிலா !" என்று குழந்தையின் அந்தக் காரியத்தில் பெருமைப் பட்டுக் கொண்டோம், நாங்கள். அது நாங்கள் இருவரும் மட்டுமே 'பெருமைப் பட்டுக் கொள்ளக்கூடிய சமாசாரம்!

## ஸ்ரீ எல்லம்மனின் ஆலயத் திருப்பணி

சென்னை, திருவல்லிக்கேணி, சுந்தர மூர்த்தி விநாயகர் கோவில் தெருவில், கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஆலயத்தில் சர்வசித்தி விநாயகப்பெருமான், முருகப்பெருமான், காசி விசுவநாதர், விசாலாட்சியம்மன், சைவசமயாசாரியர்கள் முதலான உருவங்களும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன. மிகப் பழமையான ஸ்ரீ எல்லம்மன் திருக்கோவிலில் பழுது பார்க்க வேண்டிய பணிகள் ஏராளமாக உள்ளன. அவற்றைச் சிறப்பாகச் செய்து முடித்துக் கும்பாபிஷேகமும் நடத்துவதாக ஸ்ரீ எல்லம்மன் தேவஸ்தானத் திருப்பணிக் குழுவினர் தீர்மானித்திருக்கின்றனர்.

தேவி பக்தர்கள் அனைவரும் தாராளமாகப் பொருளுதவி செய்து கும்பாபிஷேகம் சிறப்பாக நடக்க உதவி செய்து அன்னை பராசக்தியின் பரிபூரண திருவைக்குப் பாத்திரர்களாகுமாறு வேண்டுகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய விலாசம்:


திரு ஏ. எம். சம்பந்தம்
துணைத் தலைவர்
372, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை-5

# மகாபாரதம்

ராஜாஜி



"என் பார்த்தா இருக்கும் உலகத்துக்குப் போக நான் விரும்புகிறேன். காந்தாரியுடன் வனத்தில் வசித்துத் தவம் செய்து நான் உங்கள் தகப்பனாரைச் சேர்வேன். நீ திரும்பிச் செல். நகரத்துக்குப் போ. உன் மனம் எப்போதும் தருமத்தில் நிலைத்து நிற்கட்டும்" என்று மகனை ஆசிர்வதித்தான்.

யுதிஷ்டிரன் பேச்சில்லாமல் நின்றான். அவனையும் மற்ற புத்திரர்களையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே குந்தி வனம் சென்றாள்.

ஒருவர் தோள் மேல் ஒருவர் கை வைத்து ஊன்றிக் கொண்டு அந்த மூன்று விருத்தர்களும் வனம் போன இந்தச் சித்திரம் நேற்று நம் வீட்டில் நடந்த ஒரு சோக நிகழ்ச்சி போல் இருக்கிறது.

மூன்று வருஷங்கள் திருதராஷ்டிரனும் காந்தாரியும் குந்தியும் வனத்தில் கழித்தார்கள். பிறகு ஒரு நாள் திருதராஷ்டிரன் ஸ்நானம் செய்து விட்டு ஆசிரமத்துக்குச் சென்றான். அப்போது காடு தீப்பற்றிக் கொண்டது. காற்றடித்து வனம் முழுவதும் நெருப்புப் பரவிற்று. மான்களும் காட்டுப் பன்றிகளும் கூட்டம் கூட்டமாக ஓடித் தடாகத்தை அடைந்தன.

கூட இருந்த சஞ்சயனை நோக்கி, "நீ இந்த அக்கினியினின்று ஓடித் தப்புவாயாக!" என்று சொல்லிவிட்டுக் கண்ணில்லாத கிழ அரசனும் கண்ணை வஸ்திரத்தால் கட்டி மறைத்துக் கொண்டிருந்த காந்தாரியும் குந்தி தேவியும் கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டு யோக நிலையில் அமர்ந்து நெருப்புக்கு இரையானார்கள்.

திருதராஷ்டிரன் மறைந்ததும் அவனுக்குக் கண்ணும் உயிருமாக இருந்த சஞ்சயன் துறவு பூண்டு இமய மலை சென்றான்.

## 106. கண்ணன் மறைந்தான்

பாரத யுத்தம் முடிந்தபின் துவாரகையில் கிருஷ்ணன் முப்பத்தாறு ஆண்டுகள் அரசாண்டான். கிருஷ்ணனுடைய குலத்தைச் சேர்ந்த விருஷ்ணிகள், அந்தகர்கள், போஜகர்கள் என்ற பல பெயர்கள் கொண்ட யாதவ குமாரர்கள் வரம்பு கடந்த சுகத்தில் காலம் கழித்து வந்தார்கள். அவ்வாறு நடத்திய சுக வாழ்க்கையினால் அடக்கமும் ஒழுக்கமும் இழந்தார்கள்.

ஒரு நாள் சில ரிஷிகள் துவாரகைக்கு வந்தார்கள். அப்போது பெரியவர்களிடம் அலட்சியம் கொண்ட யாதவர்கள், ரிஷிகளைப் பரிகசிப்பதற்காகத் தங்களுக்குள் ஒருவனுக்குப் பெண் வேஷம் போட்டு முனிவர்களிடம் சென்று, "சாஸ்திரம் படித்தவர்களே! இந்தப் பெண்ணுக்கு என்ன குழந்தை பிறக்கும் சொல்லுங்கள்?" என்றனர்.

ரிஷிகள் இந்தப் பொய்யையும் பரிகாசத்தையும் கண்டு கோபம் மேலிட்டு, "இவனுக்கு உலக்கை பிறக்கும். அந்த உலக்கை உங்கள் குலத்துக்கு யமனாகும்" என்று சபித்து விட்டுத் திரும்பிப் போய்விட்டார்கள். முனிவர்களின் சாபத்தைக் கேட்டு, வேடிக்கையாகச் செய்தது இப்படி ஆயிற்றே என்று யாதவர்கள் பயந்தார்கள். மறு நாள் ரிஷிகள் சொன்னபடியே ஸ்திரீ வேஷம் தரித்த சாம்பன் பிரசவ வேதனை அடைந்து ஒரு உலக்கை உண்டாயிற்று. இதைக் கண்டு ரிஷிகள் சாபம். உண்மையாகவே முடியும் என்று யாதவர்கள் மிக்க மன வேதனை அடைந்தார்கள். உலக்கையை யம சொரூபமாகக் கருதினார்கள். எல்லோரும் சேர்ந்து ஆலோசனை செய்து உலக்கையை எடுத்துச் சுட்டுச் சாம்பலாக்கிவிட்டுக் கடற்கரையில் இறைத்து விட்டார்கள்.

அடுத்த வருஷம் அந்தச் சாம்பலின் மேல் மழை பெய்து அந்த இடத்தில் கோரைப் புல் ஏராளமாக முளைத்தது. தங்களுடைய பயம் தீர்ந்து விட்டது என்று யாதவர்கள் சாபத்தை மறந்தார்கள்.

பிறகு ஒரு நாள் யாதவர்கள் கூட்டமாகக் கடலோரம் சென்று உல்லாசமாகக் கூத்திலும் மதுபானத்திலும் காலம் கழித்தார்கள். கள்ளினுடைய வேகம் வேலை செய்ய ஆரம்பித்தது.

யாதவ குலத்தில் கிருதவர்மன் கௌரவர்கள் பக்கத்திலும் சாத்யகி பாண்டவர்கள் பக்கத்திலும் சேர்ந்து யுத்தம் செய்தார்கள் அல்லவா?

''எந்த க்ஷத்திரியனாவது தூங்குகிறவர்களைக் கொல்வானா? ஓய் கிருதவர்மரே! யாதவ குலத்துக்கே ஒரு பெரிய அவமானத்தைக் கொண்டு வந்து விட்டாயே!'' என்று சாத்யகி கிருதவர்மனைப் பார்த்துப் பரிகாசம் செய்தான். போதையிலிருந்த மற்றும் பலர் இந்தப் பரிகாச வார்த்தையை ஆமோதித்தனர். கிருதவர்மனுக்குக் கடுங் கோபம் வந்து விட்டது.

''யுத்தத்தில் கை அறுக்கப்பட்டு) பிராயோபாவேசம் செய்து யோக நிலையில் இருந்த மகான் பூரிசிரவசு வைக் கசாப்புக் காரனைப் போல் கொன்ற நீ என்னைப் பற்றி எப்படிப் பேசலாம்?'' என்றான் கிருதவர்மன். அதன்மேல் வேறு பலர் சாத்யகி செய்த அநாகரிகத்தை எடுத்துப் பேச ஆரம்பித்தார்கள். பிறகு எல்லா யாதவர்களும் கலகத்தில் சேர்ந்து கொண்டார்கள். சண்டை பலமாக முற்றிக் கொண்டது.

''தூங்கியிருந்தவர்களைக் கொன்ற பாதகன் இதோ பார்! தன் முடிவை அடைந்தான்'' என்று சொல்லி சாத்யகி கிருதவர்மன் பேரில் பாய்ந்து கத்தியால் அவன் தலையை வெட்டி வீழ்த்தி விட்டான்.

அதைக் கண்டு பலர் சாத்யகியைச் சூழ்ந்து கொண்டு அங்கிருந்த பான பாத்திரங்களை அவன் மேல் எறிந்து தாக்கினார்கள். இவ்வாறு சாத்யகியைச் சூழ்ந்து கொண்டு தாக்கியவர்களைக் கிருஷ்ணன் மகன் பிரத்யும்னன் எதிர்த்துப் போராடினான். அவனைப் பலர்



சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். பிரத்யும்னனும் சாத்யகியும் உயிரிழந்தார்கள், அதன்பேரில் கிருஷ்ணனுக்குக் கோபம் மேலிட்டு அவ்விடம் கடலோரத்தில் வளர்ந்திருந்த கோரைப் புல்லைப் பிடுங்கி எடுத்து அதைக் கொண்டு எல்லோரையும் தாக்கினான். அவ்வாறே யாதவ கூட்டத்தார் எல்லோரும் கோரைப் புல்லைப் பிடுங்கி ஒருவரை யொருவர் அடித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

உலக்கைச் சாம்பலிலிருந்து உண்டான அந்தக் கோரைப் புல் எல்லாம் ரிஷிகளுடைய சாபத்தால் பிடுங்கிய உடனே உலக்கைகளாயின. அந்த உலக்கைகளால் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு யாதவ குலம் முழுவதும் கள் வெறியில் நடந்த இந்த இழிவான கலகத்தில் மாண்டார்கள்.

இதையெல்லாம் கண்ட பலராமன் துயரம் மேலிட்டு யோகத்தில் அமர்ந்து உயிரை நீத்தான். வெள்ளைப் பாம்பு வடிவத்தில் அவன் முகத்திலிருந்து ஜோதி புறப்பட்டுக் கடலில் மறைந்தது. பலராமனுடைய அவதாரம் முடிந்தது.

பந்துக்கள் அனைவரும் ஒருவரும் மிஞ்சாமல் நாசமடைந்து சகோதரனும் மறைந்ததைப் பார்த்த கிருஷ்ணன் தியானத்தில் மூழ்கினான். பிறகு தன்னந் தனியனாகக் கடற் கரை வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். நடந்ததையெல்லாம் எண்ணித் தானும் இந்த உலகை விட்டு மறையும் காலம் வந்தது என்று அறிந்து, தரையில் படுத்தான். அப்படியே தூங்கிப் போனான்.

அப்போது அந்தக் காட்டில் மிருகங்களைத் தேடித் திரிந்த வேடன் ஒருவன் படுத்திருந்த வாசுதேவனைத் தூரத்திலிருந்தே பார்த்து அது மான் என்று எண்ணி வில்லை வளைத்து அம்பு எய்தான்.

அம்பு கிருஷ்ணனின் உள்ளங்காலில் புகுந்து உயிரைத் தூக்கிச் சென்றது. மகோன்னதப் புகழைப் பெற்ற கிருஷ்ணன் மறைந்தான்.

## 107. தர்மபுத்திரன்

**யா**தவர்களின் முடிவைப் பற்றியும் மாதவன் மறைந்து போனதைப் பற்றியும் அஸ்தினபுரத்துக்குச் செய்தி வந்தது.

அதைக் கேட்டதும் பாண்டவர்களுக்கு உலக வாழ்க்கையில் இருந்த பற்று முற்றிலும் போய்விட்டது. அபிமன்யுவின் குமாரனை பரீக்ஷித்துக்கு முடிசூட்டி விட்டு ஐவரும் திரௌபதியின் நகரத்தை விட்டுப் புறப்பட்டுப் பாத யாத்திரை சென்றார்கள். பல இடங்களுக்குப் போய் முடிவில் இமய மலையை அடைந்தார்கள். அப்போது அவர்களுடன் ஒரு நாயும் சேர்ந்து சென்று கொண்டிருந்தது. மலை ஏறிச் செல்லும்போது ஒருவர் பின் ஒருவராகத் திரௌபதியும் தம்பிகளும் விழுந்து உயிர் நீத்து உடல் பாரத்தினின்று விடுபட்டு மறைந்து போனார்கள். தம்பிகளும் மனைவியும் வீழ்ந்து மரித்ததைப் பார்த்து மெய்ப்பொருளைக் கண்ட தரும புத்திரன் மனம் தளராமல் சென்றான். யுதிஷ்டிரனுக்கு நாய் மட்டும் துணையாகச் சென்றது. மனிதனுக்குத் துணை தருமம் ஒன்றே என்பதற்கு இந்தக் கதை வியாசரால் அமைக்கப் பட்டிருக்கிறது. நாய் உருவத்தில் தருமம் யுதிஷ்டிரன் கூடச் சென்றது. வெகு தூரம் போன பின் இந்திரன் ரதத்துடன் வந்து யுதிஷ்டிரன் முன் நின்றான்.

''உன் தம்பிகளும் திரௌபதியும் சுவர்க்கம் வந்து சேர்ந்து விட்டார்கள். நீமட்டும் எஞ்சி நிற்கிறாய். தேகத்துடன் ரதத்தில் ஏறு. உன்னை அழைத்துப் போகவே வந்தேன்'' என்றான்.

யுதிஷ்டிரன் தேரில் ஏறப் போகும் போது நாயும் ஏறப்போயிற்று. ''சுவர்க்கத்தில் நாய்க்கு இடமேது?'' என்று இந்திரன் நாயைத் தடுத்தான்.

யுதிஷ்டிரன், ''அப்படியாயின் எனக்கும் இடமில்லை'' என்று கூட வந்த நாயை விட்டுச் செல்ல மறுத்து விட்டான். யுதிஷ்டிரனைச் சோதிக்கவே நாயாக வந்த தரும தேவதை தன் புத்திரனுடைய உறுதியைக் கண்டு மகிழ்ந்து மறைந்தது.

யுதிஷ்டிரன் சுவர்க்கம் அடைந்தான், சுவர்க்கத்தில் தருமபுத்திரன் முதலில் துரியோதனனைக் கண்டான். அந்தக் கௌரவன் சூரிய தேஜஸுடன் பிரகாசித்துக் கொண்டு அழகிய ஆசனத்தில் வீற்றிருப்பதையும் அவனைச் சூழ்ந்து வீர லட்சுமியும் தேவர்களும் நிற்பதையும் கண்டான். யுதிஷ்டிரன் அங்குள்ளவர்களை நோக்கி, ''பேராசை

யுள்ளவனும் குறுகிய திருஷ்டியுள்ளவனுமான துரியோதனன் இருக்கும் இடத்தில் நான் இருந்து காலம் கழிக்க விரும்பவில்லை. எங்களைப் படாத பாடு படுத்திய இவன் செய்த காரியங்களின் பயனுகச் சிநேகிதர்களையும் பந்துக்களையும் கொன்ருேம். தருமத்தை அனுஷ்டித்த எங்கள் பத்தினி பாஞ்சாலி இவன் உத்தரவினுல் சபை நடுவே இழுக்கப்பட்டு அவமானப்படுத்தப்பட்டாள். இந்தத் துரியோதனனைப் பார்க்க எனக்குப் பிடிக்கவில்லை. என்னுடைய தம்பிகள் எங்கே? அவர்கள் இருக்கும் இடத்துக்குச் செல்ல நான் விரும்புகிறேன்'' என்று சொல்லி அங்கிருந்து திரும்பினுன்.

எல்லாம் அறிந்த தேவ ரிஷியான நாரதர் யுதிஷ்டிரனைப் பார்த்துச் சிரித்து, ''ராஜசிரேஷ்டனே! இவ்விதம் சொல்லலாகாது. சுவர்க்கத்தில் விரோதம் என்பது கிடையாது. துரியோதனனைப் பற்றி இந்த வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம். வீரனுன துரியோதனன் க்ஷத்திரிய தருமத்தின் சக்தியால் இந்தப் பதவியை அடைந்திருக்கிருன். மகனே! தீர்ந்து போன நிகழ்ச்சிகளை மனத்தில் பதிய வைத்துக் கொள்ளக் கூடாது. முறைப்படி துரியோதன ராஜாவுடன் இங்கே இரு. இங்கு விரோதங்களுக்கு இடமில்லை. மானிட தேகத்தோடு நீ வந்திருக்கிறபடியால், இவ்வாறு உனக்குத் தவருன எண்ணங்கள் உண்டாகின்றன. அவற்றை அகற்று!'' என்று சொன்னுர்.

இதைக் கேட்ட யுதிஷ்டிரன், ''பிராமணரே! தருமத்தை அறியாதவனும் பாவியும் நல்லோருக்குத் தீமையைச் செய்தவனும் பகையும் கோபமும் வளரச் செய்தவனும் கணக்கிறந்த ஜனங்களை அழியச் செய்தவனுமான துரியோதனனுக்கு இந்த வீர சுவர்க்கம் கிடைத்திருக்கிறது. சூரர்களும் சீலர்களுமான என்னுடைய சகோதரர்களும் திரௌபதியும் என்ன கதி அடைந்திருக்கிருர்கள்? அவர்களையும் கர்ணனையும் இன்னும் எனக்காக உயிர் நீத்த என் நண்பர்களான ராஜாக்களையும் இங்கே காணவில்லை. நான் அவர்களைப் பார்க்க விரும்புகிறேன். விராடனையும் துருபதனையும் திருஷ்டகேதுவையும் பாஞ்சால குமாரன் சிகண்டியையும் திரௌபதியின் புத்திரர்களையும் சூரன் அபிமன்யுவையும் பார்க்க விரும்புகிறேன். அவர்கள் இங்கே என் கண்ணுக்குத் தென்படவில்லையே? என் நிமித்தம் யுத்தமாகிற வேள்வித் தீயில் தங்கள் சரீரங்களை எரித்து மாண்ட அந்த வீரர்களை நான் இங்கே காணவில்லை. அவர்கள் எல்லோரும் எங்கே? அவர்கள் இருக்கும் இடத்தில் வசிக்க விரும்புகிறேன். என் தாய் குந்தி, கர்ணனுக்கும் ஜல தர்ப்பணம் செய் என்ருள். அதை நினைக்கும்போது இப்போது எனக்குத் துக்கம் மேலிடுகிறது. கர்ணன் யார் என்பதை நான் அறியாமல் என்னுல் சாகடிக்கப்பட்டான். அவனைப் பார்க்க விரும்புகிறேன். எனக்கு உயிரைக் காட்டிலும் பிரியனுன பீமனையும் தேவராஜனுக்கு ஒப்பான அருச்சுனனையும் நகுல சகதேவர்களையும் எப்போதும் தரும நெறியில் நின்றவளான பிரிய பாஞ்சாலியையும் பார்க்க விரும்புகிறேன். இந்த இடத்தில் இருக்க எனக்கு உண்மையில் முடியவில்லை. பக்கத்தில் பிராதாக்கள் இல்லாமல் நான் சுவர்க்கத்தில் இருந்து என்ன பயன்? அவர்கள் எங்கே இருக்கிருர்களோ அதுதான் சொர்க்கம். இது சுவர்க்கமல்ல என்பது என் கருத்து'' என்று சொன்னுன்.

இதைக் கேட்ட தேவர்கள், ''யுதிஷ்டிரரே! உமக்கு அவர்களிடம் போக விருப்பமானுல் தாமதிக்க வேண்டாம். போகலாம்'' என்று தேவ தூதனைப் பார்த்து யுதிஷ்டிரனை அழைத்துப் போகக் கட்டளை யிட்டார்கள்.

முன்னுல் தேவ தூதனும் பின்னுல் யுதிஷ்டிரனுமாகப் போனுர்கள். போன மார்க்கத்தில் இருள் சூழ்ந்து கொண்டது. ஓரளவு கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் பயங்கரமாக இருந்தது.

வழியெல்லாம் மாமிசமும் உதிரமும் கலந்த சேறு; பிணங்களும் எலும்புகளும் மயிரும் நாற்புழுவும் கிடந்தன. எங்கும் புழுக்கள். சகிக்க முடியாத துர்நாற்றம் வீசிற்று. கைகளும் கால்களும் வெட்டப்பட்டு ஆங்காங்கு மனிதர்கள் விழுந்து கிடந்தார்கள். இதையெல்லாம் பார்த்துத் தருமாத்மாவான யுதிஷ்டிரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. பலவாருக ஆலோசனை செய்து கொண்டே போனுன்.

''இந்த மார்க்கத்தில் எவ்வளவு தூரம் போக வேண்டும்? என்னுடைய சகோதரர்கள் எங்கே இருக்கிருர்கள்?'' என்று தேவதூதனைப் பார்த்துக் கேட்டான்.

''திரும்பிப் போக வேண்டுமானுலும் போகலாம்'' என்ருன் தேவ தூதன்.

துர்நாற்றத்தைச் சகிக்க முடியாமல் யுதிஷ்டிரன் திரும்ப மனம் கொண்டான். அந்தச் சமயத்தில் நாற்புறமிருந்தும் தீன ஸ்வரங்கள் கிளம்பின.

''ஓ, தரும புத்திரரே! போய்விட வேண்டாம். எங்களை அனுக்கிரகிக்க ஒரு முகூர்த்தமாவது நில்லும். நீர் வந்தபோது நல்ல மணம் நிறைந்த புண்ணியமான காற்று எங்கள் பேரில் வீசிற்று. அதனால் எங்களுக்கு ஆறுதலும் சுகமும் உண்டாயிற்று. குந்தி குமாரரே! நாங்கள் உம்மைப் பார்த்துக் கொண்டிருந்தாலே கொஞ்சம் சுகம் பெறுவோம். ஒரு முகூர்த்த காலமாவது நில்லும். நீர் இருக்கும் வேளை எங்களைப் பீடிக்கும் வாதனை கொஞ்சம் ஓய்கிறது'' என்று அந்தக் குரல்கள் அழுதன. இவ்வாறு தீன வசனங்கள் நாலாபுறமும் எழுந்ததைக் கேட்ட யுதிஷ்டிரன், ''ஆ! கஷ்டம்!'' என்று சொல்லிக் கொண்டு நின்றான். குரல்கள் ஏதோ தெரிந்த குரல்களாகவே அவனுக்குத் தோன்றிற்று. ''நீங்கள் யார்? எதற்காக இங்கே இருக்கிறீர்கள்?'' என்று சோகம் மேலிட்டுக் கேட்டான்.

''பிரபுவே, நான் கர்ணன்!'' என்றது ஒரு குரல். ''நான் பீமசேனன்'' என்றது மற்றொரு குரல். ''நான் அருச்சுனன்'' என்றது வேறொன்று. ''திரௌபதி'' என்றது ஒரு தீனமான ஸ்வரம். ''நான் நகுலன்'', ''நான் சகாதேவன்'', ''நாங்கள் திரௌபதி புத்திரர்கள்'' என்று இவ்விதம் நாலாபுறங்களிலும் குரல்கள் கிளம்பியதைக் கேட்டான்.

தாங்க முடியாத சோகத்தால் பீடிக்கப்பட்ட யுதிஷ்டிரன், ''இவர்கள் என்ன பாப கருமங்கள் செய்தார்கள்? திருதராஷ்டிர புத்திரனை துரியோதனன் என்ன புண்ணியம் செய்து மகேந்திரனைப் போல் சுவர்க்கத்தில் இருக்கிறான்? இவர்களோ நரகத்தை அடைந்திருக்கிறார்கள்? நான் தூங்குகிறேனா? விழித்துக் கொண்டிருக்கிறேனா! பிரக்ஞை இழந்தேனா? இது சித்த விகாரமா?'' என்று சொல்லிக் கடுஞ் சினங் கொண்டு தேவர்களையும் தருமத்தையும் நிந்தித்தான். தேவ தூதனைப் பார்த்து,

''நீ எவர்களுடைய தூதனோ, அவர்களிடம் சொல். நான் வர மாட்டேன். நான் இவ்விடத்திலேயே வசிப்பேன். என்னை அடுத்தல்லவோ என்னுடைய பிரிய சகோதரர்கள் இங்கே நரகத்தில் பீடிக்கப்பட்டுக் கிடக்கிறார்கள். நானும் இங்கேயே இருப்பேன்'' என்றான்.

யுதிஷ்டிரன் இவ்வாறு சொல்லியதும் தூதன் இந்திரனிடம் சென்று யுதிஷ்டிரன் சொன்னதைத் தெரிவித்தான்.

ஒரு முகூர்த்த காலம் கழிந்த பின் இந்திரனும் யமதேவனும் யுதிஷ்டிரன் இருந்த இடம் வந்தார்கள். அவர்கள் வந்ததும் இருள் விலகிவிட்டது. பயங்கரமான காட்சிகளும் மறைந்தன. புண்ணிய வாசனையுள்ள சுகமான காற்று வீசிற்று. தரும தேவதையாகிய யமன் தன்னுடைய புத்திரனை யுதிஷ்டிரனைப் பார்த்து, ''சிறந்த மதிமானே! என்னால் நீ சோதிக்கப்பட்டது இது மூன்றாவது தடவை. பிராதாக்களின் நிமித்தம் நீ நரகத்திலேயே இருக்க விரும்பினாய். அரச பதவி பெற்று உலகம் பரிபாலித்தவர்கள் எல்லோரும் அவசியம் நரகம் பார்க்க வேண்டும். ஆகையால் ஒரு முகூர்த்த காலம் உன்னாலும் இந்தப் பெரிய துக்கம் அனுபவிக்கப்பட்டது. புகழ் பெற்ற வீரன் சவ்யசாசியாவது உன் அருமைத் தம்பி பீமனாவது சத்தியவான் கர்ணனாவது யாருமே உண்மையில் நரகத்தை அடையவில்லை. இது உன்னைச் சோதிக்கச் செய்த ஒரு மாயம். இது தேவலோகம். இதோ பார். மூவுலகங்களிலும் செல்லும் தேவரிஷி நாரதர்! துக்கப்படாதே!'' என்றார்.

பிறகு யுதிஷ்டிரன் மானிட தேகத்தை விட்டு திவ்வியமான சரீரத்தைப் பெற்றான்.

அதனுடன் மனிதப் பிறப்புக்குரிய பகையும் மன வருத்தங்களும் அற்றவனாகப் பூரண பரிசுத்தம் அடைந்தான்.

தேவர்களாலும் ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்டு கர்ணனும் தம்பிகளும் திருதராஷ்டிர குமாரர்களும் கோபம் தீர்ந்து தெய்வ நிலை அடைந்திருப்பதையும் யுதிஷ்டிரன் கண்டு சாந்தி அடைந்தான்.



ஓம் :

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

AM-75-MAC(B)

# நீங்கள் செலுத்தும் பணத்திற்கு முழு பலனைப்பெற

# ஆம்கோ

## சில்வர் கோபால்டு பாட்டரிகளையே வாங்குங்கள்

AMCO

Silver Cobalt

BATTERIES




நீண்டகால அனுபவமும், நவீன தொழில் நுணுக்கங்களும், ஆம்கோ பெற்றிருப்பதால், ஆட்டோமோபைல் பாட்டரிகளிலேயே சிறந்த பாட்டரிகளை உங்களுக்கு வழங்க முடிகிறது.

ஆம்கோ பாட்டரியின் சிறப்பு அம்சங்கள்: தரமான நீடித்த உழைப்பு. விரைவில் பழுதடைவதில்லை. நம்பகமானது. அதன் ஆயுட்காலம் முழுவதும் விரைவில் செயலாற்றும் திறன் பெற்றது.

**ஆம்கோ பாட்டரிஸ் லிமிடெட், பெங்களூர்.**

1933ல் தோன்றிய ஆம்கோ ஒவ்வொரு ஆண்டும் சிறப்பாக வளர்ந்து கொண்டிருக்கிறது
மோட்டார் வாகனங்களுக்குத் தேவையான பாட்டரிகளை தயாரிக்கும் ஐக்கிய அமெரிக்க
ஸ்தாபனமாகிய **கோல்டு நேஷனல் பாட்டரியுடன் (Inc. U.S.A.)**
தொழில் நுணுக்க கூட்டுறவு செய்து கொண்டு பாட்டரிகளை தயார் செய்கின்றது.